# வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத் துறை

# கொள்கை விளக்கக் குறிப்பு

# 2020 – 2021

| | | |
|---|---|---|
| மானியக் கோரிக்கை எண்.41 | – | வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத்துறை |
| மானியக் கோரிக்கை எண்.51 | – | இயற்கைச் சீற்றங்கள் குறித்த துயர் தணிப்பு |

## ஆர்.பி. உதயகுமார்

வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மை

மற்றும்

தகவல் தொழில் நுட்பவியல் துறை அமைச்சர்

# பொருளடக்கம்

# கொள்கை விளக்கக் குறிப்பு 2020-2021

## 1. முன்னுரை

வருவாய்த்துறை மாநிலத்தின் நிருவாக அமைப்புக்கு முதுகெலும்பாக விளங்குகிறது. அனைத்து நிருவாகத் துறைகளுக்கும் தாய்த்துறையாக வருவாய்த்துறை கருதப்படுகிறது. இத்துறை குடிமக்களின் அன்றாட வாழ்க்கையில் அனைத்து அம்சங்களிலும் இரண்டற கலந்து பயனளிக்கிறது. சீரான சமூக வளர்ச்சிக்கு இத்துறையின் பங்கு அளவிடற்கரியது. சாமானிய மனிதனின் அன்றாடத் தேவைகளை பூர்த்தி செய்வதில் வருவாய்த் துறையின் பங்களிப்பு இன்றியமையாததாகும். மாநிலத்தில் உள்ள நிருவாக அமைப்புகளில் வருவாய்த்துறை மிகவும் பழமையானதும் பெருமைக்குரியதும் ஆகும். வருவாய்த்துறை குக்கிராமத்திலும், கிராமத்திலும், மாநிலத்திலும் முழுமையான கட்டமைப்பினை கொண்டுள்ளதால் சமூகப் பாதுகாப்புத் திட்டங்களை திறம்பட செயல்படுத்த முடிகிறது.

இத்துறை மாநிலம் முழுமைக்கும் நகரம் முதல் கிராமம் வரை நன்கு வரையறுக்கப்பட்ட நிர்வாக அமைப்பினை கொண்டுள்ளது. ஆதலால் அரசின் பல்வேறு சமூக பொருளாதார திட்டங்களும் இத்துறையின் மூலம் செயல்படுத்தப்படுகிறது. பெரும்பான்மையான துறைகள் வருவாய்த்துறையிலிருந்தே உருவாக்கப்பட்டதால் அவற்றின் செயல்பாடுகள் இத்துறையினை சார்ந்துள்ளது மட்டுமின்றி மாவட்டத்தில் நிலம்

மற்றும் இதர திட்டங்களை மாவட்ட ஆட்சியர் மற்றும் வருவாய் அலுவலர்கள் மூலமும் செயல்படுத்துவதினால் வருவாய்த்துறை முக்கியமான துறையாக விளங்குகிறது.

இத்துறை அரசின் உடமைகளான நிலம், நீர்நிலை, கனிமம் மற்றும் புதையல் ஆகியவற்றிற்கு பாதுகாவலனாக இருந்து வருகிறது. விவசாயிகள், மாணவர்கள், தொழிலாளர்கள், ஆதரவற்றோர்கள், முதியோர்கள் மற்றும் சமூகத்தின் அனைத்து பிரிவினரும் அரசின் உதவித் தொகையை பெறுவதற்கும், தொழில் முனைவோர் மற்றும் பொது/தனியார் தொழிற்சாலைகள் பயன்பெறும் வகையில் பல்வேறு விதமான சான்றிதழ்களை, குறிப்பாக சாதி, பிறப்பு, இறப்பு, வாரிசு சான்று, வருமான சான்று, பட்டா மாறுதல் சான்று மற்றும் பல்வேறு உரிமங்கள் ஆகியவற்றை இத்துறை வழங்கி வருகிறது. அதோடு மட்டுமல்லாமல் இந்திய மற்றும் மாநில தேர்தல் ஆணையகங்கள் நடத்தும் தேர்தல்களிலும் வருவாய்த்துறை மிக முக்கியப் பங்காற்றுகிறது.

மேலும், வருவாய்த்துறை இயற்கை இடர்ப்பாடுகளின் போதும், மனிதர்களால் ஏற்படும் பேரிடர்களின் போதும் அனைவரின் எதிர்பார்ப்பிற்கேற்ப முன்னின்று செயல்பட்டு வருகிறது. வறட்சி, வெள்ளம், புயல், சுனாமி, தீ விபத்துகள் போன்ற பேரிடர் காலங்களில் மக்களை எளிதில் சென்றடைவதிலும் மற்றும் நெருங்க முடியாத இடங்களில் இருக்கும் பாதிக்கப்பட்ட

மக்களுக்கு தேவையான மற்றும் உரிய நிவாரணப் பணிகளை மேற்கொள்வதிலும் முதன்மையான துறையாக செயல்பட்டு வருகிறது. பேரிடர்களின் போது பாதிக்கப்பட்ட மக்களை பாதுகாப்பான இடங்களில் தங்க வைத்து அவர்களுக்கு உணவு, உடை, உறைவிடம், இதர அத்தியாவசிய பொருட்கள் வழங்கியும் மற்றும் சேதமடைந்த மக்களது குடியிருப்புகளை மறு கட்டுமானம் செய்வதற்கு நிதி உதவி ஆகியவற்றையும் இத்துறை வழங்குகிறது.

1980–ஆம் ஆண்டு வருவாய் வாரியம் கலைக்கப்பட்டு, அதன் செயல்பாடுகள் புதிதாக உருவாக்கப்பட்ட 3 ஆணையரகங்களுக்கு பகிர்ந்தளிக்கப்பட்டது. பின்னர் பன்முக செயல்பாடுகளின் அடிப்படையில் தற்போது 5 ஆணையரகங்களைக் கொண்டு இத்துறை செயல்பட்டு வருகின்றது. வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மை துறையின் கீழ் தற்பொழுது வருவாய் நிருவாகம் மற்றும் பேரிடர் மேலாண்மை ஆணையரகம், நில நிர்வாக ஆணையரகம், நிலச் சீர்திருத்த ஆணையரகம், நகர்ப்புற நில உச்சவரம்பு மற்றும் நகர்ப்புற நிலவரி ஆணையரகம், நில அளவை மற்றும் நிலவரித் திட்ட இயக்குநரகம் ஆகிய ஐந்து ஆணையரகங்கள்/ இயக்குநரகங்கள் செயல்பட்டு வருகின்றன. மேற்காணும் ஆணையரகங்களின் ஒட்டுமொத்த பணியாளர்களின் எண்ணிக்கை கீழ்காணுமாறு–

அட்டவணை –1.1

வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மை துறையின்
பணியாளர் விவரம்

| ஆணையரக / இயக்குநரகத்தின் பெயர் | முதலாம் நிலை அலுவலர் | இரண்டாம் நிலை அலுவலர் | மூன்றாம் நிலை அலுவலர் | நான்காம் நிலை அலுவலர் | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| வருவாய் நிருவாகம் மற்றும் பேரிடர் மேலாண்மை | 8 | 4591 | 25169 | 23333 | 53101 |
| நில நிர்வாகம் | 6 | 25 | 98 | 20 | 149 |
| நில சீர்திருத்தம் | 2 | 38 | 123 | 51 | 214 |
| நில அளவை மற்றும் நிலவரி திட்டம் | 13 | 314 | 6943 | 1513 | 8783 |
| நகர்ப்புற நிலவரி | 1 | 37 | 104 | 68 | 210 |
| **மொத்தம்** | **30** | **5005** | **32437** | **24985** | **62457** |

மாவட்ட அளவில் மாவட்ட ஆட்சியருக்கு நிர்வாகத்தில் உதவி புரிய மாவட்ட வருவாய் அலுவலர்கள், சார் ஆட்சியர்கள், வருவாய் கோட்டாட்சியர்கள், துணை ஆட்சியர்கள், வட்டாட்சியர்கள், நில அளவை உதவி இயக்குநர்கள், மண்டலத் துணை வட்டாட்சியர்கள், நில அளவை துணை ஆய்வாளர்கள், வருவாய் ஆய்வாளர்கள், கிராம நிருவாக அலுவலர்கள், கிராம உதவியாளர்கள் மற்றும் பிற பணியாளர்கள் பணியாற்றுகின்றனர்.

வரவு செலவுத்திட்ட ஒதுக்கீடு: கோரிக்கை எண்.41 வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத்துறைக்கான வரவு செலவுத் திட்டம் 2010–2011 –ஆம் ஆண்டில் துறைக்கான நிதி ஒதுக்கீடு ரூபாய். 2739.62 கோடியிலிருந்து படிப்படியாக அதிகரித்து 2020–2021–ஆம் ஆண்டில் ரூ.7113.32 கோடியாக நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

**அட்டவணை –1.2**

| கோரிக்கை எண் . 41 வருவாய்த்துறை | | | | | |
|---|---|---|---|---|---|
| | | | | | (ரூபாய் கோடியில்) |
| வ. எண் | ஆண்டு | வருவாய் | மூலதனம் | கடன் | மொத்தம் |
| 1. | 2010–2011 | 2539.621 | 200.0046 | 0 | 2739.6256 |
| 2. | 2011–2012 | 4193.6151 | 383.591 | 0 | 4577.2061 |
| 3. | 2012–2013 | 5285.607 | 86.0246 | 0 | 5371.6316 |
| 4. | 2013–2014 | 5751.3781 | 40.3413 | 0 | 5791.7194 |
| 5. | 2014–2015 | 5809.833 | 102.062 | 0 | 5911.895 |
| 6. | 2015–2016 | 5437.6445 | 132.4249 | 0.1845 | 5570.2539 |
| 7. | 2016–2017 | 5361.4273 | 70.1019 | 0.6783 | 5432.2075 |
| 8. | 2017–2018 | 5432.0441 | 163.5829 | 0.6303 | 5596.2573 |
| 9. | 2018–2019 | 5612.4989 | 166.0015 | 0.581 | 5779.0814 |
| 10. | 2019–2020 | 6481.4174 | 133.2602 | 0.4491 | 6615.1267 |
| 11. | 2020–2021 | 6999.0673 | 114.0073 | 0.25 | 7113.3246 |
| | **மொத்தம்** | **58904.1537** | **1591.4022** | **2.7732** | **60498.3291** |

## 2. வருவாய்த்துறையின் வளர்ச்சி

தொன்றுதொட்டே பொது நிருவாகம், வருவாய் வசூல், நில நிருவாகம் அனைத்தும் ஒன்றுக்கொன்று தொடர்புடையதாகவும், நிருவாகத்திற்கு அடிப்படையாகவும் இருந்து வருகிறது. இத்துறையின் தோற்றத்தினை வடஇந்தியாவில் மௌரியர் காலத்தில் தொடங்கி, அதனை தொடர்ந்து குப்தர்காலம், சுல்தான்கள், முகலாயர்கள் காலத்திலும், தென்னிந்தியாவில் சேர, சோழ, பாண்டிய மன்னர்களின் காலத்திலும் பின்னோக்கி பார்க்கலாம். ஒவ்வொருவரும் அவரவருக்கென தனித்தனி முறைகளைக் கொண்டு இத்துறை வளர்ச்சிப்பெற்றது. வருவாய் மற்றும் நில நிருவாகத்துறையின் தற்கால வரலாறு ஆங்கிலேயர் வருகையிலிருந்து தொடங்குகிறது.

### 2.1. வருவாய் நிருவாகத்தின் தற்கால வரலாற்றினை பின்வருமாறு பிரிக்கலாம்

- 1803–க்கு முன்பு
- மெட்ராஸ் ஒழுங்குமுறைச் சட்டம் I 1803
- வருவாய் வாரியம் – 1916 முதல் 1947 வரை
- வருவாய் வாரியம் 1947 முதல் 1980 வரை
- 1980–க்கு பின் வருவாய் வாரியம் கலைக்கப்பட்டு தனித்தனி ஆணையரகங்கள் தோன்றியது.

## 2.2. 1803–க்கு முந்தைய காலம்

ஐரோப்பிய நாட்டினர் கிபி.15, 16–ம் நூற்றாண்டுகளில், வளர்ந்துவரும் அவர்களது தொழில் நிறுவனங்களுக்கு மூலப்பொருட்களுக்காகவும் அவர்களது தயாரிப்புகளை சந்தைப்படுத்துவதற்கும் பயணங்களின் வாயிலாக புதிய நிலப்பகுதிகளை கண்டடைந்தனர். இப்பயணங்களும் அவர்களது நவீன கடற்படையும் அவர்களது காலனி ஆதிக்கத்திற்கு வழிகோலியது. இங்கிலாந்து ராணி எலிசபெத்–I ஆட்சி காலத்தில் வழங்கப்பட்ட ஒரு சாசனத்தின் வாயிலாக கிழக்கிந்திய கம்பெனி தொடங்கப்பட்டது. ஆங்கிலேயரின் இந்திய வருகைக்கு காரணமாக அமைந்தது. ஒழுங்குமுறைச் சட்டம் 1773 வாயிலாக வங்காளம், பம்பாய் மற்றும் மெட்ராஸ் மாகாணங்கள் நிருவாக மேற்பார்வைக்கு உருவாக்கப்பட்டது. வருவாய் தொடர்பான பரிவர்த்தனைகளை கவர்னர் ஜெனரலும், அவரது சபையும் மேற்கொண்டு அவர்கள் அனைத்து அதிகாரங்களையும் கொண்டு விளங்கினர். நிலவருவாய் அரசிற்கு முக்கிய வருவாயாக விளங்கியது. கவர்னர் ஜெனரல் வருவாய் தொடர்பான பணிகளை மேற்கொள்ளும்போது அவரது சபை வாரியம் என்று அழைக்கப்பட்டது. அன்றைய அரசாங்கம் பொது மற்றும் இராணுவம் என இரு துறைகளைக் கொண்டு இருந்தது. வருவாய், பொதுத்துறையின் கீழ் நிருவகிக்கப்பட்டது.

நிலம், நில அளவை, நில உரிமை, நில வருவாய் ஆகியவற்றின் முக்கியத்துவம் அதிகரித்துக் கொண்டே சென்ற நிலையில் 18 ஆகஸ்ட் 1974ல் கவர்னர் ஜெனரலால் வருவாய் ஆலோசனை சமர்பிக்கப்பட்டது. கவர்னர், தலைமை தளபதி மற்றும் இரண்டு உறுப்பினர்கள் கொண்ட சபையால் வருவாய் நிருவாகப் பணிகள் மேற்கொள்ளப்பட்டது. இச்சபை வாரியம் என்றும் அழைக்கப்பட்டது. 20.06.1789 ஆம் ஆண்டு மெட்ராஸ் மாகாணத்தின் வருவாய் நிருவாகத்தினை மேற்கொள்ளும் தலைமை அமைப்பாக வருவாய் வாரியம் தோற்றுவிக்கப்பட்டது. இக்காலக் கட்டடத்தில் நில அளவை , நிலவரித்திட்டம் மற்றும் நில ஆவணப் பதிவேடுகளைப் பராமரிக்கும் முறைகளும் தோன்றியது.

## 2.3. மெட்ராஸ் ஒழுங்குமுறைச் சட்டம் 1803

மெட்ராஸ் ஒழுங்குமுறைச் சட்டம் 1803, வருவாய் வாரியத்தின் அதிகாரங்களையும், கடமைகளையும் வரையறுத்ததினைத் தொடந்து முத்திரைவரி, உப்பு, அப்காரி வருவாய் மற்றும் பல்வேறு வருவாய் தொடர்பான இனங்கள் வருவாய் வாரியம் என்ற ஒற்றை அமைப்பின் கீழ் வரப்பெற்றன. ஒழுங்குமுறைச் சட்டம் 1987–இயற்றியதன் வாயிலாக வருவாய் வாரியத்தின் அதிகார வரம்பு மேலும் விரிவடைந்து சமய அறநிலையங்கள் மற்றும் அதன் சொத்துக்களை நிருவகிக்கும் பொறுப்புகளை கொண்டு விளங்கியது. பின்னர் கடல் வணிகம்,

பொது வணிகம், வரி விதிப்புகள், உள்ளாட்சி அமைப்புகள், பாசனம், ஏரிகள் மற்றும் சாலைகள் ஆகியவற்றினை மேற்பார்வையிடும் பணிகளும் வாரியத்திற்கு வழங்கப்பட்டன. மேலும் மாவட்ட ஆட்சியர்களின் முடிவுகள் மீது மேல்முறையீட்டு அதிகாரமும் வாரியத்திற்கு வழங்கப்பட்டது. இவ்வாறாக பெரும்பான்மையான குடிமை நிருவாகத்தினை கண்காணிப்பதும் மற்றும் ஒழுங்குபடுத்தும் அமைப்பாகவும் வருவாய் வாரியம் விளங்கியது. 1849–ல் குழுவிலுள்ள உறுப்பினர்களுக்கு கூடுதல் பொறுப்புகளும் வழங்கப்பட்டன. இதுவே வருவாய் வாரியம் மெட்ராஸ் மாகாண நிருவாகத்தின் அதிகாரம் மிக்க அமைப்பாக உருப்பெற்ற சகாப்த நிகழ்வாகும்.

## 2.4. வருவாய் வாரியம் 1916 முதல் 1947 வரை

நிருவாகத்தின் அதிகரிக்கும் தேவையை கருத்தில் கொண்டு வருவாய் வாரியத்திலிருந்து தனித்தனித் துறைகள் உருவாக்கப்பட்டது. 1916–ல் விவசாயம், கால்நடை, கூட்டுறவு துறைகள் உருவாக்கப்பட்டது. பின்னர், வருமான வரி, கலால், கடல் வணிகம், உப்புகென்று தனித்துறைகள் உருவாக்கப்பட்டது. வருவாய் வாரியம் நிலம் மற்றும் நில வருவாய் மீது தனிப்பெரும் அதிகாரம் கொண்டு விளங்கியது. இக்காலக்கட்டத்தில் வருவாய் நிலை ஆணைகள் வகுக்கப்பட்டு தற்கால வருவாய் நிருவாகத்திற்கு அடிக்கோலியது.

## 2.5 1947 முதல் 1980 வரை வருவாய் வாரியம்

ஆங்கிலேய ஆட்சிக்குப் பிறகான சுதந்திர இந்தியாவின் நிருவாக அமைப்பிற்கு ஏற்றவாறு சமூக நலத்துறை தனித்துறையாக தோன்றியது. சுதந்திர இந்தியாவில் வருவாய் வாரியத்தின் சட்டங்களையும், பொறுப்புகளையும், கடமைகளையும், அதிகாரத்தையும் மாற்றம் செய்ய வேண்டிய அவசியம் இருந்தது..

நிருவாகத்தினை செம்மைப்படுத்தும் நோக்குடன் 5.12.1980–ல் வருவாய் வாரியம் மறு சீரமைக்கப்பட்டு, வருவாய் நிருவாகம், நில நிருவாகம் மற்றும் நிலச்சீர்திருத்தம் என மூன்று துறைகள் உருவாக்கப்பட்டது.

வருவாய் வாரியத்திலிருந்து உருவாக்கப்பட்ட வருவாய் நிருவாகம் மற்றும் பேரிடர் மேலாண்மைத் துறை சமூகப் பாதுகாப்புத் திட்டம் , வருவாய் நிருவாகம் , மாவட்டங்களின் அன்றாட நிருவாகம், பேரிடர் தணிக்கை மற்றும் மேலாண்மை போன்ற பணிகளைக் கண்காணிக்கும் பன்முகத் தன்மை கொண்ட துறையாக உருவெடுத்தும் மாநிலத்தின் நிருவாகத்தில் நேரடி முக்கிய பங்கு வகித்தும் அனைத்து துறைகளுக்கும் தாய்த்துறையாகப் பார்க்கப்படுகிறது.

## 3. வருவாய் நிருவாகம் மற்றும் பேரிடர் மேலாண்மை ஆணையரகம்

மாநிலத்தின் , அடிப்படை வருவாய் நிருவாகத்தில் இத்துறை மிக முக்கிய மற்றும் இன்றிமையாதப் பங்கினை வகிக்கிறது. மாவட்ட அளவில் இத்துறை தனது நிருவாக இயந்திரத்தின் மூலம் இதர துறைகளுக்கும் முதுகெலும்பாக விளங்குகிறது. மக்களுக்கு உரிய நேரத்தில் சேவைகள் சென்று அடைவதை உறுதி செய்வதில் இத்துறை முக்கிய பங்கு வகிக்கிறது. வருவாய் நிருவாக ஆணையர் / மாநில நிவாரண ஆணையரின் தலைமையில் சமூக பாதுகாப்புத்திட்ட இயக்குநர், பேரிடர் மேலாண்மை இயக்குநர், இணை ஆணையர் (வருவாய் நிருவாகம்) மற்றும் இதர அலுவலர்கள் இயங்குகின்றனர்.

இத்துறையின் பணிகளில் அடங்குபவை:-

1. பொது வருவாய் நிருவாகம்
2. நில வருவாய் வசூல்
3. சமூக பாதுகாப்பு ஓய்வூதிய திட்டங்களை செயல்படுத்துதல்
4. குறைத்தீர்க்கும் வழிமுறைகள்
5. பொது மக்கள் குறை தீர்க்கும் பணிகள்
6. பேரிடர் மேலாண்மை மற்றும் பேரிடர் தணிப்பு
7. கீழ்க்கண்ட சட்டங்களை அமல்படுத்துதல் மற்றும் செயலாக்கம் செய்தல்

   அ . வருவாய் வசூல் சட்டம் 1864

ஆ. புதைப்பொருள் சட்டம் 1878

இ . தமிழ்நாடு வெடிபொருள் சட்டம் 1884

ஈ .தமிழ்நாடு அடகு பிடிப்போர் சட்டம் 1943

உ . பொதுக் கட்டிட உரிமம் சட்டம் 1965

ஊ. தமிழ்நாடு பிறப்பு /இறப்பு பதிவுச்சட்டம் 1969

எ. தமிழ்நாடு அதிக வட்டிக்கு கடன் கொடுப்பதை தடுத்தல் சட்டம் 2003

இத்துறை மாவட்ட நிலை முதல் கிராம நிலை வரை களப்பணியாளர்களைக் கொண்டுள்ளது.

### 3.1 மாவட்ட நிருவாகம்

தமிழ்நாட்டில் உள்ள 37 மாவட்டங்களின் நிருவாகம் மாவட்ட ஆட்சியர்களின் கீழ் இயங்கி வருகிறது. மாவட்ட ஆட்சித்தலைவர்/ மாவட்ட நடுவரின் மேற்பார்வையின் கீழ் மாவட்ட வருவாய் அலுவலர் மற்றும் மாவட்ட அளவிலான பல துறைகளைச் சார்ந்த மாவட்ட நிலை அலுவலர்கள் பணியாற்றி வருகின்றனர்.

### 3.2. வருவாய் கோட்ட நிருவாகம்

ஒவ்வொரு மாவட்டத்திலும் நிருவாகம் செம்மையாக செயல்பட கோட்டங்களாகப் பிரிக்கப்பட்டு , சார் ஆட்சியர் / கோட்டாட்சியரின் கீழ் இயங்கி வருகின்றன. வருவாய் நிருவாகம், சட்டம் ஒழுங்கு பாதுகாப்பு, நில நிருவாகம், வருவாய் கிராம நிருவாகம் போன்ற பொறுப்புகளை வருவாய்க் கோட்டாட்சியர்கள்

நிருவகித்து கண்காணித்து வருகின்றனர். தற்போது மாநிலத்தில் மொத்தம் 92 கோட்டங்கள் உள்ளன.

### 3.3. வருவாய் வட்ட நிருவாகம்

வட்ட நிருவாகம், வட்டாட்சியரின் கீழ் இயங்கி வருகிறது. பொதுமக்கள், விவசாயிகள் மற்றும் மாணவ / மாணவியர்களுக்கு தேவையான பட்டா, சிட்டா, அடங்கல் மற்றும் சாதிச்சான்று, இருப்பிடச் சான்று, வருமானச் சான்று போன்ற பல்வேறு சான்றுகள் இணைய வழி மூலம் வழங்குவதற்கு துணை வட்டாட்சியர்கள் மற்றும் வருவாய் ஆய்வாளர்கள் உதவி புரிகின்றனர். தற்போது மாநிலத்தில் மொத்தம் 312 வருவாய் வட்டங்கள் உள்ளன.

### 3.4. குறுவட்ட நிருவாகம்

ஒவ்வொரு வட்டத்திலும் உள்ள சில வருவாய் கிராமங்கள் ஒன்று சேர்க்கப்பட்டு பிர்க்கா என்று அழைக்கப்படும் குறுவட்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. வருவாய் ஆய்வாளர் குறுவட்டத்தில் உள்ள நிருவாக பணிகளை மேற்க்கொள்வார். இவர் நிலவரி வசூல் பணியிலும், கிராம நிருவாக அலுவலர்களின் பணியினை மேற்பார்வையிடுவதிலும் முக்கிய பங்கு வருகிறார். தற்போது மாநிலத்தில் மொத்தம் 1199 குறுவட்டங்கள் உள்ளன.

## 3.5. வருவாய் கிராம நிருவாகம்

வருவாய் நிருவாகத்தின் அச்சாணியாகவும், முக்கிய அங்கமாகவும் வருவாய் கிராம நிருவாகம் உள்ளது. வருவாய் கிராமத்தினை நிருவகிக்கும் அலுவலர் கிராம நிருவாக அலுவலர் ஆவார். கிராம நிருவாக அலுவலர் கிராம கணக்குகளை பராமரித்தல், நிலவரி வசூல் செய்தல், அரசு நிலங்களை பாதுகாத்தல் போன்ற பணிகளை செயல்படுத்தும் அலுவலர் ஆவார். பொதுமக்களுக்கு பேரிடர் காலங்களில் தகவல் அளித்தல் மற்றும் உயர் அலுவலர்களுக்கு அசம்பாவித நிகழ்வுகள் / சட்டம் ஒழுங்கு குறித்து தகவல் அளித்தல் ஆகிய பணிகளில் கிராம நிருவாக அலுவலர்கள் முக்கிய பங்காற்றுகின்றனர். தமிழ்நாட்டில் 16,743 வருவாய் கிராமங்கள் உள்ளன.

## 3.6. வருவாய் நிருவாகப் பணியாளரமைப்பு

வருவாய் நிருவாகத்துறையில் துணை ஆட்சியர் பணிநிலை முதல் கிராம உதவியாளர் நிலை வரை தற்போது 52,722 பணியாளர்கள் உள்ளனர். பல்வேறு நிலைகளில் பணிபுரிந்து வரும் பணியாளர்களின் எண்ணிக்கை விவரம் கீழே பட்டியலிடப்பட்டுள்ளது

அட்டவணை – 3.1

வருவாய் நிருவாகத் துறையில் உள்ள
பணியாளர்கள் விவரம்

| வ.எண் | பணியிடத்தின் பெயர் | அனுமதிக்கப்பட்ட எண்ணிக்கை |
|---|---|---|
| 1 | துணை ஆட்சியர் | 497 |
| 2 | வட்டாட்சியர் | 1942 |
| 3 | துணை வட்டாட்சியர், கண்காணிப்பாளர் /சுத்த நகல் கண்காணிப்பாளர் | 2095 |
| 4 | முதுநிலை (வருவாய் ஆய்வாளர்கள்) | 7476 |
| 5 | இளநிலை(வருவாய் ஆய்வாளர்கள்) | 3182 |
| 6 | தட்டச்சர் (சுருக்கெழுத்து தட்டச்சர்) | 1612 |
| 7 | ஓட்டுநர், பதிவுரு உதவியாளர் / பதிவுரு எழுத்தர் /நகல் எடுப்பவர், / காவலர்/ மசால்சி/ தோட்டக்காரர்/ துப்புரவு பணியாளர்கள் | 2817 |
| 8 | அலுவலக உதவியாளர் | 3850 |
| 9 | கிராம நிருவாக அலுவலர் | 12621 |
| 10 | கிராம உதவியாளர் | 16630 |
| | **மொத்தம்** | **52722** |

## 3.7. ஆட்சி எல்லைகளை மறுசீரமைத்தல் / புதிய நிருவாக அலகுகளை உருவாக்குதல்.

அரசின் சேவையினை எளிதாகவும் விரைவாகவும் மக்களின் இருப்பிடத்தில் இருந்தே பெறும் பொருட்டு பொதுமக்களின் கோரிக்கையின் அடிப்படையில், தொலைதூர பகுதிகளில் வசித்து வரும் பொதுமக்களுக்கு அரசின் சேவைகளை விரைந்து அளிக்கும் பொருட்டு, புதிய மாவட்டங்கள், புதிய வருவாய் கோட்டங்கள் மற்றும் புதிய வருவாய் வட்டங்கள் அரசின் வழிகாட்டி நெறிமுறைகளின்படி உருவாக்கப்பட்டுள்ளன. மக்கள் தொகையின் அடிப்படையில் புதிய வருவாய் வட்டங்களை பிரிப்பது தொடர்பாக அரசுக்கு பரிந்துரைங்க வருவாய் நிருவாக ஆணையர், நில நிருவாக ஆணையர், நிலச் சிர்திருத்த ஆணையர் ஆகிய 3 அலுவலர்களை கொண்ட குழு அரசால் அமைத்து ஆணையிடப்பட்டது. 2011 முதல் 2020–ஆம் ஆண்டு வரை மொத்தம் 5 மாவட்டங்கள், 16 வருவாய் கோட்டங்கள் மற்றும் 90 வருவாய் வட்டங்கள் புதிதாக உருவாக்கப்பட்டுள்ளன.

## அட்டவணை – 3.2

### மாவட்ட வாரியாக உள்ள வருவாய் கோட்டங்கள், வருவாய் வட்டங்கள், குறு வட்டங்கள் மற்றும் வருவாய் கிராமங்களின் எண்ணிக்கை விவரங்கள்

| வ.. எண் | மாவட்டம் | வருவாய் கோட்டங்களின் எண்ணிக்கை | வருவாய் வட்டங்களின் எண்ணிக்கை | குறுவட்டங்களின் எண்ணிக்கை | வருவாய் கிராமங்களின் எண்ணிக்கை |
|---|---|---|---|---|---|
| 1. | அரியலூர் | 2 | 4 | 15 | 195 |
| 2. | சென்னை | 3 | 16 | 49 | 122 |
| 3. | கோயம்புத்தூர் | 3 | 11 | 38 | 295 |
| 4. | கடலூர் | 3 | 10 | 32 | 899 |
| 5. | தருமபுரி | 2 | 7 | 23 | 261 |
| 6. | திண்டுக்கல் | 3 | 10 | 40 | 361 |
| 7. | ஈரோடு | 2 | 10 | 35 | 375 |
| 8. | காஞ்சிபுரம் | 2 | 5 | 25 | 479 |
| 9. | கன்னியாகுமரி | 2 | 6 | 18 | 188 |
| 10. | கரூர் | 2 | 7 | 20 | 203 |
| 11. | கிருஷ்ணகிரி | 2 | 8 | 30 | 362 |
| 12. | மதுரை | 4 | 11 | 51 | 665 |
| 13. | நாகப்பட்டினம் | 2 | 8 | 35 | 523 |
| 14. | நாமக்கல் | 2 | 8 | 32 | 363 |

| வ.. எண் | மாவட்டம் | வருவாய் கோட்டங்களின் எண்ணிக்கை | வருவாய் வட்டங்களின் எண்ணிக்கை | குறுவட்டங்களின் எண்ணிக்கை | வருவாய் கிராமங்களின் எண்ணிக்கை |
|---|---|---|---|---|---|
| 15. | பெரம்பலூர் | 1 | 4 | 11 | 152 |
| 16. | புதுக்கோட்டை | 3 | 12 | 45 | 763 |
| 17. | இராமநாதபுரம் | 2 | 9 | 38 | 400 |
| 18. | சேலம் | 4 | 13 | 44 | 650 |
| 19. | சிவகங்கை | 2 | 9 | 39 | 522 |
| 20. | தஞ்சாவூர் | 3 | 9 | 50 | 956 |
| 21. | நீலகிரி | 3 | 6 | 15 | 88 |
| 22. | தேனி | 2 | 5 | 17 | 97 |
| 23. | தூத்துக்குடி | 3 | 10 | 41 | 480 |
| 24. | திருச்சிராப்பள்ளி | 4 | 11 | 43 | 507 |
| 25. | திருநெல்வேலி | 2 | 8 | 30 | 370 |
| 26. | திருப்பூர் | 3 | 9 | 33 | 350 |
| 27. | திருவள்ளூர் | 3 | 9 | 48 | 663 |
| 28. | திருவண்ணாமலை | 3 | 12 | 54 | 1067 |
| 29. | திருவாரூர் | 2 | 8 | 28 | 573 |
| 30. | வேலூர் | 2 | 6 | 20 | 317 |
| 31. | விழுப்புரம் | 2 | 9 | 34 | 928 |
| 32. | விருதுநகர் | 3 | 10 | 39 | 600 |

| வ.. எ ண் | மாவட்டம் | வருவாய் கோட்டங்களின் எண்ணிக்கை | வருவாய் வட்டங்களின் எண்ணிக்கை | குறுவட்டங்களின் எண்ணிக்கை | வருவாய் கிராமங்களின் எண்ணிக்கை |
|---|---|---|---|---|---|
| 33 | **தென்காசி** | 2 | 8 | 30 | 246 |
| 34 | **கள்ளகுறிச்சி** | 2 | 6 | 24 | 562 |
| 35 | **இராணிப்பேட்டை** | 2 | 6 | 18 | 330 |
| 36 | **திருப்பத்தூர்** | 2 | 4 | 15 | 195 |
| 37 | **செங்கல்பட்டு** | 3 | 8 | 40 | 636 |
| | **மொத்தம்** | **92** | **312** | **1199** | **16743** |

**3.8.** வருவாய் கட்டடங்கள்

பொதுமக்கள் எளிதில் தொடர்பு கொள்ளும் வகையிலும் அலுவலக சூழலை மேம்படுத்தும் பொருட்டும், மாவட்ட ஆட்சியர் நிலை முதல் கிராம நிருவாக அலுவலர் நிலை வரை உள்ள அனைத்து வருவாய்த்துறை அலுவலர்களுக்கு தேவைப்படும் உட்கட்டமைப்பு வசதிகளை வழங்கும் விதமாக அலுவலக மற்றும் குடியிருப்புக் கட்டடங்கள் கட்ட அரசு முன்னுரிமை அளித்து வருகிறது.

மாண்புமிகு தமிழக முதலமைச்சர் அவர்களின் அறிவிப்பின் படி 2019 –2020 ஆம் நிதியாண்டில் தென்காசி, கள்ளக்குறிச்சி,

இராணிப்பேட்டை, திருப்பத்தூர் மற்றும் செங்கல்பட்டு என புதியதாக உருவாக்கப்பட்ட 5 மாவட்டங்களுக்கு தற்காலிக மாவட்ட ஆட்சியர் அலுவலகங்கள் அமைக்க ரூ.26.35 கோடியில் அரசு நிதி ஒதுக்கீடு செய்துள்ளது. தமிழக அரசால் மதுரை மாவட்டத்தில் திருமங்கலம் மற்றும் திருவண்ணாமலை மாவட்டத்தில் ஆரணி ஆகிய இரண்டு கோட்டங்களில் வருவாய் கோட்டாட்சியர் அலுவலகம் மற்றும் குடியிருப்புக் கட்டடம் கட்டுவதற்கு ரூ.4.5 கோடியும், 14 வட்டங்களில் வட்டாட்சியர் அலுவலகம் மற்றும் குடியிருப்புக் கட்டடம் கட்டுவதற்காக ரூ.45.02 கோடியும் நிதி ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது.

### 3.9. நில வருவாய்

அரசாணை (நிலை) எண்.544, வருவாய்த் துறை (வ.நி.1(1)), நாள் 20.10.2010–ன் படி தமிழ்நாட்டில் உள்ள நிலங்களுக்கு அவற்றின் வகைபாட்டிற்கு ஏற்ப கீழ்க்கண்டவாறு நிலவரித் தொகை நிர்ணயம் செய்யப்பட்டுள்ளது.

அட்டவணை – 3.3

| வ. எண். | விவரம் | தொகை / ஏக்கர் (ரூபாயில்) |
|---|---|---|
| 1. | புஞ்சை நிலத்திற்குத் தீர்வை | 2/– |
| 2. | நஞ்சை நிலத்திற்குத் தீர்வை | 5/– |

| வ. எண். | விவரம் | தொகை / ஏக்கர் (ரூபாயில்) |
|---|---|---|
| 3. | ஆட்சேபணையற்ற அரசு புறம்போக்கு நிலங்களை ஆக்கிரமித்து அனுபவித்து வருபவர்களிடமிருந்து வசூலிக்கப்படும் ஆக்ரமணத் தீர்வை | 5/– |
| 4. | பட்டா ஒன்றுக்கு குறைந்தபட்ச கேட்புத் தொகை | 1/– |

வருவாய்த் தீர்வாய நிகழ்வின்போது ஒவ்வொரு கிராமத்தின் ஆண்டு வருவாய் கணக்குகள் இறுதி செய்யப்படுகிறது. ஒவ்வொரு பசலி ஆண்டிலும், ஜூலை 1–ஆம் தேதி முதல் ஜூன் 30–ஆம் தேதி வரை நிலவரி வசூலிக்கும் காலம் ஆகும்.

### 3.10. இ–அடங்கல்

ஒவ்வொரு கிராமத்திலும், கிராம நிருவாக அலுவலரால் பராமரிக்கப்படும் அடிப்படை நிலப்பதிவேடாக அடங்கல் விளங்குகிறது. மேலும் விவசாயிகளால் பருவ வாரியாக பயிர் செய்யப்படும் பயிர்களின் விவரம், விளைச்சல், நீர் ஆதாரம் போன்ற பல்வேறு புள்ளி விவரங்கள் இப்பதிவேட்டில் பதிவு செய்யப்பட்டு இப்புள்ளி விவரங்கள் ஜி–அறிக்கை (மொத்த சாகுபடி புள்ளிவிவர அறிக்கை) தயாரிக்க உதவுகிறது. வறட்சி, வெள்ளம் மற்றும் பூச்சி தாக்குதலினால் ஏற்படும் பயிர்

சேதங்களுக்கு உரிய நிவாரணங்களை வழங்குவதற்கு அடங்கல் முக்கிய ஆவணமாக விளங்குகிறது. 1428–ஆம் பசலி ஆண்டு வரை அடங்கல் பதிவேடானது கிராம நிருவாக அலுவலர்களால் கையினால் எழுதப்பட்டு வந்தது. இது பணிச்சுமை மிக்கதாகவும், காலம் பிடிக்கக்கூடிய பணியாகவும் இருந்தது. கிராம நிருவாக அலுவலர்களால் கையினால் எழுதி பராமரிக்கப்பட்டு வந்த முறையை எளிமைப்படுத்திடவும், சாகுபடி விவரங்களை துல்லியமாக பெற்றிடவும் அடங்கல் பதிவேட்டினை மின்னனு படிவிற்கு மாற்றம் செய்யும் இ–அடங்கல் திட்டத்தினை செயல்முறைபடுத்த அரசாணை எண்.258, வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத் துறை, நாள் 17.08.2017–ன்படி அரசு ஆணை பிறப்பித்துள்ளது. மாண்புமிகு தமிழக முதலமைச்சர் அவர்களால் இணையதள இ–அடங்கல் செயலி 26.10.2018 அன்று துவக்கி வைக்கப்பட்டது. மாண்புமிகு வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத் துறை அமைச்சர் அவர்களால் இஅடங்கல் கைப்பேசி செயலி 05.03.2019 அன்று துவக்கி வைக்கப்பட்டது. கிராம நிருவாக அலுவலர்களால் இதுவரை தயாரிக்கப்பட்டு வந்த அடங்கல் பதிவேட்டில் விவசாயிகள் தங்கள் சாகுபடி விவரங்களை பதிவு செய்யும் நடைமுறை இல்லை. எனவே, விவசாயிகளுக்கு அதிகாரம் அளிக்கும் வகையில் தங்கள் சாகுபடி விவரத்தினை தாங்களே இ–அடங்கலில் பதிவிட வாய்ப்பளிக்கப்பட்டுள்ளது. கிராம நிருவாக அலுவலர் மற்றும் விவசாயிகளால் செய்யப்படும் சாகுபடி பதிவுகளுக்கு இடையே

வேறுபாடுகள் இருப்பின், அப்பதிவு தானாகவே அடுத்த உயர்நிலை அலுவலருக்கு குறியீடு செய்யப்பட்டு, அவரது ஆய்வுக்குப்பின் திருத்தம் மேற்கொள்ள வழிவகை செய்யப்பட்டுள்ளது. வேளாண்மைத் துறை, தோட்டக்கலைத் துறை, பட்டு வளர்ச்சித் துறை மற்றும் புள்ளியியல் துறையை சேர்ந்த அலுவலர்களும் தங்களின் எல்லைக்குட்பட்ட பகுதியில் உள்ள பயிர்சாகுபடி விவரங்களை இச்செயலியில் பதிவு செய்ய தனி சாளர வசதியும் ஏற்படுத்தப்பட்டுள்ளது. இதன்மூலம் இ–அடங்கல் முறையில் தானாகவே சாகுபடி பயிர்பரப்பு ஒத்திசைவு செய்ய வழி வகை செய்யப்பட்டுள்ளதால், பதிவேடு முறை ஒத்திசைவு களையப்படுகிறது. இ–அடங்கல் முறையில் விவசாயிகள் எவ்வித கட்டணமுமின்றி பதிவுகளை பார்வையிடவும், ரூ.100/– கட்டணம் செலுத்தி வீட்டிலோ (அல்லது) இ–சேவை மையத்திலோ மின்னனு அடங்கல் பதிவுகளை பதிவிறக்கம் செய்து கொள்ளவும் இயலும்.

### 3.11. சமூகப் பாதுகாப்புத் திட்டம்

சமூகப் பாதுகாப்புத் திட்டங்களைச் செயல்படுத்துவதில் தமிழ்நாடு தேசிய அளவில் முன்னோடி மாநிலமாகத் திகழ்கிறது. சமுதாயத்தில் நலிவடைந்த பிரிவினரான மூத்த குடிமக்கள், மாற்றுத்திறனாளிகள், விதவைகள், விவசாயத் தொழிலாளர்கள், ஏழை விவசாயிகள், கணவனால் கைவிடப்பட்ட பெண்கள் மற்றும் 50 வயதைக் கடந்த திருமணமாகாத ஆதரவற்ற பெண்கள்

ஆகியோருக்கு இத்திட்டத்தின் கீழ் ஓய்வூதியம் வழங்கப்படுகிறது. தற்போது அனைத்து சமூக பாதுகாப்புத் திட்டங்களின் கீழ் மாதாந்திர ஓய்வூதியத் தொகையாக ரூ.1000/– வழங்கப்பட்டு வருகிறது. இத்திட்டம் பெரும்பான்மையான மக்களுக்கு குறிப்பாக முதியோர்களுக்கும், மாற்றுத் திறனுடையவர்களுக்கும் சென்றடைய ஏதுவாக இத்திட்டத்திற்கான விதிமுறைகள் தளர்த்தப்பட்டுள்ளது. 2020–21 ஆம் ஆண்டிற்கான ஓய்வூதியத் திட்டங்களுக்கு மக்களின் தேவையைக் கருதி இதுவரை இல்லாத அளவிற்கு அதிக ஒதுக்கீடாக ரூ. 4306.76 கோடி நிதி ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது. 05.02.2020 அன்று உள்ள பதிவுகளின்படி 31.63 இலட்சம் பயனாளிகள் கீழ்காணும் திட்டங்களின் மூலம் பயன் பெற்று வருகின்றனர்.



அட்டவணை எண். 3.4

மத்திய மற்றும் மாநில அரசுகளால் வழங்கப்படும் பங்கீடு

| வ. எண். | திட்டத்தின் பெயர் | வயது | மத்திய அரசின் பங்கீடு ரூ | மாநில அரசின் பங்கீடு ரூ |
|---|---|---|---|---|
| 1 | இந்திராகாந்தி தேசிய முதியோர் ஓய்வூதிய த் திட்டம் | 60 வயது முதல் 79 வயது வரை | 200/- | 800/- |
| | | 80 வயது மற்றும் அதற்கு மேற்பட்ட வயது | 500/- | 500/- |
| 2 | இந்திராகாந்தி தேசிய மாற்றுத் திறனுடையோர் ஓய்வூதியத் திட்டம் | 18 வயது முதல் 79 வயது வரை | 300/- | 700/- |
| 3 | இந்திராகாந்தி தேசிய விதவையர் ஓய்வூதியத் திட்டம் | 40 வயது முதல் 79 வயது வரை | 300/- | 700/- |
| 4 | மாற்றுத் திறனுடையோர் ஓய்வூதியத் திட்டம் | 18 வயது மற்றும் அதற்கு மேற்பட்ட வயது | | 1000/- |
| 5 | ஆதரவற்ற விதவையர் ஓய்வூதியத் திட்டம் | 18 வயது மற்றும் அதற்கு மேற்பட்ட வயது | | 1000/- |

| வ. எண். | திட்டத்தின் பெயர் | வயது | மத்திய அரசின் பங்கீடு ரூ | மாநில அரசின் பங்கீடு ரூ |
|---|---|---|---|---|
| 6 | முதலமைச்சரின் உழவர் பாதுகாப்புத் திட்டம் | 60 வயது மற்றும் அதற்கு மேற்பட்டவயது | | 1000/- |
| 7 | ஆதரவற்ற / கணவனால் கைவிடப்பட்ட பெண்கள் ஓய்வூதியத் திட்டம் | 30 வயது மற்றும் அதற்கு மேற்பட்ட வயது | | 1000/- |
| 8 | 50 வயதிற்கு மேற்பட்ட திருமணமாகாத ஏழைப் பெண்களுக்கான ஓய்வூதியத் திட்டம் | 50 வயது மற்றும் அதற்கு மேற்பட்ட வயது | | 1000/- |
| 9. | இலங்கை அகதிகளுக்கான ஓய்வூதியத் திட்டம் | 60 வயது மற்றும் அதற்கு மேற்பட்ட வயது | | 1000/- |

**3.12.** மாண்புமிகு தமிழக முதலமைச்சரின் சிறப்பு அறிவிப்பு

தமிழ்நாடு அரசு உதவித் தொகை பெறத் தகுதியுடைய நபர்கள் பயன்பெற வேண்டுமென்ற உயரிய நோக்கில் அரசாணை

எண். 408 வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மை துறை நாள் 01.11.2019–இல் 5 இலட்சம் தகுதியுள்ள புதிய பயனாளிகளை கூடுதலாக சேர்க்க ஆணையிடப்பட்டுள்ளது.

**3.13.** தகுதி வரம்பு

பயனாளிகளின் நலனை கருத்திற் கொண்டு, தகுதியான ஆதரவற்ற ஏழைகள் அனைவரும் பயனடையும் வகையில், 1962–ம் ஆண்டு வெளியிடப்பட்ட ஆதரவற்றோர் என்பதற்கு உண்டான அர்த்ததை அரசாணை எண் .26, சமூக நலம் மற்றும் சத்துணவுத் திட்டத்துறை, நாள் 17.04.2015–ல் விரிவுபடுத்தி மீண்டும் அரசாணை எண் 09, சமூக நலம் மற்றும் சத்துணவுத் திட்டத்துறை, நாள் 21.01.2020–ல் மேலும் மாற்றப்பட்டு தகுதியுள்ள அனைத்து பயனாளிகளையும் இத்திட்டத்தில் கொண்டுவர கீழ்க்கண்டவாறு விதிகளைத் தளர்த்தி ஆணையிடப்பட்டுள்ளது ஆதரவற்ற நபர் என்பது

- வருமானம் அல்லது வருமானத்திற்கு வழியில்லாதது
- ரூ.1,00,000–க்கு மேலாக அசையா சொத்து, 20 வயதுக்கு மேற்பட்ட உறவினர்கள் கீழ்காணும் வகையினர் இல்லாதது
    - ✓ மகன்
    - ✓ மகனுடைய மகன் மற்றும்
    - ✓ கணவர் / மனைவி அல்லது இதர உறவினர்கள், பொதுவாக ஒன்றாக வாழ்வோர்

மேல் குறிப்பிட்டுள்ள வகையில் ஒருவருக்கு உறவினர்கள் இல்லாவிடில் அவர் ஆதரவற்றோர் என கருதப்படுவர், மேலும்

- அனுமதி வழங்கும் அலுவலர் சம்மந்தப்பட்ட நபர் வறுமைக்கோட்டிற்கு கீழ் உள்ளார் என திருப்தி அடைந்தால்

அல்லது

- அனுமதி வழங்கும் அலுவலர் சம்மந்தப்பட்ட நபரின் உறவினர்கள் தொடர்ச்சியாக காணவில்லை என திருப்தி அடைந்தால்
- இத்திட்டத்தின்படி ஏதேனும் இதர அரசு திட்டத்தின் மூலம் விலையில்லாமல் பெறப்பட்ட குடியிருப்பை தனியரது அசையா சொத்தாக கருத கூடாது.

மேலும் அரசாணை (நிலை) எண்.27, சமூகப் பாதுகாப்பு மற்றும் சத்துணவுத் திட்டத்துறை, நாள் 22.02.2016–ன்படி மாற்றுத் திறனாளிகள் ஓய்வூதியம் பெற ஆதரவற்றவராக இருத்தல் வேண்டும் என்ற நிபந்தனையை நீக்கியும் ஊனத்தின் தன்மை 60 சதவிகிதத்திலிருந்து 40 சதவிகிதமாக குறைத்தும் உத்தரவிடப்பட்டுள்ளது. மேலும் அரசாணை (நிலை) எண்.41, சமூகப் பாதுகாப்பு மற்றும் சத்துணவுத் திட்டத்துறை, நாள் 28.05.2018–ன்படி தனி நபர் வருமானத்தை 3இலட்சமாக உயர்த்தி உத்தரவிடப்பட்டுள்ளது.

தேசிய சமூக பாதுகாப்புத் திட்டத்தின் கீழ் செயல்படுத்தப்படும் மூன்று ஓய்வூதியத் திட்டங்களின் கீழ் ஓய்வூதியம் பெற கீழ்கண்ட தகுதிகளைப் பெற்றிருக்க வேண்டும்.

அட்டவணை–3.5

| வ. எண் | திட்டத்தின் பெயர் | நிபந்தனைகள் |
|---|---|---|
| 1 | இந்திராகாந்தி தேசிய முதியோர் ஓய்வூதியத் திட்டம் | தகுதி – ஆதரவற்றவராக இருத்தல் வேண்டும்.<br>வருமானம்– வறுமைக்கோட்டிற்குக் கீழ்<br>வயது–60 மற்றும் அதற்கு மேல் |
| 2 | இந்திராகாந்தி தேசிய மாற்றுத் திறனுடையோர் ஓய்வூதியத் திட்டம் | வருமானம்– வறுமைக்கோட்டிற்கு கீழ்<br>வயது–18 வயது மற்றும் அதற்கு மேல்<br>ஊனம் நிலை–80 சதவிகிதம் மற்றும் அதற்கு மேல். |
| 3 | இந்திராகாந்தி தேசிய விதவையர் ஓய்வூதியத் திட்டம் | தகுதி – ஆதரவற்ற விதவையாக இருத்தல் வேண்டும்.<br>வருமானம்– வறுமைக்கோட்டிற்குக் கீழ்<br>வயது–40 மற்றும் அதற்கு மேல் |

தமிழ்நாடு அரசின் முழு நிதி ஆதாரத்துடன் செயல்படுத்தப்படும் சமூக பாதுகாப்பு ஓய்வூதியத் திட்டங்களின் கீழ் பயன்பெற கீழ்கண்ட தகுதிகளைப் பெற்றிருக்க வேண்டும்.

அட்டவணை–3.6

| **வ. எண்** | **திட்டத்தின் பெயர்** | **மாற்றம் செய்யப்பட்ட நிபந்தனைகள்** |
|---|---|---|
| 1 | மாற்றுத் திறனுடையோர் ஓய்வூதியத் திட்டம் | தகுதி–வேலையற்றவராக இருத்தல் வேண்டும். தனியார் மற்றும் சுயவேலையில் இருப்பின் ஆண்டு வருமானம் ரூ.3 இலட்சத்திற்குள் இருக்க வேண்டும்.<br>வயது–18 மற்றும் அதற்கு மேல்<br>ஊனம் நிலை–40 சதவிகிதம் மற்றும் அதற்கு மேல். |
| 2 | ஆதரவற்ற விதவையர் ஓய்வூதியத் திட்டம் | தகுதி– ஆதரவற்ற விதவையாக இருத்தல் வேண்டும்.<br>வயது–18 மற்றும் அதற்கு மேல்<br>அசையா சொத்தின் மதிப்பு ரூ.1,00,000/– த்திற்குள் இருத்தல் வேண்டும். |
| 3 | முதலமைச்சரின் உழவர் பாதுகாப்புத் திட்டம் | தகுதி–ஆதரவற்றவராக இருத்தல் வேண்டும்.<br>வயது–60 மற்றும் அதற்கு மேல்<br>நிலமற்ற விவசாயத் தொழிலாளியாக இருத்தல் வேண்டும். |

| வ. எண் | திட்டத்தின் பெயர் | மாற்றம் செய்யப்பட்ட நிபந்தனைகள் |
|---|---|---|
| | | அசையா சொத்தின் மதிப்பு ரூ.1,00,000/–த்திற்குள் இருத்தல் வேண்டும். |
| 4 | ஆதரவற்ற / கணவனால் கைவிடப்பட்ட பெண்கள் ஓய்வூதியத் திட்டம் | தகுதி–ஆதரவற்றவராக இருத்தல் வேண்டும்.<br>வயது–30 மற்றும் அதற்கு மேல்<br>சட்ட பூர்வமாக விவாகரத்து அல்லது குறைந்தது 5 ஆண்டுகள் கணவனால் கைவிடப்பட்டவரக இருத்தல் வேண்டும். அல்லது நீதிமன்றத்திலிருந்து சட்டப்பூர்வமாக பிரிவு சான்றிதழ் பெற்றிருத்தல் வேண்டும். சொத்தின் மதிப்பு ரூ.1,00,000/–த்திற்குள் இருத்தல் வேண்டும் |
| 5 | 50 வயதிற்கு மேற்பட்ட திருமணமாகாத ஏழைப் பெண்களுக்கான ஓய்வூதியத் திட்டம் | தகுதி– ஆதரவற்ற திருமணமாகாத பெண்ணாக இருத்தல் வேண்டும்.<br>வயது–50 மற்றும் அதற்கு மேல்<br>சொத்தின் மதிப்பு ரூ.1,00,000/–த்திற்குள் இருத்தல் வேண்டும் |

80 வயதைக் கடந்து ஓய்வூதியம் பெற்று வரும் 2.19 இலட்சம் பயனாளிகளின் சிரமத்தினை போக்கும் வகையில், அப்பயனாளிகளின் வீட்டிற்கே சென்று இந்திய அஞ்சல்

துறையின் மின் பண அஞ்சல் (eMO) மூலம் ஓய்வூதியம் வழங்கப்பட்டு வருகிறது. இதற்கென, ஆண்டுக்கு ரூ.1.09 கோடி கூடுதலாக செலவிடப்படுகிறது.

**3.14. ஓய்வூதியதாரர்களுக்கு வழங்கப்படும் இதர பயன்கள்**

ஆண்டுக்கு இருமுறை பொங்கல் மற்றும் தீபாவளி பண்டிகைகளின் போது, சமூகப் பாதுகாப்பு ஓய்வூதியத் திட்டங்களின் கீழ் ஓய்வூதியம் பெறும் 31.63 இலட்சம் பயனாளிகளில் ஆண் ஒருவருக்கு ஒரு வேட்டியும், பெண் ஒருவருக்கு ஒரு சேலையும் வழங்கப்படுகிறது.

**3.15. ஓய்வூதியதாரர்களுக்கு அரிசி வழங்கும் திட்டம்**

இத்திட்டங்களின் கீழ் உள்ள பயனாளிகளுக்கு கீழ்கண்டவாறு விலையில்லா சன்ன ரக அரிசி வழங்கப்படுகிறது.

அ) அங்கன்வாடி மையங்களில் உணவு உட்கொள்ளாதவர்களுக்கு மாதம் 4 கிலோ சன்னரக அரிசி வழங்கப்படுகிறது.

ஆ) அங்கன்வாடி மையங்களில் உணவு உட்கொள்பவர்களுக்கு மாதம் 2 கிலோ சன்னரக அரிசி வழங்கப்படுகிறது.

## 3.16. புரட்சி தலைவி அம்மா ஒருங்கிணைந்த விபத்து மற்றும் வாழ்நாள் காப்பீட்டுத் திட்டம்

வறுமைக்கோட்டிற்குக் கீழ் வாழும் குடும்பத்தில் உள்ள நபர்கள் இயற்கை மரணம் எய்தினால் ரூ.2 இலட்சமும், விபத்தினால் இறந்தால் ரூ.4 இலட்சமும் மற்றும் விபத்தினால் நிரந்தர ஊனம் ஏற்படுமாயின் ரூ.2 இலட்சமும் வழங்குவது விரிவான விபத்து மற்றும் ஆயுள் காப்பீட்டுத் திட்டத்தின் குறிக்கோளாகும். இது ஒரு வரலாற்று சிறப்புமிக்க திட்டமாகும்.

தகுதிகள்

- வயது 18 (பூர்த்தியடைந்திருக்க வேண்டும்) முதல் 55–க்குள் இருக்க வேண்டும்
- வறுமைக் கோட்டிற்கு கீழ் இருக்க வேண்டும்.

அட்டவணை–3.7

திட்டங்களைப்பற்றி

| **தகுதிகள்** | **பிரதான்மந்திரி சுரக்ஷ பீம யோஜனா** | **பிரதான்மந்திரி ஜீவன்ஜோதி பீம யோஜனா** |
|---|---|---|
| **காப்பீட்டு விவரம்** | **விபத்து மரணம் / உடல் ஊனம் / விபத்தினால் காயம்** | **பிற காரணங்களினால் ஏற்படும் இறப்பு** |
| வயது | வயது 18 – 70 வரை | வயது 18 – 50 வரை |
| பணபயன் | 2,00,000/– | 2,00,000/. |
| ஆண்டு | ரூ.12/– | ரூ.330/– |

| | | |
|---|---|---|
| சந்தாதொகை | | |
| காப்பீடு முடியும் வயது | வயது 70 | வயது 55 |
| இறப்பு ஏற்பட்டால் வழங்கப்படும் பணபயன் | --- | 2,00,000/- |
| விபத்து மரணம் ஏற்பட்டால் வழங்கப்படும் பணபயன் | 2,00,000/- | 2,00,000/- |
| இரண்டு கண் / இரண்டு கைகள் / இரண்டு கால்கள் ஊனமுற்றால் வழங்கப்படும் பணபயன் | 2,00,000/- | -- |
| ஒரு கண் / ஒரு கை ஊனமுற்றால் வழங்கப்படும் பணபயன் | 1,00,000/- | -- |

**நிருவகிக்கும்துறை ( Nodal Department)**

மாநில அளவில் வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத்துறை தாய்த்துறையாகவும், இயக்குநர் (சமூக பாதுகாப்புத் திட்டம்) இத்திட்டத்தினை செயல்படுத்தும் அதிகாரியாகவும் செயல்படுவார்.

மாவட்ட அளவில் மாவட்ட வருவாய் அலுவலர் இத்திட்டத்தினை செயல்படுத்தும் அதிகாரியாகவும் செயல்படுவார். தனித்துணை ஆட்சியர் (சமூக பாதுகாப்பு திட்டம்), வட்டாட்சியர் (சமூக பாதுகாப்புதிட்டம்) மாவட்ட மற்றும் வட்ட அளவில் இத்திட்டத்தின் செயல்பாடுகளை கண்காணிப்பர்.

**தலைமை முகமை ( Nodal Agency)**

இந்திய ஆயுள் காப்பீட்டு கழகம் இத்திட்டத்தின் தலைமை முகமையாக செயல்படும்.

உறுப்பினராவதற்கு தேவைப்படும் விவரங்கள்

குடும்ப தலைவரின் பெயர், தந்தை / கணவரின் பெயர் ( திருமணமான பெண் எனில்), பாலினம், பிறந்ததேதி, சாதி, வறுமைக்கோட்டு பட்டியல் எண், ஆதார் எண், ரேசன் அட்டை எண், வங்கி கணக்கு எண், குடும்பத்தலைவரின் தொழில், முழு முகவரி, செல்பேசி எண், நாமினி பெயர், உறுப்பினருக்கும் நாமினிக்கும் உள்ள உறவு, நாமினியின் ஆதார் எண், நாமினியின் முழு முகவரி.

உறுப்பினர் சேர்க்கும் முறை

- வறுமைகோட்டு பட்டியல் விவரங்கள் இந்திய ஆயுள் காப்பீட்டு கழகம் நிறுவனத்திடம் வழங்கப்படும்.

- தகுதியான உறுப்பினர்களின் விவரங்கள் மற்றும் காப்பீட்டுத்தொகை பெற்ற பின்பு காப்பீடு உறுதி செய்யப்படும்.
- PMJJBY ( **Pradhan Mantri Jeevan Jyoti Bima Yojana)** திட்டம் அதன் தற்போதய வயது வரம்பான 18–55 –வரை செயல்படுத்தப்படும்.
- குடும்பதலைவரின் விவரங்களோடு நாமினியின் விவரங்களும் சேகரிக்கப்படும். குடும்ப தலைவரின் இறப்பிற்கு பின் நாமினிக்கு பணபயன்கள் வழங்கப்படும். நாமினி அடுத்த குடும்பத்தலைவராக இத்திட்டத்தின் கீழ் கருதப்படுவார்
- இணையதளம் வாயிலாக இத்திட்ட உறுப்பினர்களின் விவரங்கள் மாநில மற்றும் மாவட்ட அளவில் பராமரிக்கப்படும்.

பயன்களைப்பெற சமர்ப்பிக்கப்படவேண்டிய ஆவணங்கள்:–

- இயற்கை மரணம் எய்தினால் இறப்பு சான்றினை சமர்ப்பிக்க வேண்டும்.
- விபத்து (அ) பிற காரணங்களினால் இறப்பு ஏற்பட்டால், இறப்பு சான்று, வாரிசு சான்று, முதல் தகவல் அறிக்கை, பிணக்கூராய்வு அறிக்கை சமர்ப்பிக்க வேண்டும்.

இந்திய ஆயுள் காப்பீட்டு கழகத்தால் பயன்களை வழங்கும் நடைமுறை

காப்பீட்டு திட்டம் நடைமுறையில் உள்ள காலத்தில் உறுப்பினர் இறந்துவிட்டால் அவரது வாரிசு தாரரோ / பரிந்துரைக்கப்பட்டவரோ அனைத்து ஆவணங்களுடன் வட்டாட்சியர் (சமூகபாதுகாப்புத் திட்டம்) அவர்களிடம் விண்ணப்பிக்க வேண்டும்.

மேற்படி விண்ணப்பத்தினை மூன்று உறுப்பினர்களை கொண்ட (இந்திய ஆயுள் காப்பீட்டு கழகம், மகளிர் மேம்பாட்டு கழகம், வருவாய்த்துறை) மாவட்ட மையத்திற்கு வட்டாட்சியரால் அனுப்பி வைக்கப்படும்.

விபத்து மரணம் அடைந்தால் யுனைட்டெட் இந்தியா இன்சூரன்ஸ் கம்பெனி உரிய பணப்பயன்களை வழங்கும். பணப்பயன்கள் அனைத்தும் பயனாளியின் வங்கி கணக்கில் நேரடியாக செலுத்தப்படும். இறப்பு ஏற்பட்ட 30 நாட்களுக்குள் பணப்பயன்கள் வழங்கப்படும்.

மாவட்ட அளவு அதிகாரமளிக்கப்பட்ட குழு

சேர்க்கை, நியமனம் , இறப்புச் சான்றிதழ் , வாரிசு சான்றிதழ் , வயது வரம்பு , வறுமைக்கோட்டிற்கு கீழ் உள்ளோர் அறிக்கை இவைகள் தொடர்பாக புகார்கள்/ பிரச்சணை ஏதேனும் இருப்பின் மாவட்ட ஆட்சியரைத் தலைமையாகக் கொண்ட கீழ்காணும்

உறுப்பினர்களைக் கொண்ட மாவட்ட அளவில் அதிகாரம் அளிக்கப்பட்ட குழுவில் சமர்பிக்கப்படவேண்டும்.

அட்டவணை–3.8

| | | |
|---|---|---|
| 1 | மாவட்ட ஆட்சியர் | குழுதலைவர் |
| 2 | மாநகராட்சி ஆணையர் | உறுப்பினர் |
| 3 | மண்டலஇயக்குநர், நகராட்சி நிருவாகம் | உறுப்பினர் |
| 4 | வருவாய் கோட்ட அலுவலர் | உறுப்பினர் |
| 5 | மண்டலபோக்குவரத்து அலுவலர் | உறுப்பினர் |
| 6 | உதவி இயக்குநர் (பஞ்சாயத்து ) | உறுப்பினர் |
| 7 | உதவிஇயக்குநர் (நகர பஞ்சாயத்து ) | உறுப்பினர் |
| 8 | நகராட்சிஆணையர் ( உரிய நகராட்சி) | உறுப்பினர் |
| 9 | திட்ட இயக்குநர் (TNSLRM) | உறுப்பினர் |
| 10 | தொழிலாளர் நல அலுவலர் | உறுப்பினர் |
| 11 | மண்டலமேலாளர் ( ஆயுள் காப்பீட்டு கழகம்) | உறுப்பினர் |
| 12 | வட்டாட்சியர் | உறுப்பினர் |
| 13 | தனிவட்டாட்சியர் ( சமூக பாதுகாப்புத் திட்டம்) | உறுப்பினர் |
| 14 | தனி துணை ஆட்சியர் ( சமூக பாதுகாப்புத் திட்டம்) | செயல் உறுப்பினர் |

மாநில அளவு அதிகாரமளிக்கப்பட்ட குழு

இத்திட்டத்தின் செயல்பாடுகள் மற்றும் பல்வேறு நடைமுறைகளை காலத்திற்கு ஏற்றவாறு ஆய்வு செய்வதற்கு தலைமைச் செயலரின் தலைமையில் கீழ்கண்ட உறுப்பினர்களைக் கொண்டு மாநில அளவில் அதிகாரம் கொண்ட குழு உருவாக்கப்பட்டுள்ளது.

அட்டவணை–3.9

| | | |
|---|---|---|
| 1 | அரசு தலைமைச் செயலர் | குழு தலைவர் |
| 2 | முதன்மைச் செயலர் மற்றும் வருவாய் நிர்வாக ஆணையர் | உறுப்பினர் செயலர் |
| 3 | அரசு கூடுதல் தலைமைச் செயலர் ஊரக வளர்ச்சி மற்றும் பஞ்சாயத்து ராஜ் துறை | உறுப்பினர் |
| 4 | அரசு கூடுதல் தலைமைச் செயலர் வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத் துறை | உறுப்பினர் |
| 5 | அரசு முதன்மைச் செயலர் , நிதித் துறை | உறுப்பினர் |
| 6 | அரசு முதன்மைச் செயலர் , தொழிலாளர் மற்றும் வேலைவாய்ப்புத் துறை | உறுப்பினர் |
| 7 | அரசு முதன்மைச் செயலர் , நகராட்சி நிருவாகம் மற்றும் குடிநீர் வழங்கல் துறை | உறுப்பினர் |

| | | |
|---|---|---|
| 8 | தலைமைச் செயல் அலுவலர் / ஆணையர் , தமிழ்நாடு மின்ஆளுமை முகமை | உறுப்பினர் |
| 9 | ஆணையர் , நகராட்சி நிருவாகம் | உறுப்பினர் |
| 10 | ஆணையர்,<br>சென்னை மாநகராட்சி | உறுப்பினர் |
| 11 | ஆணையர், போக்குவரத்து துறை | உறுப்பினர் |
| 12 | இயக்குநர் , ஊரக வளர்ச்சி | உறுப்பினர் |
| 13 | மேலாண்மை இயக்குநர்(TNCDW) | உறுப்பினர் |
| 14 | தொழிலாளர் நல ஆணையர் | உறுப்பினர் |
| 15 | இயக்குநர் , கிராம பஞ்சாயத்து | உறுப்பினர் |
| 16 | இயக்குநர், (சமூக பாதுகாப்புத் திட்டம்) | செயல் உறுப்பினர் |

திட்ட கண்காணிப்பு

- இத்திட்டத்தின் செயல்பாடுகள் மாநில அளவில் வருவாய் நிருவாக ஆணையரால் ஆய்வு செய்யப்படும் .
- இத்திட்டத்தின் செயல்பாடுகள் மாவட்ட அளவில் மாவட்ட ஆட்சியரால் ஆய்வு செய்யப்படும்

காப்பீட்டு தொகை செலுத்தும் கால முறைகளும் , அதிகாரங்களும்

- PMJJBY**( Pradhan Mantri Jeevan Jyoti Bima Yojana)** (ம) PMSBY (**Pradhan Mantri Suraksha Bima Yojana)** காப்பீட்டு திட்டங்களை ஒருங்கிணைந்து இந்தப் புதிய திட்டம் செயல்படுத்தப்படும்.

- 50% காப்பீட்டுத்தொகை ரூ.171/- (165+6) - மத்திய அரசின் சமூக பாதுகாப்பு நிதியில் இருந்து வழங்கப்படும். மீதி 50% காப்பீட்டுத்தொகை மாநில அரசால் வழங்கப்படும்.
- ஜூன் 1 முதல் அடுத்த ஆண்டு மே 31 வரை காப்பீட்டு ஆண்டாக கருதப்படும். ஒவ்வொரு வருடமும் ஜூன் 1-ம் தேதி காப்பீட்டு புதுப்பிக்கப்பட வேண்டும்.
- ஆண்டு காப்பீட்டு தொகை மத்திய அரசால் நிர்ணயிக்கப்படும்.

நிதி வழங்கும் முறை

- ஒவ்வொரு ஆண்டும் மேம்படுத்தப்பட்ட வறுமைக்கோட்டிற்கு கீழ் உள்ளோர் பட்டியலின் அடிப்படையில் காப்பீட்டுத்தொகை இந்திய ஆயுள் காப்பீட்டு கழகத்திற்கு அரசால் செலுத்தப்படும்.
- அரசால் இத்திட்டத்திற்கு தேவையான நிதி ஒதுக்கீட்டினை அவ்வப்போது ஆய்வு செய்து முடிவு செய்யப்படும்.

**3.17. விபத்து நிவாரணத் திட்டம் மற்றும் நலிந்தோர் நிவாரணத் திட்டம்**

மேற்படி புரட்சித் தலைவி அம்மா ஒருங்கிணைந்த விபத்து மற்றும் வாழ்நாள் காப்பீட்டு திட்ட தகுதி வரம்பின் கீழ் வராத

நபர்களுக்கு விபத்து நிவாரண திட்டம் மற்றும் நலிந்தோர் விபத்து திட்டத்தின் கீழ் ரூ.20000/- நிவாரணத் தொகையாக வழங்கப்பட்டு வருகிறது.

**3.18. இணையதளம் மூலம் சமூக பாதுகாப்பு திட்ட ஓய்வூதியத்திற்கு விண்ணப்பிக்கும் முறை**

வெளிப்படையான நிருவாகத்தினை மேம்படுத்தும் பொருட்டு சமூக பாதுகாப்பு திட்டத்தின் கீழ் ஓய்வூதியத்திற்கு விண்ணப்பிக்க இணையதள சேவை தொடங்கப்பட்டுள்ளது.

**3.19. விடுதலைப் போராட்ட வீரர்களுக்கும் முன்னாள் இந்திய தேசிய ராணுவத்தில் பணியாற்றியவர்களுக்கும் ஓய்வூதியம் மற்றும் ஏனைய பயன்கள்:**

நமது நாட்டின் விடுதலைப் போராட்டத்தில் பங்கெடுத்து மிகுந்த துன்பங்களை அனுபவித்த விடுதலைப் போராட்ட வீரர்களுக்கென தமிழ்நாடு அரசு பல நலத்திட்டங்களை முனைப்புடன் நடைமுறைபடுத்தி வருகிறது. சுதந்திர போராட்டத்தில் ஈடுபட்டு நாட்டிற்கு சேவை செய்தவர்களின் தியாகத்தை கவுரவிக்கும் வகையில் அவர்களுக்கு நிவாரணம் அளிக்கும் பொருட்டு, விடுதலைப் போராட்டத் தியாகிகள் ஓய்வூதியம், குடும்ப ஓய்வூதியம், மருத்துவ வசதி, இலவசப் பேருந்து வசதி, வேலைவாய்ப்பு மற்றும் வீடுகள் ஒதுக்கீடு செய்வதில் முன்னுரிமை அளிக்கப்பட்டு வருகின்றன.

விடுதலைப் போராட்ட வீரர்களின் தேசப்பற்று உணர்வை அங்கீகரிப்பதற்காக, அவர்களின் மேலான தியாகத்தைப் போற்றும் வகையில், தமிழ்நாடு அரசு விடுதலைப் போராட்ட தியாகிகள் ஓய்வூதியத் திட்டத்தை 01.10.1966 முதல் செயல்படுத்தி வருகிறது. இத்திட்டத்தின் கீழ், இந்திய தேசிய விடுதலைப் போராட்டத்தில் பங்கு கொண்டதற்காக மூன்று மாத காலத்திற்குக் குறையாமல் சிறை தண்டனை பெற்றவர்கள் அல்லது தடுப்புக் காவலில் வைக்கப்பட்டவர்களும், துப்பாக்கி சூட்டிலோ அல்லது விடுதலைப் போராட்டத்தின் போது காவலர் தடியடியிலோ இறந்தவர்களும் அல்லது நிரந்தரமாக ஊனமுற்றவர்களும் விடுதலைப் போராட்ட வீரர் ஓய்வூதியம் / குடும்ப ஓய்வூதியம் பெறத் தகுதியுடையவர்களாவர். பின்னர், இந்திய தேசிய இராணுவத்தில் பணியாற்றியவர்களுக்கும், 1946–ஆம் ஆண்டு கடற்படை கலகத்தில் பங்கு கொண்டவர்களுக்கும், மதுரை சதித்திட்ட வழக்கில் சிறைத் தண்டனை அடைந்தவர்களுக்கும் இத்திட்டம் நீட்டிக்கப்பட்டது. மேலும், விடுதலைப் போராட்டத்தின் போது பிடியாணை பிறப்பிக்கப்பட்டதைத் தவிர்ப்பதற்காகத் தலைமறைவாக இருந்து விடுதலைப் போராட்டத்தில் பங்கு கொண்டவர்களும், சொத்து பறிமுதல் செய்யப்பட்டவர்களும், அரசுப் பணியிலிருந்து பணி நீக்கம் செய்யப்பட்டவர்களும், அதற்கு ஆதாரமாக நீதிமன்ற அல்லது அரசு ஆதாரங்களின் அடிப்படையில் விடுதலைப் போராட்ட வீரர்களுக்கான ஓய்வூதியம் பெறுவர். 01.04.1980 முதல் ஓய்வூதியம் பெறுவதற்கு

நிர்ணயிக்கப்பட்ட தகுதி, மூன்று வாரக் கால சிறைவாசம் என குறைக்கப்பட்டது. இந்த ஓய்வூதியம் பெறுவதற்கான வருமான உச்ச வரம்பு 11.03.1983 அன்று முதல் நீக்கப்பட்டது.

விடுதலைப் போராட்ட வீரர்களின் வாழ்வாதாரத்தைக் கருத்திற் கொண்டு, அவர்களுக்கு வழங்கப்படும் ஓய்வூதியமானது அரசால் அவ்வப்போது உயர்த்தப்பட்டு வந்துள்ளது. மாண்புமிகு முதலமைச்சர் அவர்களின் அறிவிப்பின் படி தற்போது இவ்வோய்வூதியமானது ரூ.15,000/–லிருந்து ரூ.16,000/–ஆக 15.08.2019 முதல் உயர்த்தி வழங்கப்பட்டு வருகிறது.

மாநில அரசின் ஓய்வூதியம் பெற்று வருகின்ற விடுதலைப் போராட்ட வீரர் இறக்க நேரிட்டால், இந்த ஓய்வூதியத் தொகையானது அன்னாரின் மனைவிக்கு / கணவருக்கு / உரிய வயதடையாத குழந்தைகளுக்குத் தொடர்ந்து குடும்ப ஓய்வூதியமாக வழங்கப்படுகிறது. மேற்படி ஓய்வூதியம் பெற்று வருகின்ற விடுதலைப் போராட்ட வீரர்களின் மகனாயிருந்தால் 18 வயதுக்கு மேலும், மகளாயிருந்தால் 21 வயதுக்கு மேலும், சுயமாய் சம்பாதித்து வாழமுடியாத அளவிற்கு மனவளர்ச்சி குன்றியவராகவோ அல்லது மாற்றுத் திறனாளியாகவோ இருக்க நேர்ந்தால், அவர்களது வாழ்நாள் முழுமைக்கும் தொடர்ந்து ஓய்வூதியம் வழங்கப்படுகிறது. இறந்த சுதந்திரப் போராட்டத் தியாகிகளின் குடும்பத்திற்கு நிவாரணம் வழங்கும் பொருட்டு வழங்கப்படும் குடும்ப ஓய்வூதியத் தொகையும் அவ்வப்போது

உயர்த்தப்பட்டு வந்துள்ளது. மாண்புமிகு முதலமைச்சர் அவர்களின் உத்திரவின் படி தற்போது 15.08.2019 முதல் குடும்ப ஓய்வூதியத் தொகை ரூ.7,500/−லிருந்து ரூ.8,000/−ஆக உயர்த்தி வழங்கப்பட்டு வருகிறது.

விடுதலைப் போராட்ட இயக்கத்தில் பங்கு கொண்டு நாட்டிற்காக குறிப்பிடத்தக்க வகையில் சிறப்புற பணியாற்றி பெருமை பெற்றவர்களின் தியாகத்தைப் பாராட்டி அங்கீகரிக்கும் வகையில், அவர்களது வாரிசுகளுக்கும் சிறப்பு ஓய்வூதியமானது அரசால் வழங்கப்பட்டு வருகிறது. இந்த திட்டத்தின்படி, மாமன்னர் மருதுபாண்டியர் சகோதரர்களின் வழிதோன்றல்கள், மாமன்னர் வீரபாண்டிய கட்டபொம்மனின் நேரடி மற்றும் முதுநிலை வழிதோன்றல்கள், இராமநாதபுரம் மாவட்டத்தைச் சேர்ந்த மாமன்னர் முத்துராமலிங்க விஜயரகுநாத சேதுபதியின் தகுதியான வழிதோன்றல்கள் மற்றும் சுதந்திர போராட்ட தியாகி செக்கிழுத்த செம்மல் வ.உ.சிதம்பரனார் அவர்களின் வழிதோன்றல் ஒருவர் ஆகியோருக்கு வழங்கப்பட்டு வந்த ஓய்வூதியமானது கடந்த 15.08.2019 முதல் ரூ.7,500/−லிருந்து ரூ. 8,000/−ஆக உயர்த்தி வழங்கப்பட்டு வருகிறது. தற்போது, மாமன்னர் மருதுபாண்டியர் சகோதரர்களின் வழிதோன்றல்கள் 86 நபர்களுக்கும், மாமன்னர் வீரபாண்டிய கட்டபொம்மனின் நேரடி மற்றும் முதுநிலை வழிதோன்றல்கள் 4 நபர்களுக்கும், இராமநாதபுரம் மாவட்டத்தைச் சேர்ந்த மாமன்னர் முத்துராமலிங்க

விஜயரகுநாத சேதுபதியின் தகுதியான வழிதோன்றல் 56 நபர்களுக்கும் மற்றும் சுதந்திர போராட்ட தியாகி செக்கிழுத்த செம்மல் வ.உ.சிதம்பரனார் அவர்களின் வழிதோன்றல் ஒருவருக்கும் இந்த சிறப்பு ஓய்வூதியம் வழங்கப்பட்டு வருகிறது. மேற்கண்ட சிறப்பு ஓய்வூதியம் அவர்கள் வாழ்நாள் முழுவதற்கும் வழங்கப்படும்.

விடுதலைப் போராட்ட வீரர்களுக்கும் அவர்களது வாரிசுகளுக்கும் வழங்கப்படும் ஏனைய சலுகைகள் பற்றிய விவரம் பின்வருமாறு:

**அ) மருத்துவ வசதிகள்**

மத்திய அரசிடமிருந்தோ அல்லது மாநில அரசிடமிருந்தோ அல்லது இரண்டு அரசுகளிடமிருந்தோ ஓய்வூதியம் பெற்று வருகின்ற அனைத்து விடுதலைப் போராட்ட வீரர்களுக்கும் / விதவைகளுக்கும் / உரிய வயதடையாத குழந்தைகளுக்கும் மருத்துவப்படி வழங்கப்பட்டு வருகிறது. இந்த தொகையானது மாதமொன்றிற்கு ரூ.100/–லிருந்து ரு.500/–ஆக உயர்த்தப்பட்டு 15.08.2012 முதல் வழங்கப்பட்டு வருகிறது. மேற்கூறிய விடுதலைப் போராட்ட வீரர்கள் அல்லது அவரது வாரிசுதாரர்கள் மருத்துவ சிகிச்சைக்காக பழைய அரசு மருத்துவமனைகளுக்கு வரும்போது 'அ' வகுப்பு வசதிகளுடன் கூடிய இலவச மருத்துவ சிகிச்சையும், புதிய மருத்துவமனைகளில் கட்டணப் பிரிவுகளில்

எந்தவித கட்டணமும் இல்லாமல் உயர்தர சிகிச்சையும் வழங்கப்படுகிறது.

**ஆ) போக்குவரத்து வசதி மற்றும் வீட்டு வசதி**

மத்திய மற்றும் மாநில அரசு ஓய்வூதியம் பெறும் விடுதலைப் போராட்ட வீரர்களுக்கும், விடுதலைப் போராட்ட வீரர்களின் விதவைகள் மற்றும் ஓய்வூதியம் பெற்று வரும் வாரிசுகளுக்கும் அரசுப் போக்குவரத்துக் கழகப் பேருந்துகளில் இலவசமாகப் பயணம் செய்யவும் மற்றும் தமிழ்நாடு வீட்டு வசதி வாரியம் ஒதுக்கீடு செய்யும் வீடுகளில் / மனைகளில் / அடுக்கு மாடி குடியிருப்புகளில், விடுதலைப் போராட்ட வீரர்களுக்கு முன்னுரிமையின் அடிப்படையில் வீடுகள் ஒதுக்கப்படுகிறது.

**இ) வேலை வாய்ப்பில் முன்னுரிமை**

வேலை வாய்ப்பு அலுவலகங்களிலிருந்து அரசுத் துறைகளுக்கும் மற்றும் அரசு சார்ந்த நிறுவனங்களுக்கும் வேலை வாய்ப்புக்குத் தகுதியான பெயர் பட்டியல் அனுப்பப்படும் போது விடுதலைப் போராட்டத் தியாகிகளின் சட்டப்படியான வாரிசுகளுக்கு முன்னுரிமை அளிக்கப்பட்டு வருகிறது.

**ஈ) ஈமச்சடங்குச் செலவு**

விடுதலைப் போராட்ட வீரர் இறந்தால், அவர்தம் ஈமச்சடங்குச் செலவுக்காக விடுதலைப் போராட்ட வீரரின்

மனைவிக்கு அல்லது அவருடைய நேரடி வாரிசுதாரர்களுக்கு உதவித் தொகையாக ரூ.5000/- உடனடியாக வழங்கப்பட்டு வருகிறது. இறந்துபோன விடுதலைப் போராட்ட வீரர்களுக்கு வட்டாட்சியருக்கு குறையாத பதவியிலுள்ள வருவாய்த்துறை அலுவலர் ஒருவரால் அரசு சார்பில் மறைந்தவரின் உடல் மீது மலர்வளையம் வைத்து அஞ்சலி செலுத்தப்படுகிறது. மாநில அரசின் / மத்திய அரசின் ஓய்வூதியம் அல்லது இவ்விரண்டு ஓய்வூதியங்களையும் பெறுகின்ற விடுதலைப் போராட்ட வீரர்கள் அனைவருக்கும் இது பொருந்தும்.

தற்போது மாநில அரசின் பல்வேறு வகையான ஓய்வூதியங்களை பெறும் விடுதலைப் போராட்ட வீரர்களின் எண்ணிக்கை பின்வருமாறு:-

அட்டவணை-3.10

| வ. எண் | ஓய்வூதிய வகைகள் | எண்ணிக்கை |
|---|---|---|
| 1 | மாநில ஓய்வூதியம் பெறும் விடுதலைப் போராட்ட வீரர்கள் (மாதமொன்றிற்கு ரூ.16,000/- மற்றும் ரூ.500/- மருத்துவப்படி) | 181 |
| 2 | மாநில அரசின் குடும்ப ஓய்வூதியம் பெறும் விடுதலைப் போராட்ட வீரர்களின் வாரிசுதாரர்கள் (மாதமொன்றிற்கு ரூ.8,000/- மற்றும் ரூ.500/- | 994 |

| வ. எண் | ஓய்வூதிய வகைகள் | எண்ணிக்கை |
|---|---|---|
| | மருத்துவப்படி) | |
| 3 | மாமன்னர் மருதுபாண்டியர் சகோதரர்களின் வழிதோன்றல்கள் (மாதமொன்றிற்கு ரூ.8,000/– வீதம்) | 86 |
| 4 | மாமன்னர் வீரபாண்டிய கட்டபொம்மன் வழிதோன்றல்கள் (மாதமொன்றிற்கு ரூ.8,000/– வீதம்) | 4 |
| 5 | மாமன்னர் முத்துராமலிங்க விஜய ரகுநாத சேதுபதியின் வழிதோன்றல்கள் (மாதமொன்றிற்கு ரூ.8,000/– வீதம்) | 56 |
| 6 | சுதந்திர போரட்ட தியாகி செக்கிழுத்த செம்மல் வ. உ. சிதம்பரனார் அவர்களின் வழிதோன்றல் (மாதமொன்றிற்கு ரூ.8,000/– வீதம்) | 1 |

மத்திய அரசின் ஓய்வூதியத் திட்டம்

15.08.1972 முதல் மத்திய அரசும் விடுதலைப் போராட்ட வீரர்கள் ஓய்வூதியத் திட்டத்தை (ஸ்வதந்திரதா சைனிக் சம்மான் பென்சன்) செயல்படுத்தி வருகிறது. இத்திட்டத்தின்படி வழங்கப்படும் சலுகைகள் பின்வருமாறு:–

அ) மத்திய அரசு விடுதலைப் போராட்ட வீரர் ஓய்வூதியம் பெறும் ஒவ்வொருவருக்கும் மாதமொன்றிற்கு

ரூ.26,000/- ஓய்வூதியத்துடன் அகவிலைப்படியும் சேர்த்து வழங்கப்பட்டு வருகிறது. இவ்வாறு மத்திய அரசு ஓய்வூதியம் பெற்று வரும் விடுதலைப் போராட்ட வீரர்கள் மற்றும் வாரிசுதாரர்களின் எண்ணிக்கை 876 ஆகும்.

ஆ) மத்திய அரசு விடுதலைப் போராட்ட வீரர் ஓய்வூதியம் / மத்திய அரசு குடும்ப ஓய்வூதியம் பெறுபவருக்கு, மாநில அரசின் நிதியிலிருந்து, மாதமொன்றிற்கு ரூபாய் 500/- ஓய்வூதியமாக வழங்கப்பட்டு வருகிறது.

மேற்குறிப்பிட்ட விடுதலைப் போராட்ட வீரர் ஓய்வூதியத் திட்டங்களுக்காக 2020-2021 ஆம் ஆண்டிற்கு ரூ.19,73,46,000/- நிதி ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது.

**அட்டவணை 3.11**

மாநில அரசால் விடுதலைப் போராட்ட வீரர்களுக்கு மற்றும் குடும்பத்தினருக்கு வழங்கப்படும் மாதாந்திர ஓய்வூதியத் தொகை விவரம்

| வ. எண் | கால அளவு | ஓய்வூதியத் தொகை (ரூபாயில்) | குடும்ப ஓய்வூதியத் தொகை (ரூபாயில்) |
|---|---|---|---|
| 1. | 01.10.1966 முதல் | 50/- | 50/- |
| 2. | 15.08.1972 முதல் | 75/- | 75/- |
| 3. | 01.04.1979 முதல் | 100/- | 100/- |

| வ. எண் | கால அளவு | ஓய்வூதியத் தொகை (ரூபாயில்) | குடும்ப ஓய்வூதியத் தொகை (ரூபாயில்) |
|---|---|---|---|
| 4. | 25.01.1981 முதல் | 150/- | 150/- |
| 5. | 10.06.1986 முதல் | 250/- | 250/- |
| 6. | 01.08.1989 முதல் | 350/- | 350/- |
| 7. | 01.01.1991 முதல் | 400/- | 400/- |
| 8. | 01.08.1992 முதல் | 1,000/- | 500/- |
| 9. | 01.09.1995 முதல் | 1,500/- | 750/- |
| 10. | 15.08.1997 முதல் | 3,000/- | 1,500/- |
| 11. | 01.05.2007 முதல் | 4,000/- | 2,000/- |
| 12. | 01.09.2009 முதல் | 5,000/- | 2,500/- |
| 13. | 15.08.2012 முதல் | 7,000/- | 3,500/- |
| 14. | 01.08.2013 முதல் | 9,000/- | 4,500/- |
| 15. | 15.08.2014 முதல் | 10,000/- | 5,000/- |
| 16. | 15.08.2015 முதல் | 11,000/- | 5,500/- |
| 17. | 15.08.2016 முதல் | 12,000/- | 6,000/- |
| 18. | 15.08.2017 முதல் | 13,000/- | 6,500/- |
| 19. | 15.08.2018 முதல் | 15,000/- | 7,500/- |
| 20. | 15.08.2019 முதல் | 16,000/- | 8,000/- |

### 3.20. குறைத்தீர்க்கும் வழிமுறைகள்

தமிழ்நாடு அரசு, பொது மக்களின் குறைகளைத் தீர்ப்பதில் பல்வேறு நடைமுறைகளை செயல்படுத்தி வருகின்றது. பொதுமக்களின் குறைதீர்வு நடைமுறையை செம்மைப்படுத்த ஏதுவாக பல்வேறு கண்காணிப்பு மற்றும் தொடர் நடவடிக்கைகள் மூலமாகவும், பொது மக்களிடமிருந்து பெறப்படும் கருத்துக்களின் அடிப்படையிலும் தமிழ்நாடு அரசு குறைதீர்வு நடைமுறைகளை முன்னுரிமை அளித்து செயல்படுத்தி வருகின்றது. மேலும், குறைதீர்வு மனுக்கள் மீது மேற்கொள்ளப்படும் நடவடிக்கைகள் பன்முனை யுக்திகளையும், அனைத்து துறைகளையும் ஒருங்கிணைத்து செயல்படுத்துவதால், அரசின் சேவைகள் மிக எளிதாக விரைவில் மக்களைச் சென்றடைய வழிவகை செய்கிறது.

### 3.21. மக்கள் குறைதீர்க்கும் நாள்

ஒவ்வொரு திங்கட்கிழமையும் அனைத்து மாவட்ட ஆட்சித் தலைவர்கள் / வருவாய்க் கோட்ட அலுவலர்கள் மற்றும் வட்டாட்சியர்கள், தங்களின் தலைமை இடங்களில் இருந்து பொது மக்களிடம் மனுக்களைப் பெற்று, அவர்களின் குறைகளை தீர்க்க நடவடிக்கை எடுத்து வருகின்றனர். இத்திட்டத்தின் கீழ், மனுக்கள் பெறப்பட்ட நாள், தீர்வு செய்யப்பட்ட விவரம் மற்றும் நிலுவையில் உள்ள மனுக்கள் விவரம். இதற்கென உருவாக்கப்பட்ட ஒரு மென்பொருள் மூலம் பதிவு

செய்யப்படுகின்றன. இதன் மூலம், மனுக்களின் தற்போதைய நிலைமையை இணையதளம் மூலம் பொதுமக்கள் அறிந்து கொள்ளலாம்.

### 3.22. மக்கள் தொடர்பு முகாம்

பொதுமக்களின் குறைகள் உடனடியாக தீர்க்கப்படவேண்டும் என்ற குறிக்கோளுடன் , மக்கள் தொடர்பு முகாம் திட்டம் 1969–ஆம் ஆண்டு இந்தியாவிலேயே முதல் முறையாக தமிழ்நாட்டில் தொடங்கப்பட்டு, ஒவ்வொரு மாதத்தின் இரண்டாவது புதன் கிழமை நடத்தப்படுகிறது. மாவட்ட ஆட்சியரின் தலைமையில் ஒட்டுமொத்த மாவட்ட நிருவாகமும் ஒரு குழுவாக சென்று மக்களின் குறைகளுக்கு தீர்வு காண்பதோடு மட்டுமல்லாமல் இதர அரசு சேவைகளும் வழங்கப்பட்டு வருவதே இத்திட்டத்தின் சிறப்பு அம்சம் ஆகும். இம்முகாம்களை மேலும் பயனுள்ளதாக செயல்படுத்த, 1) தனித்துணை ஆட்சியர் (சமூக பாதுகாப்புத் திட்டம்), 2) வருவாய் கோட்ட அலுவலர், 3) மாவட்ட ஆதிதிராவிடர் மற்றும் பழங்குடியினர் நல அலுவலர் மற்றும் 4) மாவட்ட பிற்படுத்தப்பட்டோர் மற்றும் சிறுபான்மை நல அலுவலர் ஆகியோர் அடங்கிய குழு ஒன்று தேர்ந்தெடுக்கப்பட்ட கிராமங்களுக்கு சென்று பொதுமக்களிடம் இருந்து மனுக்களைப் பெறுவதற்காக, மாதத்தின் மூன்றாவது புதன்கிழமை அனுப்பி வைக்கப்படுகின்றனர். பெறப்பட்ட மனுக்கள் தொடர்புடைய துறைகளுக்கு அனுப்பப்பட்டு, அதன் மீதான இறுதி ஆணைகள்

மக்கள் தொடர்பு முகாம் நாளன்று பொதுமக்களுக்கு வழங்கப்படுகிறது. அம்முகாம்களிலேயே முதியோர் உதவித்தொகை பெறுவதற்கான ஆணைகள், வீட்டுமனைப் பட்டா மற்றும் பட்டா மாறுதல் ஆணைகள் மற்றும் இதர அரசு நலத்திட்ட உதவிகள் அனைத்தும் வழங்கப்பட்டு வருகிறது.

### 3.23. அம்மா திட்டம்

அம்மா திட்டம் அனைத்து கிராமங்களிலும், அடித்தட்டு மக்களுக்கு அதிக சேவையை வழங்கும் உன்னதமான திட்டமாகும். இத்திட்டத்தில் வட்டாட்சியர் தலைமையிலான குழுவானது, வாரந்தோறும் வெள்ளிக்கிழமையன்று குறிப்பிடப்பட்ட வருவாய் கிராமத்திற்கு சென்று நேரடியாக பொதுமக்களிடமிருந்து மனுக்களைப் பெற்று உடனடி தீர்வு காணும் மனுக்கள் மீது அன்றைய தினமே தீர்வு காணப்படுகிறது. இத்திட்டத்தின் கீழ் அனைத்து மாவட்ட ஆட்சித் தலைவர்களால், அரசின் பல்வேறு துறைகளை ஒருங்கிணைத்து கிராமங்களில் முகாம்கள் நடத்தப்பட்டு, மக்களின் குறைகளுக்குத் தீர்வு காணப்படுகிறது. இது ஒரு நிருவாக புரட்சியாக அமைந்துள்ளது. மேலும், செப்டம்பர் 2016 முதல், இம்முகாம்களில் மக்கள் அரசின் அனைத்து துறைகளின் பயன்களைப் பெறும் வகையில் மருத்துவ முகாம்கள், கண்பரிசோதனை, பல்மருத்துவம், கால்நடை மருத்துவ முகாம்கள், பிரதம மந்திரியின் பசல்பீமா யோஜனா (பயிர் காப்பீடு) திட்டத்தின் கீழ் சேர்த்தல், ஆதார்

பதிவுகள் மற்றும் தனிநபர் பயன்பெறும் திட்டங்களுக்கு முக்கியத்துவம் அளித்தும் அம்மா திட்ட முகாம்கள் சிறப்பாக செயல்படுத்தப்பட்டு வருகின்றன. 2012 முதல் 2020 வரை 64,079 முகாம்கள் நடத்தப்பட்டு 64,15,903 மனுக்கள் பெறப்பட்டு 64,09,217 மனுக்களுக்கு தீர்வு காணப்பட்டுள்ளது.

**3.24. மாற்றுத்திறனாளிகளுக்கான சிறப்பு குறைதீர்க்கும் நாள்**

அரசாணை (பல்வகை) எண்.300, வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மை, நாள். 21.08.2018–ன்படி, மாற்றுத்திறனாளிகளுக்கான சிறப்பு குறை தீர்க்கும் கூட்டம், ஒவ்வொரு மாதமும் வருவாய்க் கோட்டாட்சியராலும், இரண்டு மாதங்களுக்கு ஒரு முறை மாவட்ட ஆட்சியர்களாலும், மூன்று மாதங்களுக்கு ஒரு முறை, வருவாய் நிருவாக ஆணையராலும் நடத்தப்பட்டு வருகிறது.

**3.25 வட்ட அலுவலகங்களில் ஆன்லைன் மனு கண்காணிப்பு அமைப்பு (Taluk Online Petition Monitoring System (TOPMS)**

அனைத்து வட்டாட்சியர், கோட்டாட்சியர் மற்றும் மாவட்ட ஆட்சியர் அலுவலகங்களில் பெறப்படும் பொதுமக்களின் குறைதீர்வு மனுக்களின் நிலையினை அறியவும், அம்மனுக்களுக்கு தீர்வு காணவும், மாநில அளவில் வலைத்தளம் அடிப்படையிலான பயன்பாட்டு மென்பொருள் (Taluk Online Petition Monitoring System (TOPMS) அனைத்து வட்டங்களிலும்

தொடங்கப்பட்டு நடைமுறைப்படுத்தப்பட்டு வருகிறது. இந்த நடைமுறை இணையதளம் மற்றும் குறுஞ்செய்தி மூலம் வட்ட அலுவலங்களில் பெறப்படும் மனுக்களின் நிலை அறிய வழிவகை செய்கிறது.

**3.26. வெளிநாடுவாழ் இந்தியர்களுக்கான தனி இணையவழி மனு பரிசீலனை முகப்பு செயல்படுத்துதல்**

மாண்புமிகு தமிழக முதலமைச்சர் அவர்களின் உத்தரவின்படி தமிழக அரசு பொதுமக்களுக்கான மனு பரிசீலனை முகப்பு என்ற இணையவழித் திட்டத்தை 2018–ஆம் ஆண்டு முதல் வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மை துறையின் மூலம் செயல்படுத்தி வருகிறது. இம்முறையில், பொது மக்கள் தங்கள் மனுக்களை/ குறைகளை இந்தியாவில் எந்த இடத்திலிருந்தும் இணையவழி மூலம் பதிவு செய்யலாம். மேலும், தங்களின் மனுக்களின் நிலையினை இணையவழி மூலம் அறிய இயலும். இந்த வசதியினை வெளிநாடு வாழ் இந்தியர்களுக்கும் நீட்டிக்கும் பொருட்டு, வெளிநாடு வாழ் இந்தியர்களுக்கென தனி இணையதளம் ஒன்று உருவாக்கப்பட்டு, செயல்படுத்தப்பட்டு வருகிறது. இம்முறையில் வெளிநாடு வாழ் இந்தியர்கள் தங்களது மனுக்கள்/குறைகளை சேவைக் கட்டணம் இன்றி பதிவு செய்ய ஏதுவாக, அவர்களது மின்னஞ்சல் முகவரிக்கு கடவு எண் அனுப்பப்படுகிறது. வெளிநாடு வாழ் இந்தியர்கள் தங்களது

கோரிக்கை குறித்த மனுக்களை சம்மந்தப்பட்ட துறைக்கு அனுப்புவதோடு அதன் நிலையையும் அறிந்து கொள்ள இயலும்.

## 3.27. முதலமைச்சரின் சிறப்பு குறைதீர்க்கும் திட்டம்

பல்வேறு மக்கள் குறைத்தீர்வு முறைகள் இருந்தாலும் பொதுமக்களின் குறைகள் நிலுவையில் இருப்பதை அறிந்து மாண்புமிகு தமிழக முதலமைச்சர் அவர்களின் சீரிய சிந்தனையில் உதித்த திட்டம் இதுவாகும். மாண்புமிகு தமிழக முதலமைச்சர் அவர்களால் நேரடியாக இந்த சிறப்பு குறைதீர்க்கும் திட்டம் 19.08.2019 அன்று சேலம் மாவட்டம் எடப்பாடி வட்டத்தில் தொடங்கி வைக்கப்பட்டதனை தொடர்ந்து அனைத்து மாவட்டங்களிலும் இத்திட்டம் செயல்படுத்தப்பட்டது. இத்திட்டத்தினைப் பற்றி அனைத்து நகர்புற வார்டுகளிலும், கிராமங்களிலும் உரிய விழிப்புணர்வு ஏற்படுத்தி, வருவாய்த்துறை, ஊரக வளர்ச்சித்துறை / நகர்புற வளர்ச்சித்துறை மற்றும் பிற துறைகளைச் சார்ந்த அலுவலர்கள் ஒரு குழுவாக பொதுமக்களை நேரடியாக சந்தித்து அவர்களிடமிருந்து மனுக்களைப் பெற்றனர். இவ்வாறு பெறப்பட்ட மனுக்கள் அனைத்தும் கணினியில் பதிவேற்றம் செய்யப்பட்டு சம்மந்தப்பட்ட துறைக்கு ஒரு வார காலத்திற்குள் அனுப்பப்பட்டது. சம்மந்தப்பட்ட துறையினரால் இம்மனுக்களின் மீது முன்னுரிமை அடிப்படையில் ஒரு மாத காலத்திற்குள் தீர்வு காண நடவடிக்கை எடுக்கப்பட்டது. அவ்வாறு நடவடிக்கை எடுக்கப்பட்ட பயனாளிகளுக்கு செப்டம்பர் மற்றும்

அக்டோபர் 2019–ல் வட்ட அளவில் விழாக்கள் நடத்தப்பட்டு நலத்திட்ட பயன்கள் வழங்கப்பட்டது. மேலும், பொதுமக்களின் அடிப்படைத் தேவைகளான சாலை வசதி, தெரு விளக்கு, பொது சுகாதாரம், குடிநீர் தேவை ஆகியவற்றிற்கும் இச்சிறப்பு குறைத்தீர்க்கும் முகாம்களில் தீர்வு காணப்பட்டுள்ளது. இந்த முகாம்களின் மூலமாக மொத்தம் 9,77,508 மனுக்கள் பொது மக்களிடம் இருந்து பெறப்பட்டது. நிலம் சார்ந்து பெறப்பட்ட மொத்த 2,92,096 மனுக்களில் 1,87,992 மனுக்கள் ஏற்கப்பட்டுள்ளது. சமூக பாதுகாப்புத் திட்டத்தின் கீழ் பெறப்பட்ட 3,98,352 மனுக்களில் 1,44,354 மனுக்கள் ஏற்கப்பட்டுள்ளது. சமூக நலத்திட்டத்தின் கீழ் பெறப்பட்ட 22,678 மனுக்களில் 12,350 மனுக்கள் ஏற்கப்பட்டுள்ளது. பொது விநியோக திட்டம் தொடர்பாக பெறப்பட்ட 24,183 மனுக்களில் 10,062 மனுக்கள் ஏற்கப்பட்டுள்ளது. ஆதிதிராவிடர் மற்றும் பிற்படுத்தப்பட்டோர் நலவாழ்வு தொடர்பாக பெறப்பட்ட 10,614 மனுக்களில் 7,747 மனுக்கள் ஏற்கப்பட்டுள்ளது. ஊரக மற்றும் நகர்புற உட்கட்டமைப்பு தொடர்பாக பெறப்பட்ட 62,145 மனுக்களில் 52,698 மனுக்கள் ஏற்கப்பட்டுள்ளது. அடிப்படை வசதிகள் தொடர்பாக பெறப்பட்ட 16,305 மனுக்களில் 13,922 மனுக்கள் ஏற்கப்பட்டுள்ளது. விவசாயம் மற்றும் கால்நடைகள் தொடர்பாக பெறப்பட்ட 10,600 மனுக்களில் 6,478 மனுக்கள் ஏற்கப்பட்டுள்ளது. மற்றும் இதர பொருள் தொடர்பாக பெறப்பட்ட 85,057 மனுக்களில், 48,974 மனுக்கள் ஏற்கப்பட்டுள்ளது.

இத்திட்டத்தை செயல்படுத்த அரசு ஒருவட்டத்திற்கு ஒரு இலட்சம் வீதம் மொத்தம் 3.05 கோடி நிதி ஒதுக்கீடு செய்துள்ளது .

### 3.28. பொங்கல் பண்டிகைக்காக வழங்கப்படும் விலையில்லா வேட்டிகள் சேலைகள் வழங்கும் திட்டம்

தமிழக அரசு, கைத்தறி செநவாளர்களுக்கு ஆண்டு முழுவதும் தொடர்ந்து வேலைவாய்ப்பு வழங்குவதற்காகவும், கிராமப்புற மற்றும் நகர்ப்புறங்களில் வாழும் ஏழை எளிய மக்களுக்கு தமிழர் திருநாளாம் பொங்கல் பண்டிகைக்காக விலையில்லா வேட்டி, சேலை வழங்கும் திட்டம் என இரண்டு பயன்களுக்கான திட்டத்தினை 1983–ஆம் ஆண்டு அப்போதைய முதலமைச்சர் பாரதரத்னா டாக்டர் எம்.ஜி.ராமச்சந்திரன் அவர்களால் தொடங்கப்பட்டு, ஒவ்வொரு ஆண்டும் தொடர்ந்து செயல்படுத்தப்பட்டு வருகிறது. 2004–ஆம் ஆண்டு முதல் அரிசி அட்டைப் பெற்றுள்ள அனைவருக்கும் இலவச வேட்டி, சேலை வழங்க விரிவுபடுத்தப்பட்டுள்ளது. கடந்த 2012–ஆம் ஆண்டு முதல், இத்திட்டத்தின் பெயரான இலவச வேட்டி/ சேலை வழங்கும் திட்டம் என்பதை மாற்றி, "விலையில்லா வேட்டி/ சேலை வழங்கும் திட்டம்" என பெயரிடப்பட்டு தொடர்ந்து இத்திட்டம் தமிழக அரசால் செயல்படுத்தப்பட்டு வருகிறது. 2020–ஆம் ஆண்டு பொங்கல் திருநாளை முன்னிட்டு விலையில்லா வேட்டிகளும், சேலைகளும் பயனாளிகளுக்கு வழங்குவதற்காக ரூ.484.25

கோடி அரசால் நிதி ஒதுக்கீடு செய்யப்பட்டு, 1.67 கோடி விலையில்லா சேலைகளும், 1.67 கோடி விலையில்லா வேட்டிகளும் பயனாளிகளுக்கு வழங்கப்பட்டுள்ளது.

தகுதி

விலையில்லா வேட்டி / சேலை அனைத்து அரிசி அட்டைதாரர்கள், கிராம கைவினைஞர்கள், மீனவர்கள், நிலமற்ற ஏழை விவசாயிகள், விவசாயம் சார்ந்த கூலி வேலை செய்பவர்கள், கிராமம் மற்றும் நகர்ப்புறங்களில் வசிக்கும் வறுமைக் கோட்டிற்கு கீழுள்ள மக்கள் அனைவருக்கும் இச்சேவை வழங்கப்பட்டு வருகிறது

**3.29.** பள்ளிகள் மூலமாக மாணவர்களுக்கு வழங்கப்படும் சான்றிதழ்கள்

வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத் துறையின் மூலம் மாணவர்களுக்கு தேவையான சான்றிதழ்கள் வழங்கப்பட்டு வருகிறது. பள்ளிச் சேர்க்கை மற்றும் உதவித்தொகை பெறுவதற்கு தேவையான சான்றிதழ்கள் வருமானச் சான்றிதழ், சாதிச் சான்றிதழ் மற்றும் இருப்பிடச் சான்றிதழ்கள் இணைய வழியில் பள்ளிகள் மூலமாக ஒவ்வொரு வருடமும் ஜனவரி மாதத்தில் வழங்கப்பட்டு வருகிறது. 01.04.2016 முதல் 19.03.2020 வரை 6–ம் வகுப்பு, 10–ம் வகுப்பு மற்றும் 12–ம் வகுப்பு மாணவ

மாணவிகளுக்கு இணையதளம் மூலம் 1,94,00,872 சான்றிதழ்கள் வழங்கப்பட்டுள்ளன.

### 3.30. மின்னணு சான்றிதழ்கள் வழங்கும் திட்டம்

வருவாய்த் துறையினை நாடி வரும் பொதுமக்களுக்கு விரைவான சேவையினை அளித்திடும் வகையில், தகவல் தொழில் நுட்பத்துறை மற்றும் தேசிய தகவல் மையத்தின் தொழில் நுட்ப உதவியோடு அனைத்து மாவட்டங்களிலும் மின் ஆளுமைத் திட்டம் செயல்படுத்தப்பட்டு வருகிறது.

மாநிலம் முழுவதும் 12,733 பொது சேவை மையங்கள் e–Distrct (Common Service Centres) வாயிலாக கீழ்காணும் 20 வகையான சான்றுகள் மின்னணு முறையில் வழங்கப்பட்டு வருகின்றன.

பெறப்படும் போன்ற 5 வகையான சான்றிதழ்கள் மின்னணு முறையில் வழங்கப்பட்டு வருகிறது.

மேலும் அரசாணை (நிலை) எண். 260, வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மை (வ.நி 3(2)) துறை, நாள் 17.08.2017–ன்படி, கூடுதலாக கீழ்கண்ட 15 சேவைகளை மின்னாளுமைத் திட்டத்தின் கீழ் கொண்டுவரப்பட்டுள்ளது.

1) சாதிச்சான்றுகள்
2) வருமானச் சான்றுகள்,
3) இருப்பிடச் சான்றுகள்,

4) முதல் தலைமுறை பட்டதாரி சான்றுகள்

5) கணவனால் கைவிடப்பட்ட பெண்கள் சான்றுகள்

6) விவசாய வருமான சான்றிதழ்

7) சிறு, குறு விவசாயி சான்றிதழ்

8) கலப்புத் திருமணச் சான்றிதழ்

9) விதவைச் சான்றிதழ்

10) வேலையில்லாதவர் என்பதற்கான சான்றிதழ்

11) குடிபெயர்வு சான்றிதழ்

12) இயற்கை இடர்பாடுகளினால் மாணவர்கள் பள்ளி (ம) கல்லூரி சான்றிதழ்களை இழந்தமையை உறுதி செய்யும் சான்று

13) ஆண் குழந்தை இல்லை என்பதற்கான சான்றிதழ்

14) திருமணம் ஆகாதவர் என்பதற்கான சான்றிதழ்

15) வாரிசு சான்றிதழ்

16) வசிப்பிடச் சான்றிதழ்

17) சொத்து மதிப்பு சான்றிதழ்

18) அடகு வணிகர் உரிமம் சான்றிதழ்

19) கடன் கொடுப்போர் உரிமம் மற்றும்

20) இதர பிற்படுத்தப்பட்ட வகுப்பினர் வகுப்புச் சான்றிதழ்

மேற்கண்ட சேவைகளோடு தற்காலிய பட்டாசு உரிமம், பொருளாதார நலிவடைந்தோர் பிரிவுச் சான்றிதழ், ஜெயின் சிறுபான்மையினர் சான்றிதழ், வெளிநாடு வாழ் இந்தியர் இணையதளம், சமூக பாதுகாப்புத்திட்ட ஓய்வூதிய இணையவழி விண்ணப்பம் போன்ற சேவைகளும் தற்போது இணையவழியில் வழங்கப்பட்டு வருகிறது.

### 3.31. மக்கள் தொகை கணக்கெடுப்பு

இந்தியாவில் மக்கள் தொகை கணக்கெடுப்பு 1872–ல் துவங்கப்பட்டு, 1881 ஆம் ஆண்டு முதல் 10 ஆண்டுக்கு ஒருமுறை தொடர்ந்து நடைபெற்று வருகிறது. 15வது மக்கள் தொகை கணக்கெடுப்பு 2011–ல் நடைபெற்றது. 2021–ல் நடைபெற இருப்பது இந்தியாவின் 16வது மக்கள் தொகை கணக்கெடுப்பும் சுதந்திர இந்தியாவின் 8–வது மக்கள் தொகை கணக்கெடுப்பு ஆகும். 2021 –ஆம் ஆண்டு நடைபெறவிருக்கும் மக்கள் தொகை கணக்கெடுப்பிற்காக அனைத்து முன்னேற்பாடு நடவடிக்கைகள் மத்திய அரசு பல்வேறு அமைச்சகங்களுடன் கலந்தாலோசித்து இப்பணி துவங்குவதற்கான ஆயத்த பணிகளை முடித்துள்ளது. தமிழ்நாட்டில் இக்கணக்கெடுப்புப் பணி தொடர்பாக தக்க ஆலோசனைகள் வழங்குவதற்கு வருவாய் நிருவாக ஆணையரை தொழில்நுட்பம் சார்ந்த அறிவுரை வழங்கும் குழுவில் (Technical Advisory Committee) உறுப்பினராக சேர்த்து அரசாணை எண் 62, பொது (சட்ட அலுவலர்கள்) துறை, நாள் 18.1.2019–ல் ஆணைகள் வெளியிட்டுள்ளது.

## 4. பேரிடர் அபாய குறைப்பு, தணிப்பு மற்றும் மேலாண்மை

### 4.1. தமிழ்நாட்டின் பேரிடர் அபாய நிலைமை

தமிழ்நாடு 13 மில்லியன் எக்டேர் நிலப் பரப்பு மற்றும் 1076 கிலோ மீட்டர் நீளமுள்ள கடற்கரையினை கொண்ட மாநிலமாகும். இம்மாநிலம், இயற்கை பேரிடர்களான சூறாவளி, புயல், வெள்ளப் பெருக்கு, வறட்சி ஆகியவற்றின் பாதிப்புகளுக்கு உள்ளாகும் பூகோள அமைப்பைக் கொண்டது. இந்த நூற்றாண்டின் துவக்கத்திலிருந்து இயற்கை பேரழிவுகளால் தமிழ்நாடு தொடர்ந்து கடுமையாக பாதிக்கப்பட்டுள்ளது. 2004 ஆம் ஆண்டில் ஏற்பட்ட சுனாமிப்பேரலையால் பல உயிர் இழப்புகளும் உட்கட்டமைப்புகளுக்கு சேதங்களும் ஏற்பட்டன. 2015-ல் ஏற்பட்ட வெள்ளப் பெருக்கு காரணமாக கடலூர், நாகப்பட்டினம் மாவட்டங்கள், சென்னை மற்றும் அதன் சுற்று வட்டார பகுதிகள் பாதிப்புக்குள்ளாகின. தானே (2011), நீலம் (2012), வார்தா (2016), ஒக்கி (2017), கஜா (2018) புயல்கள் காரணமாக பல மாவட்டங்களில் ஏற்பட்ட சேதங்கள், 2016-17ஆம் ஆண்டில் நிலவிய கடும் வறட்சி ஆகியவை கடந்த இருபது ஆண்டுகளில் தமிழகத்தை பாதித்த முக்கியமான பேரிடர்கள் ஆகும். தமிழக அரசு முழுமையான அணுகுமுறையுடன் பேரிடர்கள், அபாயம் மற்றும் பாதிப்புகள் ஆகியவற்றைப் பதிவு செய்து, பாதிப்புகளை குறைக்க மேற்கொள்ள வேண்டிய தணிப்பு நடவடிக்கைகளையும் உறுதி செய்கிறது. மேலும்,

பாதிக்கப்படக்கூடிய பகுதிகளில் வசிக்கும் மக்களின் பேரிடர்களை எதிர்கொள்ளும் திறனை மேம்படுத்துவதற்கான நடவடிக்கைகளை அரசு மேற்கொள்கிறது. பேரிடர்களின் போது, தமிழ்நாட்டில் மேற்கொள்ளப்பட்ட முன் எச்சரிக்கை நடவடிக்கை உலக அளவிலும் இந்திய அளவிலும் பாராட்டப்பட்டுள்ளது.

### 4.1.2. பேரிடர் **அபாய ஆளுமை :**

பல்வேறு பேரிடர்களின் காரணமாக ஏற்படும் பாதிப்புகளை குறைக்க உறுதியுடன் செயல்படும் தமிழக அரசு, பேரிடருக்கு முன், பேரிடரின் போது மற்றும் பேரிடருக்கு பின் என பல நிலைகளில் சிறப்பான சேவைகளை அளிக்கும் பொருட்டு அமைப்பு சார்ந்த வழிமுறைகளை வலுப்படுத்த சிறப்பான நடவடிக்கைகள் மேற்கொண்டு வருகிறது.

## கடந்த முப்பதாண்டு காலத்தில் தமிழகத்தில் ஏற்பட்ட முக்கிய பேரிடர்களின் விபரம்



### 4.1.3. தமிழ்நாடு பேரிடர் மேலாண்மை ஆணையம்

தமிழ்நாடு பேரிடர் மேலாண்மை ஆணையம், மத்திய அரசின் பேரிடர் மேலாண்மை சட்டம், 2005–ன் படி அமைக்கப்பட்டுள்ளது. மாநிலத்தின் தலைமை அமைப்பான இவ்வாணையம், கொள்கை உருவாக்கத்திற்கான வழிகாட்டுதல், நிதி உதவி அளித்தல், மாநிலத்தில் பேரிடர் மேலாண்மை தொடர்பான செயல்பாடுகளை கண்காணித்தல் போன்ற பணிகளை மேற்கொண்டு வருகிறது. தமிழ்நாடு மாநில பேரிடர் மேலாண்மை ஆணையம், மாண்புமிகு முதலமைச்சர் தலைமையின் கீழ் ஏற்படுத்தப்பட்டுள்ளது. மற்ற உறுப்பினர்களின் விவரம் பின்வருமாறு:

- மாண்புமிகு வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத் துறை அமைச்சர்
- அரசு தலைமைச் செயலர்
- வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத் துறை செயலர்
- நிதித் துறை செயலர்
- உள்துறை செயலர்
- உயர் கல்வித் துறை செயலர்
- பள்ளிக் கல்வித் துறை செயலர்
- மாநில நிவாரண ஆணையர் மற்றும் வருவாய் நிர்வாக ஆணையர்

- இயக்குநர், பேரிடர் மேலாண்மை மற்றும் தணிப்பு மையம், அண்ணா பல்கலைக்கழகம், சென்னை
- தலைவர், கட்டட பொறியியல் துறை, இந்திய தொழில்நுட்ப கழகம், மெட்ராஸ்

### 4.1.4. மாநில செயலாக்கக் குழு

மாநில செயலாக்கக்குழு, தலைமைச் செயலாளரை தலைவராகவும், நிதித்துறை, வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத்துறை, பொதுப்பணித்துறை, நெடுஞ்சாலைத்துறை, உள்துறை ஆகியவற்றின் செயலாளர்களை உறுப்பினர்களாகவும் கொண்டு அமைக்கப்பட்டுள்ளது. மேற்படி, குழுவின் கூட்டத்தில் மாநில நிவாரண ஆணையர் மற்றும் வருவாய் நிர்வாக ஆணையர் சிறப்பு அழைப்பாளராக கலந்து கொள்வார். மாநில அளவிலான பேரிடர் மேலாண்மை திட்டங்களை செயல்படுத்துவதும், பேரிடர் மேலாண்மை நிவாரண நிதியை கையாள்வது குறித்து மாநில அரசுக்கு ஆலோசனைகள் வழங்குவதும், மாநில செயலாக்க குழுவின் முக்கிய பணிகளில் ஒன்றாகும். இக்குழு, பேரிடர் காலங்களில் உடனடியாக நிவாரண பணிகள் மேற்கொள்வதற்கும், திறன் மேம்பாடு மற்றும் மீட்பு பணிகளுக்கு தேவையான தேடுதல் மற்றும் மீட்பு உபகரணங்கள் பெற்றிடவும், நிதி வழங்கிட அதிகாரம் பெற்றுள்ளது.

### 4.1.5. மாநில ஆலோசனைக் குழு

மாநில ஆலோசனைக் குழு, வருவாய் நிர்வாக ஆணையரை தலைவராகக் கொண்டும், வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மை துறை கூடுதல் தலைமை செயலரை இணைத் தலைவராகக் கொண்டும் அமைக்கப்பட்டுள்ளது. மாநில அளவிலான குழு பல்வேறு துறை சார்ந்த வல்லுநர்களை உள்ளடக்கியதாகும். இக்குழு, பேரிடர் அபாய குறைப்பு நடவடிக்கைகள் குறித்த ஆலோசனைகளை வழங்குகிறது.

### 4.1.6. பேரிடர் நிகழ்வு மீட்பு அமைப்பு (IRS)

பேரிடர் நிகழ்வு மீட்பு அமைப்பானது பேரிடர் காலங்களில், செயல்திறனுடனும், முறையான அணுகுமுறையுடனும் அரசு, தனியார் துறை மற்றும் அரசு சாரா அமைப்புகள் என அனைத்து நிலைகளிலும் உள்ள அமைப்புகளை ஒருங்கிணைத்து தடையின்றி செயல்பட வழிவகுக்கிறது. தமிழ்நாட்டின் அனைத்து மாவட்டங்களிலும் பேரிடர் நிகழ்வு மீட்பு அமைப்பு ஏற்படுத்தப்பட்டுள்ளது. தேசிய பேரிடர் மேலாண்மை நிறுவனத்தின் மூலம் சம்மந்தப்பட்ட அலுவலர்களுக்கு பல்வேறு கட்டங்களில் பேரிடர் நிகழ்வு மீட்பு அமைப்பு குறித்து பயிற்சிகள் வழங்கப்படுகிறது. தமிழ்நாடு மாநில பேரிடர் மேலாண்மை ஆணையத்தின் ஒட்டுமொத்த மேற்பார்வையின் கீழ் பேரிடர் நிகழ்வு மீட்பு அமைப்பானது செயல்படுகிறது. இவ்வமைப்பின் தலைமை பொறுப்பாளராக தலைமைச் செயலாளரும்,

இன்சிடன்ட் கமாண்டராக வருவாய் நிருவாக ஆணையர் மற்றும் மாநில நிவாரண ஆணையரும் செயல்படுகிறார்கள். மாநில அளவில் இன்சிடன்ட் கமாண்டருக்கு உதவி புரிய துணை இன்சிடன்ட் கமாண்டராக, இயக்குநர், பேரிடர் மேலாண்மை செயல்படுகிறார். மாவட்ட அளவில் மாவட்ட ஆட்சித்தலைவர் இன்சிடன்ட் கமாண்டராக செயல்படுகிறார்.

### 4.1.7. தமிழ்நாடு பேரிடர் அபாய குறைப்பு முகமை

தமிழ்நாடு பேரிடர் அபாய குறைப்பு முகமை, அரசு ஆணை எண்.488, வருவாய்த் துறை, நாள் 28.11.2013–ன் படியும், தமிழ்நாடு பேரிடர் மேலாண்மைக் கொள்கை வெளியிடப்பட்டதைத் தொடர்ந்தும் உருவாக்கப்பட்டுள்ளது. இம்முகமை தமிழ்நாடு கூட்டுறவு சங்கங்கள் பதிவு சட்டத்தின் கீழ் 09.01.2014 அன்று பதிவுசெய்யப்பட்டுள்ளது. இம்முகமையின் ஆட்சிக் குழு மாண்புமிகு வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத் துறை அமைச்சர் தலைமையின் கீழ் நடத்தப்படுகின்றது. இம்முகமையில் வருவாய் நிருவாக ஆணையர் மற்றும் மாநில நிவாரண ஆணையர் செயலாக்க குழுவின் தலைவராகவும், பேரிடர் மேலாண்மை இயக்குநர், உறுப்பினர் செயலராகவும் செயல்பட்டு வருகின்றனர். வருவாய் நிருவாக ஆணையர் மற்றும் மாநில நிவாரண ஆணையரின் முழுக் கண்காணிப்பில் இயங்கும் இம்முகமையானது தமிழ்நாடு மாநில பேரிடர் மேலாண்மை ஆணையத்தின் செயலாக்க அமைப்பாக செயல்படுகிறது.

### 4.1.8. மாவட்டப் பேரிடர் மேலாண்மை ஆணையம்

பேரிடர் மேலாண்மை சட்டம், 2005ல் குறிப்பிடப்பட்டுள்ளவாறு, தமிழ்நாட்டின் அனைத்து மாவட்டங்களிலும் மாவட்ட ஆட்சியர்களின் தலைமையில் மாவட்டப் பேரிடர் மேலாண்மை ஆணையங்கள் அமைக்கப்பட்டுள்ளது. மாவட்டப் பேரிடர் மேலாண்மை ஆணையமானது மத்திய மற்றும் மாநில பேரிடர் மேலாண்மை ஆணையத்தின் வழிகாட்டுதலின்படி மாவட்டத்தில் பேரிடர் மேலாண்மை தொடர்பான திட்டமிடல், ஒருங்கிணைத்தல் மற்றும் செயல்படுத்துதல் ஆகிய பணிகளை மேற்கொண்டு வருகிறது.

### 4.1.9. சென்டாய் கூட்டமைப்பு மற்றும் தமிழ்நாடு மாநில பேரிடர் மேலாண்மை தொலைநோக்கு திட்டம் 2018 – 2030

தமிழ்நாடு மாநில பேரிடர் மேலாண்மை ஆணையம், சென்டாய் கூட்டமைப்பின் கருத்துக்களுடன் ஒருங்கிணைத்து உருவாக்கப்பட்டுள்ள தமிழ்நாடு மாநில பேரிடர் மேலாண்மை தொலைநோக்கு திட்டத்திற்கு ஒப்புதல் அளித்துள்ளது. மாநிலத்தின் சுற்று சூழலுக்கேற்ப முறையான அணுகுமுறை, ஒருங்கிணைந்த வளர்ச்சி மற்றும் பேரிடர் அபாயங்களுக்கு முக்கியத்துவம் அளித்தல் மூலம் மாநிலத்தின் வளர்ச்சியை குறிக்கோளாக கொண்டு பாதுகாப்பான, பேரிடர்களின் தாக்கத்தை எதிர்கொள்ளும் வகையிலான தமிழகத்தை உருவாக்குவது இத்திட்டத்தின் நோக்கமாகும். இத்தொலைநோக்குத்

திட்டமானது சென்டாய் கூட்டமைப்பின் நான்கு முன்னுரிமை கருத்துகளை அடிப்படையாக கொண்டது.

1. பேரிடர் அபாயத்தை புரிந்துகொள்ளுதல்
2. பேரிடர் அபாய ஆளுமையினை மேம்படுத்துதல்
3. பேரிடர் அபாயக் குறைப்பிற்கு தேவையான நிதி ஒதுக்கீடு செய்தல் மற்றும்
4. பேரிடருக்கான முன் எச்சரிக்கை, பேரிடரின் போது சிறந்த மீட்பு பணி, பேரிடருக்கு பின்னர் சிறப்பான மறுசீரமைப்பு

சென்டாய் கூட்டமைப்பின் முன்னுரிமைக் கருத்துகளின் அடிப்படையில் பேரிடர் அபாயத்தை குறைக்கும் நோக்கில் அமைந்துள்ள தொலைநோக்குத் திட்டத்தை உருவாக்கிய மாநிலங்களுள் தமிழ்நாடு முதன்மையான மாநிலமாகும். நம் நாட்டில், பேரிடர்களின் அபாயத்தை எதிர்கொள்வது, கடுமையான சவால் ஆகும். 2030–க்குள் சென்டாய் கூட்டமைப்பின் இலக்குகளை அடைவதற்கான முதல் நடவடிக்கையை எடுப்பதில் உலகின் மிகப் பெரிய ஜனநாயகமான இந்தியா தனது அர்ப்பணிப்பையும், தலைமைத்துவத்தையும் நிரூபித்துள்ளது என்பது சர்வதேச சமூகத்தின் கவனத்தைக் கவரக்கூடியதாகும். சென்டாய் கூட்டமைப்பின் நெறிமுறைகளை உள்ளடக்கிய தொலைநோக்கு திட்டம் செயல்படுத்தப்படும் நிலையில், புதிய வாய்ப்புகள் மற்றும் சிறந்த திட்டமிடல் ஆகியவற்றிலிருந்து தமிழ்நாடு சிறந்த பயனை அடையும். சென்டாய் கூட்டமைப்பின் கருத்துக்களின் அடிப்படையிலான இந்த தொலைநோக்கு

திட்டம், பேரிடர் மேலாண்மையின் அனைத்து பங்குதாரர்களை உட்படுத்தி எதிர் காலத்தில் பேரிடர்களின் தாக்கத்தை எதிர் கொள்ளும் மாநிலமாக உருவாக்க வழிவகை செய்கிறது. தமிழ்நாடு பேரிடர் மேலாண்மைத் தொலைநோக்குத் திட்டம், 2018 – 2030 ஆனது சென்டாய் கூட்டமைப்பில் தெரிவிக்கப்பட்டுள்ள பேரிடர் அபாய குறைப்பு, நீடித்த நிலையான குறிக்கோள், பருவ மாற்ற ஒப்பந்தமான பாரிஸ் உடன்படிக்கை மற்றும் பாரதப் பிரதமரின் 10 அம்ச திட்டத்தை முதன்மையாகக் கொண்டுள்ளது. இத்திட்டமானது, பேரிடர் மேலாண்மை சட்டம், 2005 மற்றும் மாநில பேரிடர் மேலாண்மை திட்டத்திற்கு தேசிய பேரிடர் மேலாண்மை ஆணையத்தால் வெளியிடப்பட்டுள்ள வழிகாட்டுதலின்படி உருவாக்கப்பட்டுள்ளது. மேலும், இத்திட்டமானது, மாவட்டப் பேரிடர் மேலாண்மை ஆணையங்கள், அரசு துறைகள், சமூக அமைப்புகள் மற்றும் பல்வேறு பயனர்களிடம் பெறப்பட்ட விரிவான அறிக்கையின்படி உருவாக்கப்பட்டுள்ளது. நீர் பிடிப்பு பகுதிகள் அடிப்படையில் இயற்கை வளங்களை பாதுகாப்பது, ஆற்று வடிநிலங்களின் விரிவான மேலாண்மை, சுற்றுசூழல் பாதிக்கப்பட்டுள்ள இடங்களையும், விவசாய வளங்களையும் நிலையான மேம்பாட்டு திட்டத்தின் மூலம் பாதுகாப்பது, பேரிடர் குறைப்பு முறைகளை வளர்ச்சித் திட்டத்தின் கீழ் ஒருங்கிணைப்பது, சமூக பங்களிப்புடன் பேரிடர்களால் பாதிப்புக்குள்ளாகும் பகுதிகளின் ஒருங்கிணைந்த வளர்ச்சி ஆகியவை இத்திட்டத்தின்

முக்கியத்துவங்களாகும். தொலைநோக்குத் திட்டத்தில் குறிப்பிடப்பட்டுள்ளவாறு, நீண்ட கால தணிப்பு நடவடிக்கைக்கு அரசு முக்கியத்துவம் அளித்து வருகின்றது.

4.2 பேரிடர் ஆயத்த நிலை – பேரிடர் அபாய மதிப்பீடு மற்றும் பேரிடர் அபாயத் தகவல் தொடர்பு

**4.2.1. கடைக்கோடி மக்களை எட்டும் வகையில் பேரிடர் அபாயத் தகவல் தொடர்பு :**

பேரிடர் காலங்களில், பாதிப்பிற்குள்ளாகும் மக்களுக்கு பேரிடர் அபாயம் குறித்தான தகவல்களை குறித்த நேரத்தில் தெரியப்படுத்தும் ஒரு அமைப்பு முறையினை உருவாக்குவது மிக முக்கியமானதாகும். இந்திய வானிலை ஆய்வு மையம், இந்திய தேசிய கடல்சார் தகவல் மையம், மத்திய நீர்வள ஆணையம் இந்திய புவியியல் ஆய்வு மையம் போன்ற அமைப்புகளிடமிருந்து தகவல்களை பெற்று மாநில அவசரக் கட்டுபாட்டு மையத்திலிருந்து தமிழகம் முழுவதும் உள்ள பொதுமக்கள், மீனவர்கள், மாணவர்கள், விவசாயிகள், மாவட்ட நிருவாகம் மற்றும் ஊடகங்களுக்கு கனமழை, வெள்ளம், புயல், நிலநடுக்கம், சுனாமி போன்ற பேரிடர்கள் குறித்தான எச்சரிக்கைத் தகவல்கள் தெரிவிக்கப்படுகிறது.

சென்னையில் மாநில அவசரக் கட்டுபாட்டு மையம், தகவல் தொடர்பு மையமாக 24 மணி நேரமும் செயல்படுகின்றது. இம்மையம் மாண்புமிகு வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத்

துறை அமைச்சர், கூடுதல் தலைமைச் செயலர், வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத் துறை, முதன்மைச் செயலர் / வருவாய் நிருவாக ஆணையர் மற்றும் பேரிடர் மேலாண்மை இயக்குநர் ஆகியோரின் நேரடிக் கண்காணிப்பின் கீழ் இயங்குகிறது. பேரிடர் காலங்களில், மாண்புமிகு வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத் துறை அமைச்சர் அவர்கள், கூடுதல் தலைமை செயலர், வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத் துறை மற்றும் வருவாய் நிருவாக ஆணையர் ஆகியோருடன் இணைந்து அரசு மேற்கொண்ட பாதுகாப்பு நடவடிக்கைகள் குறித்தும், மக்களின் பாதுகாப்பு பற்றிய விழிப்புணர்வு குறித்தும் ஊடகங்களின் வாயிலாக மக்களுக்கு தெரிவிப்பார்கள். மேலும், தேசிய பேரிடர் மீட்புப் படை, தமிழ்நாடு பேரிடர் மீட்புப் படை, காவல் துறை, தமிழ்நாடு தீயணைப்பு மற்றும் மீட்புப் பணிகள் துறை உள்ளிட்ட இதர முக்கிய துறைகளின் மூத்த அதிகாரிகளின் துணையோடு 24 மணி நேரமும் கட்டுப்பாட்டு மையமாக செயல்பட்டு, முன் எச்சரிக்கைத் தகவல்களை மிகத் துரிதமாக அனுப்புகின்றது. பொதுமக்கள் 1070 என்ற கட்டணமில்லா தொலைபேசி மூலம் இம்மையத்தினை தொடர்பு கொள்ள முடியும்.

மாவட்ட அவசர கட்டுப்பாட்டு மையம், மாவட்ட ஆட்சித் தலைவரின் மேற்பார்வையின் கீழ் செயல்படுகின்றது. இம் மாவட்ட அவசர கட்டுப்பாட்டு மையங்கள், மாநில அவசர கட்டுப்பாட்டு மையத்திலிருந்து பெறப்படும் அவசர கால

செய்திகள் / எச்சரிக்கைகளை உடனுக்குடன் பொது மக்களுக்கு தெரிவிக்கும் தகவல் மையங்களாக செயல்படுகின்றன. பேரிடர் காலங்களில், இம்மையத்தில் அனைத்துத் துறை அலுவலர்கள் பணியமர்த்தப்பட்டு, தேடுதல், மீட்பு மற்றும் நிவாரண நடவடிக்கைகள் துரிதப்படுத்தப்படுகிறது. 1077 என்ற கட்டணமில்லா தொலைபேசி மூலம் பொதுமக்கள் இம்மையங்களைத் தொடர்பு கொள்ள முடியும்.

### 4.2.2. பேரிடர் மீட்பு

முன்னறிவிப்பு அடிப்படையில், பாதிப்பிற்குள்ளாகக்கூடிய பகுதிகளிலுள்ள மக்களின் பாதுகாப்பை உறுதி செய்யும் வகையிலும், பேரிடர் தாக்கும் பொழுது, தேடல் மற்றும் மீட்பு நடவடிக்கைகளை துரிதமாக மேற்கொள்ளும் வகையிலும் தமிழக அரசு தொடர்ந்து மீட்பு நடவடிக்கைகளை மேம்படுத்தி வருகின்றது. மேலும், மீட்பு நடவடிக்கைகளை மேம்படுத்தும் வகையில், அதற்கென தனியே தமிழ்நாடு பேரிடர் மீட்புப் படையினை உருவாக்கியதோடு மட்டுமல்லாமல், தேடல் மற்றும் மீட்பு நடவடிக்கைகளில் ஈடுபடும் பிற அமைப்புகளின் திறன்களை மேம்படுத்துவதற்காக ரோபோடிக் எக்ஸ்கவேட்டர், நவீன களை எடுப்பான்கள், அதிக திறன் கொண்ட நீர் உறிஞ்சும் இயந்திரங்கள், பெயரத்தகு விளக்குகள் மற்றும் மிதவை படகுகள் உள்ளிட்ட உபகரணங்கள் கொள்முதல் செய்யப்பட்டுள்ளது.

### 4.2.3. தமிழ்நாடு பேரிடர் மீட்புப் படை

மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் அவர்கள் 11.07.2017 அன்று சட்டமன்றத்தில் அறிவித்ததைத் தொடர்ந்து, தமிழ்நாடு பேரிடர் மீட்புப் படை அரசால் ஏற்படுத்தப்பட்டுள்ளது. மேலும், தமிழ்நாடு பேரிடர் மீட்புப்படையினை மேம்படுத்துவதற்காக, ரூ.15.00 கோடி செலவில் உலகத்தரம் வாய்ந்த உபகரணங்கள் கொள்முதல் செய்யப்பட்டு, திறன் மேம்பாட்டு பணிகள் மேற்கொள்ளப்பட்டு வருகிறது.

### 4.2.4. **உலகத் தரம் வாய்ந்த தொழில்நுட்பங்களை பயன்படுத்துதல் தமிழ்நாட்டில்,** பல்வகைப் பேரிடர்களின் **தீவிர** தாக்கத்தினை முன்னதாக அறிந்து அவசர மீட்பு நடவடிக்கைகளை முறைப்படுத்தும் திட்டம் **(TN–SMART)**

வானிலை முன்னறிவிப்பு தொடர்பான தகவல்களின் அடிப்படையில், பல்வேறு பேரிடர்களால் ஏற்படும் தாக்கத்தை அளவிட்டு அதனடிப்படையில் அவசரகால மீட்பு முன்னேற்பாடுகளை முறைப்படுத்தும் திட்டம் (TN–SMART) ஆப்பிரிக்க மற்றும் ஆசிய மண்டலத்தின் ஒருங்கிணைந்த பல்வகைப் பேரிடர் முன்னறிவிப்பு அமைப்பின் (RIMES) மூலம் வடிவமைக்கப்பட்டுள்ளது. TN–SMART செயலியானது (Mobile App) மூன்று அடுக்கு முடிவு ஆதார அமைப்பினை கொண்டதாகும். இது, பேரிடர் மேலாண்மையின் அங்கங்களான முன்னேற்பாடு, மீட்பு மற்றும் தணிப்பு நடவடிக்கைகளை உள்ளடக்கிய 11

தொகுதிகளை கொண்டு உருவாக்கப்பட்டுள்ளது. பேரிடரின் தாக்கம், பேரிடர் தொடர்பான ஆபத்துகளை செயலி மூலம் தெரிவித்தல், அபாய அழைப்புகளை பதிவு செய்து அதனை கண்காணித்தல், பேரிடர் அபாய குறைப்பு நடவடிக்கைகளை ஆய்வு செய்தல் ஆகியவை இத்திட்டத்தின் முக்கிய அம்சங்கள் ஆகும். தமிழ்நாட்டில் உள்ள 37 மாவட்டங்களில் கண்டறியப்பட்ட பாதிப்புக்குள்ளாகும் இடங்களில், இந்திய வானிலை ஆராய்ச்சித் துறையின் மழை முன்னறிவிப்பை கொண்டும், முந்தைய காலத்தில் பெய்த மழையளவு, நீர் நிலைகளில் உள்ள நீரின் அளவு ஆகியவற்றை கொண்டு உத்தேசமான வெள்ள அபாயத்தினை இத்திட்டம் மதிப்பீடு செய்கிறது. மேலும், பேரிடர்களின் ஆபத்துகளை கணிக்கவும், அவை செயலி மூலம், களநிலை அலுவலர்கள் மற்றும் பொதுமக்களுக்கு முன்னெச்சரிக்கை செய்யவும், தாழ்வான பகுதிகளில் வசிக்கும் மக்களை வெளியேற்றி பாதுகாப்பான இடங்களில் தங்கவைத்து வெள்ள அபாயத்தினை குறைக்கவும் இச்செயலி உதவும். இந்த செயலி தனித் தன்மையான எச்சரிக்கை அமைப்பை கொண்டது. கைப்பேசி அமைதியான நிலையில் இருந்தாலும் எச்சரிக்கை அறிவிப்பு, ஒலி எழுப்பக்கூடிய வகையில் இச்செயலி உருவாக்கப்பட்டுள்ளது. மேலும் இந்த எச்சரிக்கை அறிவிப்பு ஒலி பயனர் எச்சரிக்கைச் செய்தியினை காணும் வரை ஒலித்துக்கொண்டிருக்கும். உரிய நேரத்தில் அளிக்கப்படும் முன்னெச்சரிக்கையால், சுனாமி, புயல் மற்றும் வெள்ளம் போன்ற

பேரிடர்களால் ஏற்படும் உயிரிழப்புகள் தவிர்க்கப்படுவதை இந்த செயலி உறுதி செய்கிறது. இந்த செயலி மூலம் பொதுமக்கள் பேரிடர் தொடர்பான புகார்களை பதிவு செய்யலாம். பதிவு செய்யப்பட்ட புகார்கள் தொடர்புடைய அலுவலர்களுக்கு தக்க நடவடிக்கைக்காக அனுப்பப்படுவதையும், அனுப்பப்பட்ட புகார் மீதான நடவடிக்கை விவரத்தையும் கண்காணிக்கலாம். பேரிடர் அபாயக் குறைப்பினை உறுதி செய்திட, சென்டாய் கூட்டமைப்பு (Sendai Frame Work) மற்றும் தமிழ்நாடு மாநில பேரிடர் மேலாண்மை தொலைநோக்கு திட்டம் 2018 – 2030 ஆகியவற்றில் தெரிவிக்கப்பட்டுள்ள முக்கிய முன்னுரிமை கருத்துக்களை பின்பற்றி இத்திட்டத்தின் தொகுதிகள் (Modules), மாநிலத்தின் நீண்ட கால இலக்குகளை அடைவதை கண்காணிக்கும் வகையில் வடிவமைக்கப்பட்டுள்ளது. இந்த செயலியை அதிக அளவில் பயனர்கள் பதிவிறக்கம் செய்து பயன்படுத்தி வருகின்றனர்.

### 4.2.5. சென்னை வெள்ள முன்னெச்சரிக்கை அமைப்பு (C-FLOWS)

கடலோர பகுதிகளுக்கு வெள்ள முன்னெச்சரிக்கை, நீரியல் மாற்றங்கள் சார்ந்த மாதிரியின் அடிப்படையில் தொழில் நுட்ப உதவி வழங்கவும், பல்வேறு பேரிடர்களால் பாதிப்பிற்குள்ளாகும் பெருநகர சென்னை மாநகராட்சி பகுதிகளுக்கு முன்னெச்சரிக்கை வழங்கவும் இத்திட்டம்

உருவாக்கப்பட்டுள்ளது. கடல் அலை உயரம், மாநகராட்சிக்கு நீர்வழங்கும் நீர்நிலைகள், அடையாறு மற்றும் கூவம் ஆறுகள் ஆகியவற்றின் நீரின் அளவு போன்ற உள்ளீடுகளை கருத்தில் கொண்டு அதிகப்படியான மழையளவினை கண்காணித்து இவ்வமைப்பு முன்னெச்சரிக்கை வழங்கும். இதற்கென வருவாய் நிருவாகம் மற்றும் பேரிடர் மேலாண்மைத் துறை ஆணையரகமும் மற்றும் தேசிய கடலோர ஆராய்ச்சி மையமும் (NCCR) ஒரு புரிந்துணர்வு ஒப்பந்ததை கையொப்பமிட்டுள்ளது.

### 4.2.6. ஆளில்லா வானூர்தி மூலம் வான்வழி புகைப்படவியல் ஆய்வு (UAV)

மாண்புமிகு வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத் துறை அமைச்சர் அவர்கள் 10.07.2017 அன்று சட்டப்பேரவையில் வெளியிட்ட அறிவிப்பினைத் தொடர்ந்து, வெள்ளத்தடுப்பு நடவடிக்கைகளுக்கான ஆளில்லா வானூர்தி மூலம் வான்வழி புகைப்படவியல் ஆய்வு (UAV) மேற்கொள்ள அரசு, ரூ.694.46 இலட்சம் நிதி ஒதுக்கீடு செய்துள்ளது. இத்திட்டத்தின் படி, வான்வெளி ஆய்வு மையம், சென்னை தொழில்நுட்ப நிறுவனம், அண்ணா பல்கலைக் கழகம் மூலம் மாநிலத்தின் நீர்வழித்தடங்களின் புகைப்படங்கள் 5650.45 ச.கி.மீ. பரப்பளவில் கடலூர், மதுரை, விருதுநகர், சிவகங்கை, தூத்துக்குடி, இராமநாதபுரம், நாகப்பட்டினம், திருவாரூர், தஞ்சாவூர், விழுப்புரம், புதுக்கோட்டை, கன்னியாகுமரி, திருச்சிராப்பள்ளி, திருப்பூர்,

சேலம், திண்டுக்கல், நாமக்கல், ஈரோடு மற்றும் கரூர் ஆகிய மாவட்டங்களில் வான்வெளி அளவைப் பணிகள் முடிக்கப்பட்டு, இந்தத் தரவுகளின் படி டிஜிட்டல் எலிவேஷன் வரைபடங்கள் தயாரிக்கும் பணி நடைபெற்று வருகிறது.

**4.2.7. புவிசார் தகவல் மையம்**

தமிழ்நாடு பேரிடர் அபாயக் குறைப்பு முகமையில் புவிசார் தகவல் மையம் அமைப்பதற்கு அரசு ஒப்புதல் அளித்துள்ளது. புவிசார் தகவல் மையமானது, தேசிய அவசர மேலாண்மைத் தரவுகள் (NDEM) வழியில் மாநில அவசர மேலாண்மை தரவுகளை (SDEM) உருவாக்கிட வழிவகுக்கும். பேரிடர் மேலாண்மையில், முடிவுகளை எடுத்திட வழிவகுக்கும் அமைப்பினை (Decision Support System (DSS) ஏற்படுத்தவும், மாநில அவசர மேலாண்மை தரவுகளில் பேரிடர் தொடர்பான குறிப்பிட்ட தகவல்களை பதிவேற்றம் செய்யவும், புயல் சீற்றங்களின் போது ஏற்படும் அலைகள் மாதிரியினை ஒருங்கிணைக்கவும், பேரிடர் தணிப்பு மற்றும் மேலாண்மை மையம், தொலை உணர்வு மையம், அண்ணா பல்கலைக்கழகம் மற்றும் இந்திய தொழில் நுட்பக்கழகம், மெட்ராஸ் ஆகிய நிறுவனங்களுடன் தமிழ்நாடு பேரிடர் அபாய குறைப்பு முகமை கூட்டு உடன்படிக்கையை மேற்கொண்டுள்ளது. ஐந்து வருட காலத்திற்கான இந்த கூட்டு ஒப்பந்தம் ரூ.350.25 இலட்சம் நிதி ஒதுக்கீட்டில் செயல்படுத்தப்படுகிறது.

## 4.2.8. தமிழகத்தின் நகர்ப்புறங்களில் பேரிடர் அபாயக் குறைப்பு மற்றும் தணிப்பினை வலுப்படுத்துதல்:

மாண்புமிகு வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத் துறை அமைச்சர் அவர்கள், 17.07.2019 அன்று பிரிட்டிஷ் ஹை கமிஷனின் தொழில்நுட்ப ஒத்துழைப்புடன் நிலையான நகர்ப்புற வளர்ச்சியினை ஊக்குவிப்பதற்காக ஒரு அறிவிப்பை வெளியிட்டார்கள். இதன் அடிப்படையில் "தமிழகத்தின் நகர்ப்புறங்களில் பேரிடர் அபாய குறைப்பு மற்றும் தணிப்பினை வலுப்படுத்துதல்" என்ற தலைப்பில் வேகமாக குறைந்து வரும் இயற்கை சார்ந்த வாழ்விடங்களைக் கொண்ட பெரிய கடலோர மற்றும் நகர்ப்புற நகரங்களான சென்னை, கடலூர், திருவள்ளூர், மற்றும் செங்கல்பட்டு ஆகியவற்றில் பேரிடர் அபாய குறைப்பு மற்றும் தணிப்பினை வலுப்படுத்த ஆய்வுகள் மேற்கொள்ள அரசாணை எண். 247, வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத் துறை, நாள் 19.07.2019–ன் படி ஆணையிடப்பட்டது. இதனைத் தொடர்ந்து, 23.09.2019 அன்று மாண்புமிகு வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத் துறை அமைச்சர் அவர்கள் கருத்துப் பரிமாற்றத்திற்கான பணிமனையினை துவக்கி வைத்தார்கள். மேலும், 17.12.2019 அன்று பிரிட்டிஷ் துணை ஹை கமிஷனர் முன்னிலையில், முதன்மைச் செயலர்/ வருவாய் நிருவாக ஆணையர் தலைமையில் பல்துறைத் தலைவர்கள் கலந்து கொண்ட "தகவல் பரிமாற்ற பணிமனை" நடைபெற்றது. இக்கருத்தரங்குகளில் இங்கிலாந்து நாட்டிலிருந்தும்,

இந்தியாவின் பல்வேறு பகுதிகளிலிருந்தும், பேரிடர் அபாயக் குறைப்பு மற்றும் தணிப்பு ஆகியவற்றில் சிறந்த தொழில்நுட்ப வல்லுநர்கள் கலந்து கொண்டனர். இதனை அடுத்து, பேரிடர் அபாயங்களை குறைத்தல், இயற்கை சூழலை பாதுகாத்தல், கடல் நீர் உட்புகுவதை தடுத்தல், மழைநீர் சேகரிப்பை மேம்படுத்தல் ஆகியவற்றை உள்ளடக்கிய "தமிழகத்தின் நகர்ப்புறங்களில் பேரிடர் அபாய குறைப்பு மற்றும் தணிப்பினை வலுப்படுத்துதல்" தொடர்பான இறுதி அறிக்கை பிரிட்டிஷ் ஹை கமிஷனால் வழங்கப்படவுள்ளது. இந்த அறிக்கையின் அடிப்படையில் திட்ட செயல்பாட்டு முன்மொழிவுகள் தயாரிக்கப்படும்.

### 4.2.9. மாநில அளவிலான வறட்சி கண்காணிப்பு மையம்

பேரிடர் மேலாண்மை சட்டம் 2005-ன் படி வறட்சி தொடர்பான தொடர் கண்காணிப்பு நடவடிக்கை பொருட்டு தமிழ்நாடு பேரிடர் அபாய குறைப்பு முகமைக்கு உதவும் வகையில் மாநில அளவிலான வறட்சி கண்காணிப்பு மையம் உருவாக்கப்பட்டுள்ளது. இம்மையமானது முதன்மைச் செயலர் / வருவாய் நிர்வாக ஆணையரை தலைவராக கொண்டு செயல்படும். இம்மையமானது இந்திய வானிலை ஆய்வு மையம், தேசிய தொலையுணர்வு மையம், தேசிய பயிர் நிலவரங்கள் முன்கணிப்பு மையம், மாநில நீர்வள ஆதார மையம், வேளாண்மைத்துறை, தோட்டக்கலைத்துறை, கால்நடை வளர்ப்புத் துறை, ஊரக வளர்ச்சித் துறை, குடிமைப்பொருள்

வழங்கல் மற்றும் மின்சாரத்துறை ஆகியவற்றின் உதவியுடன் வறட்சி தொடர்பான திட்டங்களுக்கான உள்ளீடுகளை பெற்று அறிவியல் மதிப்பீடு மற்றும் ஆய்வுகளை மேற்கொள்ளும்.

**4.2.10.** மாவட்ட அளவிலான வறட்சி கண்காணிப்பு மையம்

மாவட்ட அளவிலான வறட்சி கண்காணிப்பு மையமானது மாவட்டப் பேரிடர் மேலாண்மை ஆணையத்தின் ஒரு அங்கமாக செயல்படும் வகையில் அனைத்து மாவட்டங்களிலும் உருவாக்கப்பட்டுள்ளது. இம்மையமானது மாவட்ட ஆட்சியரைத் தலைவராகக் கொண்டு, அவரது கட்டுப்பாட்டில் செயல்படுகிறது.

**4.2.11.** திறன் மேம்பாடு

மாண்புமிகு முதலமைச்சர் அவர்களின் அறிவிப்பின் அடிப்படையில், பேரிடர்களின் போது மீட்பு, நிவாரணம் மற்றும் மறுவாழ்வு ஆகிய செயல்களில் ஈடுபடும் பல்வேறு துறை அலுவலர்களுக்கும் மற்றும் தன்னார்வலர்களுக்கும் திறன் மேம்பாடு பயிற்சி அளித்திட 16.11.2017 நாளிட்ட அரசாணையின்படி ரூ.5.00 கோடி நிதி ஒதுக்கீடு செய்யப்பட்டது. அதைத் தொடர்ந்து, மாதிரி ஒத்திகைகள், கருத்தரங்குகள், பயிற்சிகள் மற்றும் விழிப்புணர்வு முகாம்கள் அனைத்து மாவட்டங்களிலும், மாநில அளவிலும் நடத்தப்பட்டு வருகின்றன.

### 4.2.12. ஆசிய பேரிடர் ஆயத்த மையம், பாங்காக் உடனான புரிந்துணர்வு ஒப்பந்தம்

ஆசிய பேரிடர் ஆயத்த மையம் ஒரு சர்வதேச அரசாங்க அமைப்பாகும் (2005 – இல் இந்திய அரசு ஒப்புதல் அளித்துள்ளது). இந்திய உள்துறை அமைச்சகம் உறுப்பினராக இடம்பெற்றுள்ள இம்மையத்தின் மண்டல ஆலோசனைக் குழுவில் 26 நாடுகள் இடம் பெற்றுள்ளன. இம்மையம், பல அரசுகள், வளர்ச்சிக்கான பங்குதாரர்கள், ஐ.நா.வின் முகமைகள், சமூக அமைப்புகள், கல்வி மையங்கள், தனியார் துறைகள் ஆகியவற்றுடன் இணைந்து ஆசிய – பசிபிக் பகுதியிலுள்ள நாடுகளுக்கு பேரிடர் தொடர்பாக உதவுவதுடன், நிலையான வளர்ச்சி இலக்கை அடைய, பேரிடர் பாதிப்புக்குள்ளாகும் பகுதிகளை கண்டறிதல், பேரிடர் குறைப்பு, பருவ மாற்றத்தினால் ஏற்படும் பாதிப்புகளைக் கண்டறிதல், குறைத்தல் ஆகிய பணிகளில் ஈடுபடுகின்றது. திறன் மேம்பாடு மற்றும் நீண்ட கால அளவில் தொழில்நுட்ப உதவிபெறும் பொருட்டு தமிழ்நாடு பேரிடர் அபாயக் குறைப்பு முகமை, ஆசிய பேரிடர் ஆயத்த மையம், பாங்காக் உடன் புரிந்துணர்வு ஒப்பந்தம் மேற்கொண்டுள்ளது. அதன் தொடர்ச்சியாக, தமிழ்நாடு பேரிடர் அபாய குறைப்பு முகமை, ஆசிய பேரிடர் ஆயத்த மையத்துடன் இணைந்து, பயிற்சிகளை வழங்கி வருகிறது.

**4.2.13. ஆப்த மித்ரா– சமூக ஆர்வலர்களுக்கான பயிற்சி திட்டம்**

ஆப்தமித்ரா திட்டத்தின் கீழ், சென்னை மாவட்டத்தில், 200 தன்னார்வலர்களுக்கு பேரிடர் மீட்பு குறித்த பயிற்சி ரூ.45.40 இலட்சம் செலவில் வழங்கப்பட்டது. தற்போது கூடுதலாக 100 தன்னார்வாலர்களுக்கு பயிற்சி வழங்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

**4.2.14. பேரிடர் தொடர்பான உதவி மற்றும் நிவாரண பயிற்சி (HADR) 2019**

சூறாவளி மற்றும் நகர்புற வெள்ளம் என்ற தலைப்பில் வருடாந்திர பேரிடர் தொடர்பான பயிற்சி அனைத்து கடலோர மாவட்டங்களில்(காஞ்சிபுரம் நீங்கலாக) முப்படைகளால் 02.08.2019 முதல் 04.08.2019 முடிய நடத்தப்பட்டது. இப்பயிற்சியில் தமிழ்நாடு மாநில பேரிடர் மேலாண்மை ஆணையம், கடலோர காவல் படை, தீயணைப்பு மற்றும் மீட்பு படை, தேசிய பேரிடர் மீட்பு படை, தமிழ்நாடு பேரிடர் மீட்பு படை, காவல்துறை, மீன்வளத் துறை மற்றும் மாவட்ட நிர்வாகங்கள் பங்கு பெற்றன. மாண்புமிகு வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத் துறை அமைச்சர் அவர்களும், தமிழக அரசின் தலைமைச் செயலாளரும் இந்தப் பயிற்சியில் கலந்துகொண்டனர். மாநில மற்றும் மாவட்ட நிர்வாகங்கள், தங்கள் கட்டுப்பாட்டில் உள்ள மாநில மற்றும் மாவட்ட அவசர கட்டுப்பாட்டு மையங்களை செயல்படுத்தி மற்றும் மாநில

ஆதாரங்களை ஒன்று திரட்டி, இந்த பயிற்சியில் கலந்து கொண்டன. மூன்று நாட்கள் நடைபெற்ற இந்த பயிற்சியில் வெளிநாட்டினர் பார்வையாளர்களாக பங்கேற்றனர்.

### 4.2.15. தமிழ்நாடு தீயணைப்பு மற்றும் மீட்புப் பணிகள் துறை பணியாளர்களுக்கான **குறுகிய கால** பயிற்சி

குடியிருப்புப் பகுதிகளில் நுழையும் பாம்புகளை பிடித்தல், கழிவுநீர் குழிகள் (அ) சாக்கடைகளில் / உறை கிணறுகளில் தவறி விழுந்த மனிதர்கள் மற்றும் விலங்குகளை மீட்பது போன்ற பல்வேறு மீட்பு நடவடிக்கைகளுக்கான குறுகிய கால பயிற்சியினை வடிவமைப்பதற்காகவும், தமிழ்நாடு தீயணைப்பு மற்றும் மீட்புபணிகள் துறையினைச் சார்ந்த தீயணைப்பு வீரர்களுக்கு மேற்படி பயிற்சியினை வழங்குவதற்கும் மாநில பேரிடர் மீட்பு நிதியிலிருந்து தமிழ்நாடு தீயணைப்பு மற்றும் மீட்புபணிகள் துறைக்கு, ரூ.15.00 இலட்சம் சிறப்பு நிதியாக வழங்கப்பட்டுள்ளது.

### 4.2.16. **பெருமளவிலான** விழிப்புணர்வு **கருத்தரங்கு**கள்

மாண்புமிகு வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மை துறை அமைச்சர் தலைமையில் மனிதர்கள் மற்றும் இயற்கையினால் ஏற்படும் பேரிடர்களைத் தடுக்க மேற்கொள்ள வேண்டிய முன் எச்சரிக்கை நடவடிக்கைகள், குறிப்பாக நீர்நிலைகள் (ஆறுகள், காட்டாறுகள், நீர் அருவிகள், கால்வாய்கள், குளங்கள், ஏரிகள்,

வடிகால்கள், கைவிடப்பட்ட ஆழ்துளை கிணறுகள் முதலியவை) தொடர்பான விபத்துகள் குறித்து பொதுமக்களிடையே விழிப்புணர்வு ஏற்படுத்தும் விதமாக, பெருமளவிலான விழிப்புணர்வுப் கருத்தரங்குகள் மதுரை, திருச்சிராப்பள்ளி, சென்னை, திருவள்ளூர் மற்றும் காஞ்சிபுரம் ஆகிய 5 மாவட்டங்களில் நடைபெற்றது. இதர 32 மாவட்டங்களில், ஒத்திகைப் பயிற்சிகள் மற்றும் விழிப்புணர்வு கருத்தரங்குகள் நடத்தப்பட்டு வருகிறது.

### 4.2.17. "ஜல் சக்தி" நீர்நிலைகளில் எற்படும் பேரிடர் மேலாண்மை நடைமுறைகள் குறித்து ஜம்முவில் மாநாடு

மத்திய அரசின் சார்பில், ஜம்முவில் 30.11.2019 மற்றும் 01.12.2019 ஆகிய 2 நாட்கள் நடைபெற்ற "ஒரே இந்தியா சிறந்த இந்தியா" என்ற தலைப்பில் நீரியல்களால் ஏற்படும் பேரிடர் மேலாண்மை' நடைமுறைகள் குறித்த மாநாட்டில், மாண்புமிகு முதலமைச்சர் அவர்களின் எண்ணங்களை பிரதிபலிக்கும் வகையிலான முன்னோடியான திட்டங்கள் குறித்து மாண்புமிகு வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத் துறை அமைச்சர் அவர்கள் உரையாற்றினார். தமிழகத்தில் செயல்படுத்தப்படும் சிறப்பான திட்டங்கள் மற்ற மாநிலங்களின் பிரதிநிதிகள் மற்றும் உயர் அலுவலர்களிடையே பெரும் வரவேற்பை பெற்றது.

**4.2.18. விவசாயிகள் மற்றும் களப் பணியாளர்களுக்கு திறன் மேம்பாட்டுப் பயிற்சிகள்**

மாண்புமிகு வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத் துறை அமைச்சர் அவர்கள் 17.7.2019 அன்று சட்டமன்றப் பேரவையில், விவாயிகள் மற்றும் களப் பணியாளர்களுக்கு வேளாண்மை, தோட்டக்கலை, கால்நடைப் பராமரிப்பு துறைகள், தமிழ்நாடு வேளாண் பல்கலைக் கழகத்தின் கிரிஷி விக்யான் கேந்திரா மற்றும் கால்நடை பல்கலைக் கழகத்தின் பயிற்சி மற்றும் ஆராய்ச்சி மையங்களின் உதவியுடன் மாவட்ட பேரிடர் மேலாண்மை ஆணையம் மூலமாக திறன் மேம்பாட்டு பயிற்சி வழங்கப்படும் என்று அறிவித்ததைத் தொடர்ந்து, மேற்படி பயிற்சிகள் நடத்தப்படும்.

**4.2.19. குறும்படங்கள் மூலம் இடி மற்றும் மின்னல் குறித்த விழிப்புணர்வு ஏற்படுத்துதல்**

இடி மற்றும் மின்னல் காரணமாக அதிகப்படியான உயிரிழப்புகள் நிகழ்வதைக் கருத்தில் கொண்டு, மாண்புமிகு தமிழக முதலமைச்சர் அவர்களின் ஆணையின்படி, மாண்புமிகு வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத் துறை அமைச்சர் அவர்கள், பொது மக்களிடையே இடி மற்றும் மின்னல் குறித்த விழிப்புணர்வு ஏற்படுத்தும் வகையில் குறும்படம் தயாரிக்கப்படும் என்று அறிவித்ததைத் தொடர்ந்து, இடி மற்றும் மின்னல் தாக்கத்தின் போது பின்பற்றத்தக்கவை மற்றும் செய்யக்

கூடாதவை குறித்து விளக்கும் குறும்படம் பொது மக்களுக்கு விழிப்புணர்வு ஏற்படுத்தும் பொருட்டு தயாரிக்கப்பட்டு மாண்புமிகு வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத் துறை அமைச்சர் அவர்களால் வெளியிடப்பட்டுள்ளது.

### 4.3. பேரிடர் மீட்பை வலுப்படுத்துதல்

#### 4.3.1 **பல்வேறு வகையிலான தடையில்லா** தகவல் தொடர்புகள்

பேரிடர் குறித்த தகவல்கள், மாநில அவசர கட்டுப்பாட்டு மையம், மாவட்ட அவசர கட்டுப்பாட்டு மையம், TNSMART செயலி, சமூக வலைதளம் மற்றும் அச்சு ஊடகங்கள் மூலம் பொது மக்களுக்கு கொண்டு செல்லப்பட்டு வருகின்றன. இது தவிர, பேரிடர் காலங்களில் தகவல் தொடர்பை மேம்படுத்தும் நோக்குடன், தமிழக அரசின் தலைமைச் செயலர் அலுவலகம், பொதுத் துறை அரசுச் செயலர், முதன்மைச் செயலர்/ வருவாய் நிருவாக ஆணையர் மற்றும் மாநில நிவாரண ஆணையர், காவல் துறை தலைவர், கூடுதல் காவல் துறை தலைவர் (செயல்பாடு), பெருநகர சென்னை மாநகராட்சியின் ஆணையர், மாநில அவசர கட்டுப்பாட்டு மையம் மற்றும் கடலோர மாவட்டங்களின் ஆட்சியர்கள் உள்ளிட்டோருக்கு 20 Satellite Phone–கள் வழங்கப்பட்டுள்ளன.

**4.3.2. தேடுதல் , மீட்பு மற்றும் தகவல் தொடர்பு சாதனங்கள்**

2019−2020 ஆம் ஆண்டு, பெருநகர சென்னை மாநகராட்சிக்கு, தேடுதல், மீட்பு மற்றும் தகவல் தொடர்பு சாதனங்கள் கொள்முதல் செய்திட ரூ.7.25 கோடி நிதி ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது. அதே போன்று, தமிழ்நாடு தீயணைப்பு மற்றும் மீட்புப் பணிகள் துறைக்கு ரூ.14.26 கோடி நிதி ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது.

**4.3.3. பேரிடர் காலங்களில் தகவல் தொடர்பினை பலப்படுத்த புதிய அதிவேக அதிர்வலை பெட்டகங்கள் மற்றும் பழைய அதிவேக அதிர்வலைப்பெட்டகங்கள் பராமரிப்பு**

பேரிடர் காலங்களில் தகவல் தொடர்பு முறைகளை வலுப்படுத்துவதற்காக, புதிய அதிவேக அதிர்வலைப் பெட்டகங்கள் கொள்முதல் செய்திடவும், கடலோர மாவட்டங்கள் மற்றும் உள் மாவட்டங்களில் உள்ள பழைய அதிவேக அதிர்வலைப் பெட்டகங்களை பராமரித்திடவும், ரூ.81.98 இலட்சம் வழங்கி அரசு ஆணையிட்டுள்ளது.

**4.3.4. மீனவர்களுக்கு Satellite Phone, NavIC and NAVTEX**

பேரிடர்கள் குறித்து இந்திய வானிலை ஆய்வு மையத்திலிருந்து பெறப்படுகின்ற எச்சரிக்கை தகவல்களை, ஆழ்கடலில் மீன் பிடிக்கச் செல்லும் மீனவர்களுக்கு தெரிவிக்கும் பொருட்டு, ரூ.3.10 கோடி செலவில் Satellite Phone, NavIC and

NAVTEX உயர்தொழில் நுட்ப தொலைத் தொடர்பு கருவிகள் மீன்வளத்துறை மூலம் கொள்முதல் செய்யப்பட்டு, மீனவர்கள் மற்றும் கடலோர மாவட்ட நிர்வாகங்களுக்கு வழங்கப்பட்டுள்ளன.

**4.3.5. குறுவட்ட அளவில் (Firka) டெலிமெட்ரிக் மழையளவு பதிவிடும் கருவிகள் அமைத்தல், மின்னல் குறித்த முன் அறிவிப்பு அமைப்புகளை நிறுவுதல்**

குறுவட்ட (**Firka**) அளவில் டெலிமெட்ரிக் மழையளவு பதிவிடும் கருவிகள் ரூ.2.50 கோடி செலவில் அமைப்பதற்கும், ரூ.0.80 கோடி செலவில் மின்னல் குறித்த முன் அறிவிப்பு அமைப்புகளை ஏற்படுத்துவதற்கும் நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டு வருகிறது.

**4.3.6. பேரிடர் மேலாண்மைக்கான பொதுவான எச்சரிக்கை நெறிமுறை (CAP)**

பேரிடர் குறித்து பொது மக்களை எச்சரிப்பதற்கும், பேரிடரைத் தடுப்பதற்கான முன் எச்சரிக்கை நடவடிக்கைகள் பேரிடர் தணிப்பு, பேரிடர் காலங்களில் ஆயத்த நிலை மற்றும் திறன் மேம்பாடு ஆகியவற்றை நிவர்த்தி செய்வதற்கு தேசிய பேரிடர் மேலாண்மை ஆணையம் (NDMA) மற்றும் டெலிமாடிக்ஸ் மேம்பாட்டு மையம் (C–DOT) ஆகியவற்றுடன் தமிழ்நாடு பேரிடர் அபாயக் குறைப்பு முகமை ஒருங்கிணைந்து பேரிடர் மேலாண்மைக்கான பொதுவான எச்சரிக்கை நெறிமுறையினை (CAP) உள்ளடக்கிய ஒருங்கிணைந்த ஆரம்பகால எச்சரிக்கை தளத்தை மத்திய

அரசின் நிதி ரூ.14.99 கோடி மதிப்பீட்டில் செயல்படுத்த நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டுள்ளது.

தேசிய, மாநில, உள்ளூர் அளவில் தற்போதுள்ள எச்சரிக்கை அமைப்புகளை ஒருங்கிணைத்து பொதுமக்கள் மற்றும் முதல் நிலை மீட்பாளர்களுக்கு ஒரே சமயத்தில் குறுஞ்செய்தி, ஐவிஆர் அமைப்பு, தொலைக்காட்சி, வானொலி, அபாய ஒலி, இரயில் நிலையங்கள் மூலம் அறிவிப்பு மற்றும் சமூக ஊடகங்கள் வாயிலாக உள்ளூர் மொழியில் தெரியபடுத்துவது, ஒருங்கிணைந்த ஆரம்ப எச்சரிக்கை தளத்தின் முதன்மை நோக்கமாகும்.

இம்முன்னோடி திட்டத்திற்கு இந்திய வானிலை ஆய்வு மையம் மற்றும் மத்திய நீர்வள ஆணையம் ஆகிய அமைப்புகளிலிருந்து பெறப்படும் வானிலை முன்னறிவிப்பு மற்றும் பேரிடர் குறித்த ஆரம்ப கால எச்சரிக்கைகளை பயன்படுத்த முடிவு செய்யப்பட்டுள்ளது. இந்த பொதுவான எச்சரிக்கை நெறிமுறை மூலம் தமிழ்நாடு பேரிடர் அபாயக் குறைப்பு முகமை, மாநிலத்தில் செயல்படும் அனைத்து தொலை தொடர்பு சேவை நிறுவனங்கள் மூலமாக பொதுமக்களுக்கு பேரிடர் தொடர்பான பிற எச்சரிக்கை தகவல்களை குருஞ்செய்தி வாயிலாக தெரியபடுத்த இயலும்.

4.4. சமுதாயப் பங்களிப்பு

**4.4.1.** பேரிடர் உதவிப் படை

பேரிடர் காலங்களில் தேடுதல் மற்றும் மீட்பு நடவடிக்கைகளை மேம்படுத்திட அனைத்து மாவட்டங்களிலும் தன்னார்வ தொண்டு நிறுவனங்கள் மூலம் பேரிடர் உதவிப் படை உருவாக்கப்பட்டுள்ளது.

**4.4.2.** முதல் நிலை மீட்பாளர்கள் / கால்நடை மீட்பாளர்கள்

அரசு மேற்கொண்டு வரும் நடவடிக்கைகளில், சமுதாய பங்களிப்பினை உறுதி செய்திடும் வகையில், 43409 முதல் நிலை மீட்பாளர்களும் (14232 பெண்கள் உட்பட), பேரிடர்களின் போது கால்நடைகளை மீட்கும் பொருட்டு 8871 கால்நடை மீட்பாளர்களும் கண்டறியப்பட்டுள்ளனர். மேலும், பேரிடர்களின் போது வேரோடு சாய்ந்த மரங்களை வெட்டி அகற்றிடவும், பேரிடர் அல்லாத காலங்களில் மரம் நடுவதற்கும் 9909 முதல் நிலை மீட்பாளர்கள் கண்டறியப்பட்டுள்ளனர்.

**4.4.3.** பேரிடர் தடுப்பு மற்றும் தணிப்பு

பேரிடர்களால், குறிப்பாக வெள்ளம் மற்றும் வறட்சி போன்ற பேரிடர்களால் ஏற்படும் எதிரிடையான தாக்கங்களை குறைக்கும் வகையில், அரசு, தடுப்பு மற்றும் தணிப்பு உத்தியின் ஒரு பகுதியாக பல நடவடிக்கைகளை மேற்கொண்டும், அதற்கான நிதியினை ஒதுக்கீடு செய்தும் வருகின்றது. நீண்ட

கால பயனை கருத்தில் கொண்டு, சிறப்பான மறுசீரமைப்பு என்ற கொள்கையின் அடிப்படையில் தடுப்பு மற்றும் தணிப்பு நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. நீர் வடிநில மற்றும் நீர்வடிப்பகுதி குறித்த அணுகுமுறையின் அடிப்படையில், குறிப்பிடப்பட்ட அமைவிடங்களுக்கு ஏற்ப முழுமையான திட்டத்தினை தமிழ்நாடு அரசு செயல்படுத்தி வருகிறது.

### 4.4.4. சிறப்பான மறுசீரமைப்பு

சிறப்பான மறுசீரமைப்பு என்பது பேரிடர் மறுவாழ்வு பணிகளுக்கு மட்டும் அல்லாது நீண்ட கால துயர் தணிக்கும் முயற்சிகளுக்கும் அரசின் மிக முக்கிய கொள்கையாக கடைபிடிக்கப்பட்டு வருகிறது. பேரிடர்களை எதிர்கொள்ளும் சமுதாயத்தின் மீள்திறனை மேம்படுத்தும் வகையிலும், ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள் பேரிடர் அபாயத்தினை குறைத்து மனித உயிர்களுக்கும், உடைமைகளுக்கும் பாதுகாப்பினை உறுதி செய்யும் வகையிலும் அரசு முனைப்புடன் செயல்பட்டு வருகின்றது. கடந்த காலத்தில் எடுக்கப்பட்ட சிறப்பான மறுசீரமைப்பு கொள்கை அடங்கிய பேரிடர் நடவடிக்கைகள் பின்வருமாறு:–

**அட்டவணை–4.1**

| வ. எண். | பணிகள் | திட்டங்கள் | தொகை (ரூ. கோடியில்) |
|---|---|---|---|
| 1. | பல்வேறு பேரிடர்களை தாங்கக்கூடிய வீடுகள் | உலக வங்கி நிதி உதவியுடன் சுனாமி அவசர கால மறுவாழ்வுத் திட்டம் (ETRP) | 1,852 |
| 2. | வாழ்வாதாரம் மற்றும் குடிநீர் வழங்கல் பணிகள் | ஆசிய மேம்பாட்டு வங்கி நிதி உதவியுடன் சுனாமி அவசர கால உதவி திட்டம் (TEAP) | 629 |
| 3. | வாழ்வாதாரம் தொடர்பான பணிகள் | சர்வதேச வேளாண் மேம்பாட்டு நிதி (IFAD) உதவியுடன் சுனாமி பிந்தைய நிலையான வாழ்வாதார திட்டம் (PTSLP) | 129 |
| 4. | பல்வேறு பேரிடர்களை தாங்கக்கூடிய வீடுகள், பல்நோக்கு பாதுகாப்பு மையங்கள், மீன்வள உட்கட்டமைப்புக்கள் மற்றும் நிலைத்த வாழ்வாதாரம் மற்றும் முன் எச்சரிக்கை கருவிகள் | உலக வங்கி நிதி உதவியுடன் கடலோர சமூக ஆபத்து குறைப்பு திட்டம் (VRCC) | 1,959 |

**4.4.5.** கடலோர அபாய**க்** குறைப்பு திட்டம் **(CDRRP)**

தமிழகத்தின் 13 கடலோர மாவட்டங்களில் உலக வங்கி நிதி உதவியுடன் கடலோர பேரிடர் அபாய குறைப்பு திட்டம் ரூ.1560.19

கோடி திருத்திய மதிப்பீட்டின்படி செயல்படுத்தப்பட்டு வருகிறது. இத்திட்டத்தின் கீழ் ரூ.310 கோடி செலவில் 488 கடலோர கிராமங்களில் பேரிடரை தாங்கக்கூடிய 14,347 வீடுகள், 143 இடங்களில் அறிவிப்பு பலகைகளுடன் கூடிய முறையான இணைப்பு வழித்தடங்கள், ரூ.331.03 கோடி செலவில் கடலோர மாவட்டங்களில் 121 பல்நோக்கு பாதுகாப்பு மையங்கள் கட்டி முடிக்கப்பட்டுள்ளது. மேலும், நீடித்த மீன்வளத் திட்டத்தின் கீழ் ரூ.218.41 கோடி செலவில் மீன்பிடி துறைமுகங்களை மறுசீரமைப்பு செய்தல் மற்றும் நவீனப்படுத்துதல், புதிய மீன் இறங்குதளம் அமைத்தல், குழாய் பனிக்கட்டி இயந்திர நிலையம் கட்டுதல் மற்றும் ஆற்று முகத்துவாரத்தை உறுதிப்படுத்துதல் ஆகிய பணிகள் முடிக்கப்பட்டுள்ளன. இதுவன்றி, 17539 எண்ணிக்கையிலான VHF கடல்சார் கையடக்க வானொலிகள் மீனவர்களுக்கு அளிக்கப்பட்டுள்ளதோடு, மீனவர்களின் வாழ்வாதாரத்தை மேம்படுத்தும் வகையில் பல்வேறு மீன்வள மேலாண்மை திட்டங்கள் ரூ.107.50 கோடி செலவில், செயல்படுத்தப்பட்டுள்ளன. மேலும், கூடுதல் பணிகள் மேற்கொள்ளும் பொருட்டு அரசு ரூ.10.92 கோடி நிதி ஒதுக்கீடு செய்து ஆணையிட்டுள்ளது.

இது தவிர, 7337 குழுக்கள் அடங்கிய 4,10,261 நபர்களுக்கு சமுதாய அடிப்படையிலான பேரிடர் அபாய மேலாண்மை பயிற்சிகள் ரூ.15.00 கோடி செலவில் அளிக்கப்பட்டுள்ளது.

மேலும், ரூ.1.26 கோடி செலவில், 6 முதல் 12 ஆம் வகுப்பு பாடத்திட்டங்களிலும் மற்றும் ஆசிரியர் பயிற்சி வகுப்பு பாடத்திட்டங்களிலும் பேரிடர் மேலாண்மை குறித்த பாடங்கள் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளன.

தமிழகத்தின் அனைத்து மாவட்டங்களிலுள்ள கல்லூரிகளின் தேசிய மாணவர் படை, மாணவர்கள், மாணவியர்கள் மற்றும் அலுவலர்களுக்கான பேரிடர் மேலாண்மை திறன் மேம்பாட்டு பயிற்சியானது 1.23 கோடி ருபாய் செலவில் வழங்க தமிழக அரசால் ஆணையிடப்பட்டு, 19.02.2020 அன்று சென்னையிலும், 03.03.2020 அன்று மதுரையிலும், மாண்புமிகு வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத் துறை அமைச்சர் அவர்களால் மேற்படி பயிற்சியானது துவக்கி வைக்கப்பட்டது. இந்த திறன் மேம்பாட்டு பயிற்சி மூலம் பயிற்சி பெற்ற தேசிய மாணவர் படையினைச் சார்ந்த மாணவ, மாணவியர், தமிழகத்தில் உள்ள பல்வேறு கல்லூரிகள் மற்றும் கிராமங்களுக்குச் சென்று, சுமார் ஒரு இலட்சத்திற்கும் மேற்பட்டவர்களுக்கு பேரிடர் குறித்த விழிப்புணர்வு ஏற்படுத்தும் வகையில் இப்பயிற்சித் திட்டம் வடிவமைக்கப்பட்டுள்ளது. தற்போது நடைபெற்று வரும் பொதுமக்களுக்கு விழிப்புணர்வு ஏற்படுத்தும் இப்பயிற்சியானது பொதுமக்கள் மற்றும் ஊடகங்களின் பாராட்டைப் பெற்றுள்ளது.

ரூ.7.50 கோடி செலவில் ஒருங்கிணைக்கப்பட்ட கடற்கரை பகுதிகள் குறித்த மேலாண்மைத் திட்டம் (ICZMP),

பாதிப்புக்குள்ளாகக் கூடிய பகுதிகள் குறித்த வரைபடம் மற்றும் தமிழ்நாடு கடற்கரை பகுதி மக்களுக்கு பயிற்சி திட்டம் ஆகியவற்றை தயாரிக்கும் பணி செயல்படுத்தப்பட்டுள்ளது.

நாகப்பட்டினம் மற்றும் கடலூர் மாவட்டங்களில் பேரிடர்களின் போது மின் உட்கட்டமைப்புகளுக்கு ஏற்படும் பாதிப்புகளை தவிர்க்கும் விதமாக பூமிக்கு மேலுள்ள மின் இணைப்புகளை பூமிக்கு கீழான இணைப்புகளாக மாற்றும் பணி ரூ.406.83 கோடி செலவில் தமிழ்நாடு மின் உற்பத்தி மற்றும் பகிர்மான கழகத்தின் மூலம் செயல்படுத்தப்பட்டு வருகிறது.

பேரிடர்கள் தொடர்பான முன் எச்சரிக்கை தகவல்களை கடற்கரையில் வாழும் சமூகத்தினருக்கு விரைவாக வழங்கும் பொருட்டு ரூ.50.00 கோடி செலவில் முன் எச்சரிக்கை கருவிகள் அமைப்பதற்கு திட்டமிடப்பட்டு பணிகள் முடியும் தருவாயில் உள்ளன.

மேலும், ரூ.11.5708 கோடி மதிப்பீட்டில், வருவாய் நிருவாகம் மற்றும் பேரிடர் மேலாண்மை துறைக்கு Satellite Phone–கள், மாநில அவசர கட்டுப்பாட்டு மையம் மற்றும் மாவட்ட அவசர கட்டுப்பாட்டு மையங்களுக்கு கணினிகள், இதர சாதனங்கள் கொள்முதல் செய்யவும், வருவாய் நிருவாக ஆணையர் அலுவலத்தில் உள்ள கூட்ட அரங்குகள் மற்றும் காணொலி காட்சி அரங்குகளை மேம்படுத்தவும் அரசு அனுமதி அளித்துள்ளது.

### 4.4.6. நீண்ட கால வெள்ளத் தடுப்பு நடவடிக்கைகள்

பொதுவாக, பேரிடர்கள் ஏற்படும் போது நிவாரணப் பணிகளுக்கு மட்டுமே முன்னுரிமை அளித்து வந்த நிலையில், மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் அவர்களின் மேலான வழிகாட்டுதலின் பேரில், பேரிடர் தணிப்புப் பணிகளுக்கும் முக்கியத்துவம் அளிக்கப்பட்டு வருகிறது– இதன் அடிப்படையில், பெருநகர சென்னை மாநகராட்சி மற்றும் காஞ்சிபுரம், திருவள்ளூர் ஆகிய மாவட்டங்களில் வெள்ள தணிப்பு நடவடிக்கைகளுக்கு ரூ.100.00 கோடி நிதி ஒதுக்கீடு அளிக்கப்பட்டு பணிகள் முடிக்கப்பட்டுள்ளன. மேலும், மாண்புமிகு தமிழக துணை முதலமைச்சர் அவர்கள் 08.02.2019 அன்று சட்டமன்றத்தில், 2019–2020 ஆண்டிற்கான நிதி அறிக்கையில் அறிவித்தவாறு, காஞ்சிபுரம், திருவள்ளூர் மற்றும் கடலூர் ஆகிய மாவட்டங்களில் நீண்ட கால வெள்ளத் தணிப்புப் பணிகள் மேற்கொள்ளும் பொருட்டு ரூ.238.13 கோடி நிதி ஒதுக்கீடு செய்யப்பட்டு, பணிகள் நடைபெற்று வருகின்றன. இந்த புதிய அணுகுமுறை பிற மாநிலங்களுக்கு உன்னதமான வழிகாட்டியாக திகழ்கிறது. மேலும், ரூ.3000 கோடி மதிப்பீட்டிலான விரிவான வெள்ளத் தணிப்புத் திட்டம் குறித்த முன்மொழிவானது உலக வங்கி மற்றும் சீனாவில் உள்ள ஆசிய உட்கட்டமைப்பு முதலீட்டு வங்கியின் நிதி உதவி பெறும் பொருட்டு மத்திய அரசுக்கு அனுப்பி வைக்கப்பட்டுள்ளது.

**4.4.7 கஜா புயல் – நவம்பர், 2018**

கஜா புயலால் பாதிப்புக்குள்ளாகிய மாவட்டங்களில், நிவாரணம் மற்றும் மறுசீரமைப்புப் பணிகளுக்காக மாநில நிவாரண நிதி மற்றும் மாநில நிதியிலிருந்து ரூ. 2415.52 கோடி (தேசிய பேரிடர் நிவாரண நிதியிலிருந்து ரூ. 900.31 கோடி உட்பட) நிதி ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது.

**4.4.8. கஜா புயல் மறுசீரமைப்பு, மறுவாழ்வு மற்றும் புனரமைப்புத் திட்டம்**

கஜா புயலால் பாதிக்கப்பட்ட பகுதிகளில் வீடுகள் மற்றும் பிற உட்கட்டமைப்பு வசதிகளை மறுசீரமைக்கவும் விவசாயம், தோட்டக்கலை, மீன்வளம் போன்ற தொழில்களில் பாதிக்கப்பட்டவர்களுக்கு மறுவாழ்வு அளித்திட தேவையான புனரமைப்பு நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படும் என்ற மாண்புமிகு முதலமைச்சர் அவர்களின் அறிவிப்பின்படி, சென்னையை தலைமையிடமாகக் கொண்டு கஜா புயல் மறுசீரமைப்பு, மறுவாழ்வு மற்றும் புனரமைப்புத் திட்டத்தின், மாநில திட்ட அலகு, மூத்த இந்திய ஆட்சிப்பணி அதிகாரி நிலையில் திட்ட இயக்குநர் தலைமையின் கீழும் நாகப்பட்டினம் (நாகப்பட்டினம் மற்றும் திருவாரூர் மாவட்டங்கள்) மற்றும் தஞ்சாவூரை (தஞ்சாவூர் மற்றும் புதுக்கோட்டை மாவட்டங்கள்) தலைமையிடமாகக் கொண்டு இரு கள அலகுகள் (field units)

இந்திய ஆட்சிப்பணி அதிகாரி நிலையில் கூடுதல் திட்ட இயக்குநர்கள் கீழும் உருவாக்கப்பட்டு செயல்பட்டுவருகின்றன.

கஜா புயலினால் பாதிக்கப்பட்ட நான்கு மாவட்டங்களின் ஊரகப்பகுதிகளில் புதிய வீடுகள் கட்டுவதற்கு ஏதுவாக பாதிக்கப்பட்டவர்களுக்கு 1,25,340 பட்டா உத்தரவுகள் வழங்கப்பட்டு, தற்போது வரை, 13,270 பட்டாதாரர்களுக்கு வீடுகள் கட்டித்தர அனுமதி வழங்கப்பட்டுள்ளது. மேலும், நகரப்பகுதிகளில், 10,549 பட்டா உத்தரவுகள் வழங்கப்பட்டு, தற்போது வரை, 3330 பட்டாதாரர்களுக்கு தமிழ்நாடு குடிசை மாற்றுவாரியத்தின் மூலம் புதிய வீடுகள் கட்ட பணி ஆணை வழங்கப்பட்டுள்ளது.

தமிழ்நாடு சட்டமன்றப் பேரவை விதி 110–ன் கீழ் மாண்புமிகு தமிழக முதலமைச்சர் அவர்கள் அறிவித்தவாறு, கஜா புயலால் பாதிக்கப்பட்ட மாவட்டங்களில் உள்ள மீனவர்களின் மாற்று வாழ்வாதாரத்திற்கு, மீன்வளத் துறைக்கு ரூ.31.15 கோடி நிதி ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது.

இயற்கை இடர்களால் பாதிப்புக்குள்ளாகும் மக்களுக்கு நிவாரணம் மட்டுமே வழங்கப்பட்டு வந்த நிலையில், மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் அவர்களின் தொலைநோக்கு பார்வையால் மேற்கொள்ளப்பட்டுள்ள இந்த நடவடிக்கைகளின்

காரணமாக இயற்கை பேரிடர்களால் பாதிப்புக்குள்ளாகிய மக்களது வாழ்வாதாரம் பாதுகாக்கப்பட்டுள்ளது.

இது தவிர, மாண்புமிகு வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத் துறை அமைச்சர் அவர்கள் சட்டமன்றத்தில் 17.07.2019 அன்று அறிவித்தவாறு, பொது மக்களுக்கு விழிப்புணர்வு ஏற்படுத்தும் வகையில், திருவாரூர் மாவட்டம், மன்னார்குடி வட்டம் செருகளத்தூர் கிராமத்தில் ரூ.5.00 கோடி செலவில் மரப்பூங்கா அமைக்க வனத்துறைக்கு நிதி ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது.

4.5 பேரிடர் நிகழ்வுகள் மற்றும் மாநிலத்தின் மீட்பு நடவடிக்கைகள் **2019**

**4.5.1.** நீரியல் வறட்சி

அரசாணை நிலை எண்.91. வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத் துறை, நாள்.07.03.2019–ன் படி தமிழகத்தில் 24 மாவட்டங்கள் மற்றும் 7 மாவட்டங்களில் உள்ள 38 வட்டாரங்கள் நீரியல் வறட்சி பாதித்த மாவட்டங்கள் / வட்டாரங்களாக அறிவித்து ஆணை வெளியிடப்பட்டது. இதன் தொடர்ச்சியாக 2019–ம் ஆண்டு கோடைக்கால குடிநீர் பற்றாக்குறையை எதிர்கொள்ள ஏதுவாக ரூ.317.03 கோடி தொடர்புடைய துறைகளுக்கு பின்வருமாறு வழங்கப்பட்டுள்ளது.

**அட்டவணை–4.2**

| **வ. எண்** | **துறையின் பெயர்** | **வழங்கப்பட்ட தொகை (கோடியில்)** |
|---|---|---|
| 1. | சென்னை பெருநகர குடிநீர் வழங்கல் மற்றும் கழிவு நீரகற்று வாரியம் | 219.66 |
| 2. | தமிழ்நாடு குடிநீர் வழங்கல் மற்றும் வடிகால் வாரியம் | 16.00 |
| 3. | நகராட்சி நிருவாகத்துறை | 56.05 |
| 4. | பேரூராட்சிகள் துறை | 25.32 |
| | மொத்தம் | **317.03** |

**4.5.2.** அமெரிக்கன் படைப்புழு தாக்கம்

2018–2019 –ம் ஆண்டின் பின் பருவ காலத்தில் பயிரிடப்பட்ட மக்காச்சோளப் பயிர்கள் அமெரிக்கன் படைப்புழுவினால் தாக்கப்பட்டு பாதிப்புக்குள்ளானது. இப்புழுவின் தாக்குதல் முதன் முதலாக கரூர் மாவட்டத்தில் கண்டறியப்பட்டு இதே காலக்கட்டத்தில் அரியலூர், கடலூர், வேலூர், விழுப்புரம், திருச்சிராப்பள்ளி, திண்டுக்கல், மதுரை, விருதுநகர், தூத்துக்குடி, திருநெல்வேலி, கோயம்புத்தூர், திருப்பூர் மற்றும் சேலம் ஆகிய பிற மாவட்டங்களிலும் இப்புழுவின் அதிவேகமாக பரவுகின்ற தன்மையாலும், சாதகமான தட்ப வெப்ப காரணிகளாலும் பரவியது. இப்புழுவினை கட்டுப்படுத்த கடும் நடவடிக்கைகள் மேற்கொள்ளபட்ட பொழுதிலும், தமிழ்நாட்டில் 17 மாவட்டங்களில் பயிரிடப்பட்ட மக்காச்சோளப்பயிர்கள் பாதிப்புக்குள்ளாயின.

மாண்புமிகு தமிழக முதலமைச்சர் அவர்கள் சட்டமன்றப் பேரவை விதி எண்.110–ன் கீழ் 4.7.2019 அன்று அறிவித்ததன் அடிப்படையில், இப்படைப்புழுவினால் பாதிக்கப்பட்ட 17 மாவட்டங்களை சேர்ந்த விவசாயிகளுக்கு, அரசாணை எண் 214, வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத் துறை, நாள்.04.07.2019–ன்படி, ரூ.186.25 கோடி இடுபொருள் மானியமாக மாநில பேரிடர் நிவாரண நிதியிலிருந்து வழங்கப்பட்டுள்ளது. இயற்கை பேரிடர்களால் ஏற்படும் பயிர் சேதங்களுக்கு மட்டும் இடு பொருள் மானியம் வழங்கப்பட்டு வந்த நிலையில், மாண்புமிகு தமிழக முதலமைச்சர் அவர்கள் விவசாயிகளின் நலனைக் கருத்தில் கொண்டு, அமெரிக்கன் படைப்புழுவினால் தாக்கப்பட்டு பாதிப்புக்குள்ளான மக்காச்சோளப்பயிர்களுக்கு இடு பொருள் மானியத் தொகை வழங்கியது விவசாயிகளின் துன்பத்தை போக்குவதாக அமைந்தது.

**4.5.3.** நீலகிரி மாவட்டத்தில் **எற்பட்ட கடும்** மழை

நீலகிரி மாவட்டத்தில், ஆகஸ்ட் 2019–ல் அதிகப்படியான மழைப் பொழிவு ஏற்பட்டது. ஜூன், ஜூலை, ஆகஸ்ட் மாதங்களில் நீலகிரி மாவட்டத்திற்கான சராசரி மழைப்பொழிவு 707 மி.மீ., என்ற நிலையில், இம்மாவட்டத்தில், 6.8.2019 முதல் 9.8.2019 வரை 4 நாட்களில் சராசரியாக 642 மி.மீ. மழை பெய்துள்ளது. இது 647 விழுக்காடு கூடுதலாகும். மேலும், குந்தா வட்டத்தில்,

அவலான்ச்சி பகுதியில், இந்த 4 நாட்களில் முறையே 405 மிமீ, 820 மி.மீ, 911 மி.மீ மற்றும் 350 மி.மீ மழை பெய்தது. இதில், 911 மி.மீ மழையானது தமிழக வரலாற்றில் மிக அதிகப்படியான மழைப்பொழிவாகும். நீலகிரி மாவட்டத்தில் முன்னெப்போதும் இல்லாத மழைப்பொழிவின் காரணமாக தொடர் நிலச்சரிவுகள் ஏற்பட்டு, உயிர் இழப்புகள் நிகழ்ந்ததோடு மட்டுமல்லாமல் பல்வேறு பகுதிகளில் உட்கட்டமைப்புகளுக்கும் சேதம் ஏற்பட்டது. நீலகிரி மாவட்டத்தில் கன மழை பெய்யத் தொடங்கியவுடன், மீட்பு மற்றும் நிவாரண நடவடிக்கைகள் மாநில நிர்வாகத்தால் விரைந்து செயல்படுத்தப்பட்டது. வருவாய் நிருவாகம் மற்றும் பேரிடர் மேலாண்மைத் துறையின் ஒருங்கிணைப்போடு, தமிழ்நாடு பேரிடர் மீட்புப் படை, தமிழ்நாடு தீயணைப்பு மற்றும் மீட்புப் பணிகள் துறை, தோட்டக்கலைத் துறை, ஊரக வளர்ச்சித் துறை, நெடுஞ்சாலைத் துறை உள்ளிட்ட துறைகளைக் கொண்ட அலுவலர்கள் அடங்கிய 35 பல்துறை மண்டலக் குழுக்கள், வேரோடு சாய்ந்த மரங்களை அகற்றியதோடு, நிலச்சரிவு காரணமாக மஞ்சூர், கூடலூர் மற்றும் எமரால்டு அணை பகுதிகளில் ஏற்பட்ட போக்குவரத்து பாதிப்பினையும் சீரமைத்தன. அசம்பாவிதங்கள் ஏற்படுவதை தடுக்கும் வண்ணம் 15,000–க்கும் மேற்பட்டோர் தங்கள் வீடுகளில் இருந்து அழைத்து வரப்பட்டு பாதுகாப்பான இடங்களில் தங்க வைக்கப்பட்டனர். நீலகிரி மாவட்டத்தில் பெய்த கன மழையின் காரணமாக உதகமண்டலம், குந்தா, கூடலூர் மற்றும் பந்தலூர் வட்டங்கள் மிகுந்த

பாதிப்புக்குள்ளாயின. மாண்புமிகு தமிழக முதலமைச்சர் அவர்களின் உத்தரவின் பேரில், மாண்புமிகு வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத் துறை அமைச்சர், வருவாய் நிர்வாக ஆணையர் மற்றும் மாநில நிவாரண ஆணையர், தலைவர் மற்றும் நிர்வாக இயக்குநர், தமிழ்நாடு மின் நிதி மற்றும் உட்கட்டமைப்பு மேம்பாட்டு கழகம் மற்றும் நீலகிரி மாவட்டத்திற்கான கண்காணிப்பு அலுவலர் மற்றும் இயக்குநர், பேரிடர் மேலாண்மை ஆகியோர் மீட்பு மற்றும் நிவாரணப் பணிகளை துரிதப்படுத்த நீலகிரி மாவட்டத்திற்கு உடனடியாக விரைந்தனர். மிக கன மழையின் காரணமாக மின் உட்கட்டமைப்புகளான, உயர்ந்த / தாழ்ந்த மின் தடங்கள் மற்றும் கம்பங்கள், மின் விநியோக மின்மாற்றிகள் ஆகியவை சேதமடைந்தன. மேலும், சாலைகள், மழை நீர் வடிகால்கள், தடுப்புச் சுவர்கள், தெரு விளக்குகள், சிறுபாலங்கள் மற்றும் நகராட்சிகள், பேரூராட்சிகள் மற்றும் கிராம ஊராட்சிகளில் இதர உட்கட்டமைப்புகளும் சேதமடைந்தன. இதுவன்றி, மாவட்டத்தில், கன மழையின் காரணமாக பயிர்சேதமும் ஏற்பட்டது. எனவே, கன மழையின் காரணமாக பாதிப்பிற்குள்ளான உட்கட்டமைப்புகளை சீரமைக்கவும் மற்றும் விவசாயிகளுக்கு இடுபொருள் மானியமாகவும் அரசு நிதி வழங்கி ஆணையிட்டுள்ளது.

### 4.5.4. வடகிழக்குப் பருவமழை

தமிழகத்தின் வருடாந்திர மழையளவில், 48 விழுக்காடு வடகிழக்குப் பருவமழை காலத்தில் தமிழகத்திற்கு கிடைக்கப் பெறுகிறது. வடகிழக்குப் பருவமழையின் போது, மாநிலத்தின் கடலோர மாவட்டங்களுக்கு, வருடாந்திர மழையளவில், 60 விழுக்காடும் மற்றும் இதர உள்மாவட்டங்களுக்கு, 40–50 விழுக்காடும், மழை கிடைக்கப் பெறுகிறது. 2019–ஆம் ஆண்டு வடகிழக்குப் பருவமழைக் காலத்தில், மாநிலம் முழுவதும் பரவலாக மழை பெய்ததன் காரணமாக, இயல்பான மழை அளவான 445.7 மி.மீ. என்ற நிலையில், வடகிழக்குப் பருவமழைக் காலத்தில் 453.5 மி.மீ. மழை பதிவாகியுள்ளது. 2019ஆம் ஆண்டு வடகிழக்குப் பருவமழைக் காலத்தில், கனமழை / சூறாவளி காரணமாக ஏற்படக் கூடிய சேதங்களைத் தவிர்க்கும் பொருட்டு, மாநில மற்றும் மாவட்ட நிர்வாகத்தால் போதுமான ஆயத்த / முன் எச்சரிக்கை நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன.

மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் அவர்கள் 23.09.2019, 22.10.2019 மற்றும் 02.12.2019 ஆகிய நாட்களில், வடகிழக்கு பருவமழை தொடர்பாக மேற்கொள்ளப்பட்ட முன் எச்சரிக்கை நடவடிக்கைகள் குறித்து, தொடர்புடைய அனைத்து துறை உயர் அலுவலர்களுடன் ஆய்வுக்கூட்டம் நடத்தி, மேற்கொள்ளப்பட வேண்டிய முன் எச்சரிக்கை நடவடிக்கைகள் குறித்து அறிவுரை

வழங்கினார்கள். மேலும், மாண்புமிகு வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத் துறை அமைச்சர் அவர்கள் மற்றும் வருவாய் நிருவாக ஆணையர் பல்வேறு மாவட்டங்களில் வடகிழக்கு பருவ மழை தொடர்பாக மேற்கொள்ளப்பட்ட முன் எச்சரிக்கை நடவடிக்கைகள் குறித்து ஆய்வு மேற்கொண்டார்கள். இது தவிர, தமிழக அரசின் தலைமைச் செயலர் அவர்கள் தலைமையில், 24.9.2019 மற்றும் 4.10.2019 ஆகிய நாட்களில் அனைத்து துறை சார்ந்த அலுவலர்கள் மற்றும் மாவட்டம் / பெருநகர சென்னை மாநகராட்சியின் கண்காணிப்பு அலுவலர்களுடன் ஆய்வுக் கூட்டம் நடத்தப்பட்டது.

வடகிழக்குப் பருவமழைக் காலத்தில், கன மழை மற்றும் புயல் ஏற்படும் போது மேற்கொள்ளப்பட வேண்டிய முன் எச்சரிக்கை நடவடிக்கைகள் தொடர்பான சுற்றறிக்கைகள் அடங்கிய சுற்றறிக்கைத் தொகுப்பு ஒன்றும், பேரிடர் காலங்களில் தேவைப்படும் முக்கிய தொலைபேசி எண்கள் அடங்கிய கையேடு ஒன்றும் வெளியிடப்பட்டன.

காவல், தீயணைப்பு, ஊரக வளர்ச்சி, வேளாண்மை மற்றும் பிற துறை சார்ந்த அலுவலர்கள் அடங்கிய 639 பல்துறை மண்டல குழுக்கள் உருவாக்கப்பட்டு பாதிப்பிற்குள்ளாகும் பகுதிகளை தீவிரமாக கண்காணிக்கும் பொருட்டு அனுப்பி வைக்கப்பட்டனர்.

தமிழ்நாடு தீயணைப்பு மற்றும் மீட்புப் பணிகள் துறையின் 4537 தீயணைப்பு வீரர்கள், பயிற்சி பெற்ற 1400 தன்னார்வலர்கள், மாநில பேரிடர் மீட்புப் படையினரிடம் பயிற்சி பெற்ற 6606 காவலர்கள் தயார் நிலையில் இருந்தனர்.

2019 ஆம் ஆண்டு வடகிழக்கு பருவமழைக் காலத்தில் மேற்கொள்ள வேண்டிய அனைத்து முன் எச்சரிக்கை நடவடிக்கைகளும் அரசால் மேற்கொள்ளப்பட்டு, தயார் நிலையில் இருந்தது. வடகிழக்கு பருவ மழை காலத்தில் பெய்த மழையின் காரணமாகவும், அரசு மேற்கொண்ட குடிமராமத்து பணிகளின் காரணமாகவும், மழை நீர் பெருமளவில் சேகரிக்கப்பட்டுள்ளதோடு, மாநிலத்தில் நிலத்தடி நீரின் அளவும் உயர்ந்துள்ளது.

**4.6.** மாநில பேரிடர் நிவாரண நிதி **(SDRF)**

2015–2016 ஆம் ஆண்டு முதல் 2020–2021 ஆம் ஆண்டு வரையுள்ள காலகட்டங்களுக்கு மாநில பேரிடர் நிவாரண நிதியின் கீழ் ஒதுக்கீடு செய்யப்பட்ட மொத்த தொகையின் விவரம்:




2015–16 ம் ஆண்டில் மாநில பேரிடர் நிவாரண நிதியின் கீழ் ரூ.679 கோடி ஒதுக்கீடு செய்யப்பட்ட நிலையில், இது படிப்படியாக உயர்த்தப்பட்டு, 2020–21–ம் ஆண்டிற்கு ரூ. 1360 கோடி பேரிடர்களின் தாக்கத்தை எதிர்கொள்ள நிதி ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது,

### 4.7. கோவிட் – 19 (கொரொனா வைரஸ்) நோய் தொற்றினை தடுப்பதற்கு தமிழக அரசு மேற்கொண்ட நடவடிக்கைகள்

இந்திய நாடு உட்பட 136 நாடுகளில் பரவியுள்ள கோவிட்–19 என்கிற கொரோனா வைரஸ் நோய் கட்டுப்படுத்தக்கூடிய ஒரு தொற்று நோயாக உலக சுகாதார நிறுவனம் அறிவித்துள்ளது. இதனைத் தொடர்ந்து, இந்தியாவில் கொரோனா வைரஸ் நோய் பரவி வருவதையும், உலக சுகாதார நிறுவனம் கொரோனா வைரஸ் நோயினை ஒரு தொற்று நோயாக அறிவித்துள்ளதையும்

கருத்தில் கொண்டு, மத்திய அரசு கொரோனா வைரஸ் நோயின் தாக்கத்தை ஒரு பேரிடராக அறிவித்துள்ளது.

இந்நிலையில், தமிழக அரசு, அறிவிக்கை எண்.118, நாள் 14.3.2020 (அரசு ஆணை எண்.95, சுகாதாரம் மற்றும் குடும்ப நலத்துறை, நாள் 13.3.2020)–ன்படி, கொரோனா வைரஸ் நோயினை ஒரு தொற்று நோயாக அறிவித்துள்ளது.

மேலும், மாண்புமிகு தமிழக முதலமைச்சர் அவர்களின் தலைமையில், 9.3.2020, 13.03.2020, 16.03.2020 மற்றும் 19.3.2020 ஆகிய நாட்களில், தமிழகத்தில் கொரோனா வைரஸ் நோயின் தாக்கத்தை பற்றியும், இது தொடர்பாக மேற்கொள்ள வேண்டிய முன் எச்சரிக்கை நடவடிக்கைகள் குறித்தும் தமிழ்நாடு மாநில பேரிடர் மேலாண்மை ஆணையத்தின் கூட்டங்கள் நடைபெற்றது. இதனைத் தொடர்ந்து, மாண்புமிகு தமிழக முதலமைச்சர் அவர்கள், தமிழகத்தில் கொரோனா வைரஸ் நோய் தடுப்பு நடவடிக்கைகளுக்காக, மக்கள் நல்வாழ்வு மற்றும் குடும்ப நலத்துறை, போக்குவரத்துத் துறை. சென்னை பெருநகர மாநகராட்சி உள்ளிட்ட பல துறைகளுக்கு மாநில பேரிடர் நிவாரண நிதியிலிருந்து ரூ.60.00 கோடி நிதி ஒதுக்கீடு செய்து அறிவித்தார்கள்.

## அட்டவணை – 4.3

| வ. எண். | துறை | ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ள தொகை (ரூ. கோடியில்) |
|---|---|---|
| 1 | மக்கள் நல்வாழ்வு மற்றும் குடும்பநலத்துறை | 30.00 |
| 2 | போக்குவரத்துத்துறை | 5.00 |
| 3 | பெருநகர சென்னை மாநகராட்சி | 4.00 |
| 4 | நகராட்சி நிருவாகம் | 6.00 |
| 5 | ஊரக வளர்ச்சித் துறை | 5.00 |
| 6 | பேரூராட்சி இயக்குநரகம் | 2.00 |
| 7 | இந்து சமய அறநிலையத்துறை | 3.00 |
| 8 | பள்ளிக் கல்வி மற்றும் உயர்கல்வித் துறை | 2.00 |
| 9 | அங்கன்வாடி மையங்கள் | 0.50 |
| 10 | மாவட்ட ஆட்சியர்கள் | 2.50 |
| | மொத்தம் | 60.00 |

மேலும், மாண்புமிகு தமிழக முதலமைச்சர் அவர்கள் 16.03.2020 அன்று, மாண்புமிகு அமைச்சர் பெருமக்கள், அரசுத் துறையின் உயர் அலுவலர்களுடன் ஆய்வுக் கூட்டம் நடத்தி, கொரோனா வைரஸ் நோய் தடுப்பு குறித்து மேற்கொள்ள வேண்டிய முன் எச்சரிக்கை நடவடிக்கைகள் குறித்து பல்வேறு அறிவுரைகள் வழங்கினார்கள். மாண்புமிகு தமிழக முதலமைச்சர் அவர்களின் அறிவுரையின் பேரில் வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத் துறையானது, மக்கள் நல்வாழ்வு மற்றும் குடும்ப நலத் துறை மற்றும் இதர துறைகளை ஒருங்கிணைத்து, கொரோனா வைரஸ் நோய் தடுப்பிற்கான அனைத்து வகையான முன் எச்சரிக்கை நடவடிக்கைளையும் மேற்கொண்டு வருகிறது.

## 4.8. பேரிடர் மேலாண்மையில் தமிழக அரசின் சாதனைகள்

கஜா புயல் 16.11.2018 அன்று சுமார் 130–145 கி.மீ. வேகத்தில், நாகப்பட்டினம் மற்றும் வேதாரண்யம் இடையே கரையை கடந்த போது நாகப்பட்டினம், தஞ்சாவூர், திருவாரூர், புதுக்கோட்டை, ஆகிய மாவட்டங்களில், குடிசைகள், ஓட்டு வீடுகள், கான்கிரீட் வீடுகள், விவசாய மற்றும் தோட்டக்கலை பயிர்கள், கால்நடைகள், கோழி பண்ணைகள் மற்றும் மின்கட்டமைப்புகள் ஆகியவை பெருத்த சேதமடைந்தன. மாநில அரசு போதுமான அளவு ஆயத்த / முன் எச்சரிக்கை நடவடிக்கைகள் மேற்கொண்டதன் காரணமாக, உயிரிழப்புகள் பெருமளவில் தவிர்க்கப்பட்டது. மேலும், தமிழக அரசால் மேற்கொள்ளப்பட்ட பெருமளவிலான துப்புரவு மற்றும் சுகாதார நடவடிக்கைகளின் காரணமாக தொற்றுநோய் பரவுவது முற்றிலுமாக தடுக்கப்பட்டது. தேசிய பேரிடர் மேலாண்மை ஆணையம், செப்டம்பர் 2019 ஆண்டு வெளியிட்ட அறிக்கையில், கஜா புயலின் போது தமிழக அரசு பின்பற்றிய இந்த சிறப்பான நடைமுறைகளை பாராட்டியுள்ளது.

ஐக்கிய நாடுகளின், ஆசியா மற்றும் பசிபிக் பகுதிகளுக்கான பொருளாதார மற்றும் சமூக ஆணையம், செப்டம்பர் 2019ல் வெளியிட்டுள்ள அறிக்கையில், 2018 ஆம் ஆண்டு வடகிழக்கு பருவமழைக் காலத்தில், குறிப்பாக, கஜா புயலின் போது, **TNSMART** செயலியின் பயனர்கள், பேரிடரின் தாக்கத்தை அறிந்து கொள்ளவும், கள அளவிலான அலுவலர்களுக்கு பேரிடர் அபாயம் குறித்த தகவல்கள் கொண்டு செல்லவும் **TNSMART** செயலி பெரிதும் உதவியதாகவும், பாதிப்பிற்குள்ளாகும் சமூகத்திற்கு அவர்தம் இருப்பிடத்திற்கு ஏற்றாற் போல் சேவைகள் வழங்கிட பேரிடர் மேலாண்மை அலுவலர்களுக்கு உதவியதாகவும், தக்க நேரத்தில்

மேற்கொள்ளப்பட்ட மீட்பு நடவடிக்கையின் காரணமாக அதிகப்படியான உயிரிழப்புகள் தவிர்க்கப்பட்டதாகவும் பாராட்டு தெரிவித்துள்ளது.

**4.9. நீடித்த** வளர்ச்சி**க்கான** இலக்குகள்

5.1 2030 ஆம் ஆண்டு நீடித்த வளர்ச்சிக்கான செயற்பணி நிரலில், உலக அளவில் இன்றும், எதிர்வரும் காலத்திலும் மக்களுக்கு கிடைக்கப் பெற வேண்டிய தகுதி, அமைதி, வளம் கிடைக்கப்பெறுவது தொடர்பாக குறிப்பிடப்பட்டுள்ளது. 2030 ஆம் ஆண்டுக்குள் முன்னேற்றத்திற்கான நடவடிக்கைகளை நெறிப்படுத்தி, எவர் ஒருவரும் விடுபடாமல் அனைவருக்கும் நல்வாழ்வு என்ற இலக்கை எய்திடும் வகையில் 17 இலக்குகள் மற்றும் 169 குறிக்கோள்களை உள்ளடக்கி நீடித்த வளர்ச்சிக்கான இலக்குகள் உருவாக்கப்பட்டுள்ளன. பேரிடர் அபாயக் குறைப்பிற்கான சென்டாய் கூட்டமைப்பு நெறிமுறைகள் 2015–2030–ன் அடிப்படையில், மாநில பேரிடர் மேலாண்மை தொலைநோக்கு திட்டம் 2018 – 2030–ஐ தமிழ்நாடு அரசு வெளியிட்டது.

பேரிடர் அபாய குறைப்பு திட்டங்கள் மூலம் பேரிடர்களின் தாக்கத்தை எதிர்கொள்ளும் நோக்கத்தில் நான்கு முன்னுரிமைகளும், 7 இலக்குகளும் இந்த தொலைநோக்கு திட்டத்தில் இடம் பெற்றுள்ளது. வருவாய் நிருவாகம், நில நிருவாகம் மற்றும் பேரிடர் அபாயக் குறைப்பு ஆகியவற்றிக்கு நேரடி தொடர்புடைய பின்வரும் மூன்று நீடித்த வளர்ச்சி

இலக்குகள் கண்டறியப்பட்டு மாநிலத்தின் குறிகாட்டிகளும் உருவாக்கப்பட்டுள்ளன.

**அட்டவணை-4.4**

| **நீடித்த வளர்ச்சிக்கான இலக்குகள்** | **விரிவான குறிக்கோள்கள்** |
|---|---|
| 1. அனைத்து இடங்களிலும் அனைத்து வகையிலான ஏழ்மையை ஒழித்தல் | 2030 – ஆம் ஆண்டுக்குள் வறுமையில் உள்ளவர்கள், பாதிக்கப்பட்ட பகுதியில் உள்ளவர்கள், பருவநிலை மாற்றங்களால் ஏற்படும் இயற்கைச் சீற்றங்கள், சமூக பொருளாதாரம் மற்றும் சுற்றுச்சூழல் பாதிப்பு மற்றும் பேரிடர்களால் பாதிப்பிற்குள்ளானவர்கள் ஆகியோரது நெகிழ் திறனை மேம்படுத்துதல். |
| 11. அனைவரையும் உள்ளடக்கிய பாதுகாப்பான, நெகிழ்திறன் மிக்க மற்றும் நிலைத்தன்மை கொண்ட மாநகரங்களையும், குடியிருப்புகளை உருவாக்குதல் | 2030க்குள் இறப்புகளின் எண்ணிக்கையையும், பாதிப்பிற்குள்ளாகும் மக்களின் எண்ணிக்கையையும் கணிசமாக குறைத்து பாதிப்பிற்குள்ளாகும் பகுதிகளில் உள்ள ஏழை, எளிய மக்களை பாதுகாக்கும் நோக்குடன், பேரிடர்கள் மற்றும் நீர் தொடர்பான பேரிடர்களால் ஏற்படும் உலகளாவிய மொத்த உள்நாட்டு உற்பத்தி குறைபாடு காரணமாக ஏற்படும் நேரடி பொருளாதார இழப்புகளை கணிசமாக குறைத்தல். |
| 13. பருவ நிலை மாறுபாட்டையும் அதன் | இயற்கைப் பேரிடர் மற்றும் பருவநிலை மாற்றத்தால் ஏற்படும் பேரிடரால் |

| | |
|---|---|
| தாக்கங்களையும் எதிர்கொள்ளக்கூடிய வகையிலான உடனடி நடவடிக்கைகளை மேற்கொள்ளுதல் | பாதிக்கப்படுவோரின் எதிர்கொள்ளும் நெகிழ் திறனை மேம்படுத்துதல். |

அனைத்து அரசு துறைகளும் பேரிடர் மேலாண்மை திட்டத்தினை தயாரித்து அதனை காலமுறைப்படி மேம்படுத்தி வருகின்றன. இந்த இலக்கை அடையும் வகையில் அனைத்து மாவட்டங்களிலும் மாவட்ட பேரிடர் மேலாண்மை திட்டம் தயாரிக்கப்பட்டுள்ளது. பேரிடர் அபாய குறைப்பு, காலநிலை மாற்றத்தால் ஏற்படும் பேரிடர்களை தணித்தல் மற்றும் பேரிடர்களை எதிர்கொள்ளுதல் ஆகிய நோக்கங்களை அடைவதற்கு முன் எச்சரிக்கை, கல்வி, விழிப்புணர்வு, மனித வளம் மற்றும் நிறுவன அமைப்புத் திறன் ஆகியவற்றில் உள்ள தொடர்புகளை வலுப்படுத்த தமிழக அரசு உறுதி பூண்டுள்ளது.

5.2 வருவாய் துறையால் செயல்படுத்தப்பட்டு வருகின்ற மாண்புமிகு முதலமைச்சரின் உழவர் பாதுகாப்புத் திட்டம், முதியோர் ஓய்வூதியத் தொகை திட்டம் உள்ளிட்ட பல்வேறு சமூக பாதுகாப்புத் திட்டங்கள் பொது மக்களின் வறுமையை குறைப்பதில் முக்கிய பங்கு வகிக்கிறது.

5.3 அதே போன்று, போக்குவரத்துத் துறை, உள்துறை மற்றும் சுகாதார மற்றும் குடும்ப நலத்துறை ஆகிய துறைகளுடன் ஒருங்கிணைந்து விபத்துகள் மூலம் நிகழும் இறப்புகளின்

எண்ணிக்கையை குறைக்கும் பொருட்டு தமிழக அரசு முனைப்பான நடவடிக்கைகளை மேற்கொண்டு வருகிறது. கிருமிகளால் எளிதில் பரவக்கூடிய தொற்று நோய்கள் பரவாமல் தடுக்க, கள அளவில் எடுக்கப்பட வேண்டிய முன் எச்சரிக்கை மற்றும் சீரமைப்பு நடவடிக்கைகளை, வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத் துறை, மற்ற துறைகளை ஒருங்கிணைத்து முனைப்புடன் செயல்படுத்துகிறது.

சென்டாய் கூட்டமைப்பின் கருத்துகளை உள்ளடக்கிய தமிழ்நாடு பேரிடர் மேலாண்மை தொலைநோக்குத் திட்டம் தமிழக அரசால் வெளியிடப்பட்டுள்ளது. இந்த தொலைநோக்குத் திட்டம், பேரிடர் அபாய குறைப்பிற்கான நீடித்த வளர்ச்சி இலக்குகளை அடைய வழிவகுப்பதோடு, பேரிடர் மேலாண்மையின் அனைத்து துறைகளையும் உட்படுத்தி எதிர் காலத்தில் நெகிழ் திறன் மிக்க மாநிலமாக தமிழ்நாட்டை உருவாக்க வழிவகை செய்கிறது.

## 5. நில நிருவாகம்

முன்னாள் வருவாய் வாரியம் 1980ஆம் ஆண்டு மாற்றி அமைக்கப்பட்டதில் நில நிர்வாகம் தொடர்பான பணிகளை நிர்வகிக்க நில நிருவாக ஆணையரகம் உருவாக்கப்பட்டது. நில நிருவாக ஆணையரகம், வருவாய் துறையின் முக்கியமான அங்கங்களில் ஒன்றாகும். மாநிலத்தில் உள்ள அனைத்து அரசு நிலங்களை நிர்வகிப்பதுடன், கீழ்க்காணும் பொருண்மைகளையும் கையாள்கிறது–

- விவசாய நில ஒப்படை, வீட்டுமனை ஒப்படை,
- ஒரு துறையிலிருந்து மற்றொரு துறைக்கு நில மாற்றம்,
- மாநில அரசிடமிருந்து மத்திய அரசுக்கு நில மாற்றம்,
- மத்திய / மாநில அரசின் பொதுத்துறை நிறுவனங்கள் / வாரியங்களுக்கு நில உரிமை மாற்றம்,
- அரசு நிலங்களைக் குத்தகைக்கு வழங்குதல்,
- ஆக்கிரமணங்களை அகற்றுதல்,
- எஸ்டேட் ஒழிப்புச் சட்டம்,
- பொது நோக்கங்களுக்காக தனியார் நிலங்களைக் கையகப்படுத்தல்,
- தமிழ்நாடு திரையரங்கு ஒழுங்கு முறைச் சட்டம், 1955–இன் கீழ் மேல்முறையீடு,
- இணைய வழி பட்டா மாற்றம்

- நத்தம் நிலவரித் திட்டம் மற்றும் நில உடைமை மேம்பாட்டுத் திட்டத்தின் கீழான மேல்முறையீடு,
- பாசனம் மற்றும் தொழில் நோக்கங்களுக்காக, அரசு நிலங்களின் பாசன நீர் பயன்படுத்துவதை ஒழுங்குபடுத்தும் பணி மற்றும்
- சிறு பாசனப் புள்ளிவிவரப் பகுத்தாய்வு.
- அரசு நில விபரப் பதிவேட்டினை மேம்படுத்தி தமிழ் நிலம் செயலியுடன் இணைத்து பராமரித்தல்.

நில நிர்வாக ஆணையரகத்தில், நில நிர்வாக ஆணையரின் கீழ் மூன்று இணை ஆணையர்கள், ஒரு துணை இயக்குநர், ஒரு தலைமைக் கணக்கு அலுவலர் மற்றும் ஆறு உதவி ஆணையர்கள் ஆகியோர் மேற்காணும் பணிகளை நிறைவேற்ற துணை புரிகின்றனர்.

## 5.1. பட்டா மாறுதல்

பட்டா மாறுதல் சேவையானது, பொது மக்களைச் சென்றடைவதை இந்த ஆணையரகம் கண்காணித்து வருகிறது. மேலும், நில நிர்வாக ஆணையர் அவர்களால் இணையதள வழியிலான பட்டா மாறுதல் குறித்த முன்னேற்றத்தை அவ்வப்போது நில அளவை மற்றும் நிலவரித் திட்ட இயக்குநருடன் ஆய்வு செய்யப்படுகிறது.

### 5.1.1. இணையதள வழியிலான பட்டா மாறுதல்

மாண்புமிகு தமிழ்நாடு முன்னாள் முதலமைச்சர் அவர்களின் 10.6.2011 நாளைய சட்டமன்றப் பேரவை அறிவிப்பிற்கிணங்க, கிராம நிருவாக அலுவலர்கள் பட்டா மாறுதல் விண்ணங்களைப் பெறுவதற்கு ஏதுவாக, வருவாய் நிலை ஆணை எண் 31(8)–இல் தகுந்த திருத்தங்கள் செய்யப்பட்டது, பின்னர் பட்டா மாறுதல் குறித்த விண்ணப்பங்களை குறித்த காலத்தில் முறையாக பரிசீலனை செய்து விரைவாக முடிவு செய்ய ஏதுவாக விரைவு பட்டா மாறுதல் திட்டம் அறிமுகப்படுத்தப்பட்டு, செயல்பட்டு வந்தது.

மேலும், பட்டா மாறுதல் குறித்த சேவைகள் பொது மக்களை நேரடியாகச் சென்றடைவதற்கு ஏதுவாக பட்டா மாறுதல் முறைகளை மேலும் மேம்படுத்தி இணையதள வழியிலான பட்டா மாறுதல் முறை செயல்படுத்தப்பட்டது. இந்த முறையின்கீழ், மனுதாரர்கள் தங்களுக்கு அருகிலுள்ள பொது சேவை மையத்தில், இணையதளத்தில், பட்டா மாறுதல் சேவைக்காக விண்ணப்பித்துக் கொள்ளவும், அதன் மீது ஒப்புகைச் சீட்டு வழங்கப்பட்டு, உட்பிரிவு இல்லாத இனங்களுக்கு 15 நாட்களுக்குள்ளாகவும், உட்பிரிவு இனங்களுக்கு 30 நாட்களுக்குள்ளாகவும் பட்டா மாறுதல் செய்யப்பட்டு வருகிறது. அவ்வாறு, பட்டா மாறுதல் செய்யப்பட்ட சிட்டா, 'அ' பதிவேடு முதலானவற்றை இணையதளம் வாயிலாக, **"எந்த நேரத்திலும்**

**எங்கிருந்து வேண்டுமாயினும்" (anytime anywhere)** என்ற அடிப்படையில் பெற்றுக் கொள்ளலாம்.

1.4.2019 முதல் 31.12.2019 வரையிலான காலத்தில், இந்த திட்டத்தின் கீழ், அனைத்து மாவட்டங்களிலும், மொத்தம் 31,12,909 மனுக்கள் பெறப்பட்டு, அவற்றில் 13,90,893 பட்டா மாறுதல் ஆணைகள் வழங்கப்பட்டுள்ளன.

இத்திட்டமானது, "The best e-Governance Scheme" என்ற சான்றிதழை Confederation of Indian Industries – Connect event of 2017 என்ற அமைப்பிடமிருந்து பெற்றுள்ளது.

### 5.1.2. பத்திரப் பதிவுத்துறையுடன் பட்டா மாற்றம் குறித்த நடவடிக்கைகளை ஒருங்கிணைத்தல்:

நிலம் தொடர்பான அனைத்துப் பதிவுகளும், வட்டாட்சியர் அலுவலகங்களுக்கு அனுப்பப்பட்டு, இணையதள வழியாக வருவாய்ப் பதிவுகளில் (Tamilnilam land records database) நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுகின்றன. இதன் மூலம், நில உரிமையாளர்கள் பட்டா மாறுதல் கோரி மீண்டும் மனு செய்வது தவிர்க்கப்படுகின்றது. மேலும், இணையவழி பட்டா மாறுதல் தொடர்பாக சார்-பதிவாளர் அலுவலகம் மற்றும் வட்டாட்சியர் அலுவலகத்திற்குமான ஒருங்கிணைப்பு மென்பொருள் உருவாக்கப்பட்டு நடைமுறைப் படுத்தப்பட்டுள்ளது. தற்பொழுது, அரசு வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத்துறை ஆணை

எண். 84, நாள் 4.2.2020–இல், நில அளவை மற்றும் நிலப் பதிவேடுகள் துறையின் பரிந்துரையின் அடிப்படையில், இணையவழி தள உட்பிரிவு அல்லாத பட்டா மாற்ற நிகழ்வுகளில் தானாகவே நிலப் பதிவேடுகளில் பட்டா மாற்றம் செய்தல் பணி முறையினை உருவாக்கும் திட்டம் செயல்படுத்த ஆணையிடப்பட்டுள்ளது.

**5.2. அரசு நில விவர வங்கி :**

நில மாற்றம், நிலக் குத்தகை மற்றும் நில ஒப்படை ஆகியவற்றை சீரிய முறையில் செயல்படுத்தும் வகையில், மாநிலத்தில் உள்ள அனைத்து அரசு நிலங்கள் குறித்த ஒருங்கிணைந்த தகவல் தொகுப்பு, சென்னையிலுள்ள மாநிலத் தகவல் தொகுப்பு மையத்தில் உருவாக்கப்பட்டு, பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளது. இத்தகவல் தொகுப்பின் அடிப்படையில், அரசு நில விவரப் பதிவேடு உருவாக்கப்பட்டு, தேசிய தகவல் மையம் மூலம் இத்திட்டத்திற்கு தொழில்நுட்ப உதவி வழங்கப்பட்டு வருகிறது. இப்பதிவேட்டில் பதியப்படும் விவரங்கள், மத்திய தகவல் தொகுப்பில் உள்ள அரசு நிலங்கள் குறித்த தற்போதைய தகவல்களைப் பிரதிபலிக்கும் வகையில் அமைகிறது.

## 5.3 தொன்மையான நில ஆவணங்களைக் கணினி மயமாக்குதல்:

தொன்மையான நில ஆவணங்களைப் பாதுகாப்பதற்கும், எதிர்காலப் பயன்பாட்டிற்கும், கணினிமயமாக்கல் நடவடிக்கை சென்னை, திருவள்ளூர், காஞ்சிபுரம் மாவட்ட அலுவலகங்களில் மேற்கொள்ளப்பட்டது. இதனைத் தொடர்ந்து, இத்திட்டமானது ஆவணக்காப்பகம் மற்றும் வரலாற்று ஆராய்ச்சித் துறையில் பாதுகாக்கப்பட்டு வரும், அசல் நிலவரித் திட்டப் பதிவேடுகள் (Original Settlement Registers) மற்றும் தொன்மை வாய்ந்த மதிப்பு மிக்க கோப்புகள், ஆவணங்கள் முதலியவை கணினி மயமாக்க நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டுள்ளது. இத்திட்டத்தின் கீழ் சென்னை மாவட்ட ஆட்சியரகத்தில் 3,56,244 பக்கங்களும், திருவள்ளூர் மாவட்ட ஆட்சியரகத்தில் 4,62,445 பக்கங்களும் மற்றும் ஒருங்கிணைந்த காஞ்சிபுரம் மாவட்ட ஆட்சியரகத்தில் 3,69,777 பக்கங்களும் கணினி மயமாக்கப்பட்டுள்ளன. மேலும் இத்திட்டத்தின் கீழ் 1,01,361 பக்கங்கள் கொண்ட மறு நில அளவைப் பதிவேடுகள் (Re-Settlement Register (RSR)) கணினி மயமாக்கப்பட்டுள்ளன. நடப்பு ஆண்டில் இத்திட்டத்தை பிற மாவட்டங்களுக்கும் விரிவுபடுத்தி தொன்மையான ஆவணங்களை கணினி மயமாக்க நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டு வருகிறது.

## 5.4. வீட்டுமனை ஒப்படை

வீடற்ற ஏழை மக்கள் அனைவருக்கும் சொந்தமாக குடியிருப்பு வசதி பெறுவதற்காக இலவச வீட்டுமனைப் பட்டா வழங்க வேண்டுமென்பதே அரசின் கொள்கையாகும். இதனை அடிப்படையாகக் கொண்டு, வருவாய் நிலை ஆணை .21–ன் கீழ் கிராம நத்தமாக ஒதுக்கப்பட்ட நிலங்களிலிருந்து, தகுதியுடைய, வீடற்ற ஏழை மக்களுக்கு இலவச வீட்டுமனைகள் ஒப்படை செய்யப்படுகின்றன. நத்தம் வகைபாடு கொண்ட நிலங்கள் போதுமானதாக இல்லாத நேர்வுகளில், பிற ஆட்சேபகரமற்ற அரசு புறம்போக்கு நிலங்களை தேர்வு செய்து வருவாய் நிலை ஆணை எண் 21(6)–ன் கீழ் வருவாய் கோட்டாட்சியர் / மாவட்ட ஆட்சித் தலைவர் ஆகியோர்களுக்கு வழங்கப்பட்டுள்ள அதிகாரத்தை பயன்படுத்தி நத்தமாக வகைபாடு மாற்றம் செய்து, தகுதி வாய்ந்த வீடற்ற ஏழை மக்களுக்கு இலவச வீட்டு மனைகள் ஒப்படை செய்யப்படுகின்றன.

கிராமப் புறங்களில் இலவச வீட்டுமனை ஒப்படையைப் பெறுவதற்கு ஆண்டு வருமானம் ரூ.30,000/–க்குக் குறைவாகவும், நகர்ப்புறங்களில் ரூ.50,000/–க்குக் குறைவாகவும் உள்ள வீடில்லா ஏழைக் குடும்பத்தினர் தகுதியுடையவராவர். பெண்கள் நலனை உறுதி செய்யும் வகையில் இலவச வீட்டுமனை ஒப்படை குடும்பத்தின் பெண் உறுப்பினர் பெயரில் மட்டுமே வழங்கப்படுகின்றன. ஊரக பகுதியில் மூன்று சென்ட்

நிலமும், நகர்ப்புற பகுதியில் ஒன்றரை சென்ட் நிலமும், மாநகராட்சி பகுதிகளில் ஒரு சென்ட் நிலமும் தகுதியுள்ள பயனாளிகளுக்கு நடைமுறையில் உள்ள விதிகளின்படி வீட்டுமனை ஒப்படை செய்யப்படுகிறது.

வீட்டுமனை ஒப்படை செய்வதற்கு, வருவாய்த் துறை, அலுவலர்களுக்கு அரசாணை (நிலை) எண் 248, நாள் 28.7.2009–ன் கீழ், ஒப்படை செய்யப்படும் நில மதிப்பின் அடிப்படையில் நிதி அதிகார வரம்பு கீழ்க்கண்ட அட்டவணையில் குறிப்பிட்டவாறு நிர்ணயிக்கப்பட்டுள்ளது :

**அட்டவணை–5.1**

**வீட்டுமனை ஒப்படைக்கான நிதி அதிகார உச்சவரம்பு**

| வ. எண் | அலுவலர்கள் | நிதி அதிகார உச்ச வரம்பு (நில மதிப்பு – ரூபாயில்) |
|---|---|---|
| 1. | வட்டாட்சியர் | 30,000/– |
| 2. | கோட்டாட்சியர் | 50,000/– |
| 3. | மாவட்ட வருவாய் அலுவலர் | 1,00,000/– |
| 4. | மாவட்ட ஆட்சித் தலைவர் | 4,00,000/– |
| 5. | நில நிருவாக ஆணையர் | 5,00,000/– |
| 6. | அரசு | 5,00,000/–க்கு மேல் |

வீடற்ற ஏழை மக்களுக்கு இலவச வீட்டுமனை வழங்குவதற்கு, தமிழ்நாடு அரசு அதிக முக்கியத்துவம் அளித்து

ஒவ்வொரு நிதியாண்டிலும், அதற்கான இலக்கு நிர்ணயம் செய்யப்பட்டு வருகிறது. இதனடிப்படையில் 2011–2012–ஆம் நிதியாண்டு முதல் 2019–2020–ஆம் நிதியாண்டு வரையில், 23,50,000 இலவச வீட்டுமனை ஒப்படை வழங்குவதற்கு, இலக்கு நிர்ணயிக்கப்பட்டு, ஒவ்வொரு நிதியாண்டிலும், இலக்கினை விஞ்சி மொத்தம் 24,74,167 இலவச வீட்டுமனைகள் ஒப்படை வழங்கப்பட்டுள்ளன. கடந்த ஒன்பது ஆண்டுகளில் தகுதியுள்ள நபர்களுக்கு கீழ்கண்டுள்ள விபரப்படி இலவச வீட்டுமனைப் பட்டாக்கள் கீழ்க்கண்ட அட்டவணையில் குறிப்பிட்டுள்ளவாறு வழங்கப்பட்டுள்ளது.

**அட்டவணை–5.2**

இலவச வீட்டுமனைப் பட்டாக்கள் வழங்கப்பட்ட விவரம்

| ஆண்டு | இலக்கு | வழங்கப்பட்ட இலவச வீட்டுமனைப் பட்டாக்கள் |
|---|---|---|
| 2011–2012 | 1,00,000 | 1,21,804 |
| 2012–2013 | 1,00,000 | 1,31,299 |
| 2013–2014 | 2,00,000 | 2,17,723 |
| 2014–2015 | 3,00,000 | 3,81,708 |
| 2015–2016 | 3,50,000 | 4,05,111 |
| 2016–2017 | 3,50,000 | 3,54,745 |
| 2017–2018 | 3,50,000 | 3,88,386 |
| 2018–2019 | 3,00,000 | 3,00,146 |
| 2019–2020 | 3,00,000 | * 2,13,035 |
| **மொத்தம்** | **23,50,000** | **25,13,957** |

(* பிப்ரவரி 2020 வரை)

பொதுவாக ஆட்சேபகரமான புறம்போக்கு நிலங்களில் உள்ள ஆக்கிரமிப்புகளை அகற்றுவது குறித்து சட்டங்கள் மற்றும் விதிகள் இருப்பினும், உண்மையில் வீடில்லா ஏழை எளியவர்களின் வறிய சூழ்நிலையினை கருத்தில் கொண்டு, வான்புகழ்க் கொண்ட தெய்வப்புலவர் திருவள்ளுவர் அவர்களின் அமைச்சு என்ற அதிகாரத்தின் குறள் எண். 637ல்

"செயற்கை அறிந்தக் கடைத்தும் உலகத்(து)
இயற்கை அறிந்து செயல்"

என்ற வாக்கினை மரியாதையுடன் பின்பற்றும் பொருட்டு, நூலறிவால் செயலை செய்யும் வகைகளை அறிந்த போதிலும் உலகத்து இயற்கையை அறிந்து அதனோடு பொருந்துமாறு இவ்வரசானது ஆட்சேபகரமான புறம்போக்கு நிலங்களில் உள்ள நீண்டகால குடியிருப்பு ஆக்கிரமிப்புகளை அகற்றி, அத்தகைய நிலங்களை முந்தைய நிலவியல் தன்மைக்கு உட்படுத்தும் பொருட்டு நடவடிக்கை மேற்கொண்டாலும், வருவாய்த்துறையின் மூலம் ஆட்சேபகரமற்ற பிற புறம்போக்கு நிலத்தை மாற்றுப்புலமாக தேர்வு செய்து அல்லது தனியார் நிலங்களை கையகப்படுத்தி, ஆக்கிரமணதாரர்களை மறுகுடியமர்வு செய்து இலவச வீட்டுமனைப் பட்டா வழங்க அரசாணை (நிலை) எண்.318, வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத்துறை, நாள் 30.8.2019–ன்படி குடியிருப்பு ஆக்கிரமணங்களை வரன்முறைப்படுத்துவதற்காக

நெறிமுறைகளுடன் கூடிய ஒருங்கிணைந்த சிறப்பு திட்டம் செயல்படுத்தப்பட்டது. இத்திட்டத்தின்படி ஆட்சேபகரமற்ற அரசு புறம்போக்கு நிலங்களில் வசிக்கும் ஏழை மக்களுக்கு ஆக்கிரமிப்பை வரன்முறை செய்து இலவச வீட்டுமனைப் பட்டா வழங்கவும், ஆட்சேபகரமான புறம்போக்கு நிலங்களில் உள்ள குடியிருப்பு ஆக்கிரமணங்களை அகற்றி அவர்களுக்கு மாற்று இடம் வழங்குவதற்கு தனியார் நிலங்களை கையகப்படுத்தி, இலவச வீட்டுமனைப் பட்டா வழங்கவும் உத்தரவிடப்பட்டுள்ளது. இத்திட்டத்தின் கீழ் இலவச வீட்டுமனைப் பட்டா பெறுவதற்கு பயனாளிகளின் ஆண்டு குடும்ப வருமான வரம்பாக ரூபாய் மூன்று இலட்சம் என நிர்ணயம் செய்யப்பட்டுள்ளது. இதன் அடிப்படையில் ஆட்சேபகரமற்ற புறம்போக்கு நிலங்களில் 1,36,615 குடியிருப்பு ஆக்ரமணங்கள் கண்டறியப்பட்டு, அத்தகைய ஆக்ரமணங்கள் தகுதியின் அடிப்படையில் வரன்முறை செய்து இலவச வீட்டுமனைப் பட்டா வழங்க நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது. அதே போன்று ஆட்சேபகரமான புறம்போக்கு நிலங்களில் கண்டறியப்பட்ட 1,77,923 குடியிருப்பு ஆக்ரமணங்களை அகற்றி, அவர்களுக்கு மாற்றுப்புலம் தேர்வு செய்து மறுகுடியமர்வு செய்ய ஏதுவாக இலவச வீட்டுமனைப் பட்டாக்கள் வழங்குவதற்கு நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது. இத்திட்டம் ஒரு வருட காலத்திற்கு செயல்படுத்தப்பட வேண்டும் என்று உத்தரவிடப்பட்டு, தற்போது சிறப்பாக செயல்படுத்தப்பட்டு வருகிறது.

அரசு புறம்போக்கு நிலங்களில் உள்ள ஆக்ரமணங்கள் தொடர்பாக, தரவு தளம் (Data Base) உருவாக்கி, சிறப்பு வரன்முறைத் திட்டத்தின் கீழ் வீட்டுமனைப் பட்டாக்கள் வழங்கும் பணி முன்னேற்றத்தை ஆய்வு செய்யும் வகையில் அரசு நிலப்பதிவேடு (மென்பொருள்) செயலியை மேம்படுத்துவதற்கு தேசிய தகவல் மையத்துடன் ஒருங்கிணைந்து நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டு வருகிறது. மேலும், அரசு புறம்போக்கு நிலங்களிலுள்ள நிலவியல் ஆக்ரமண விவரங்களை அறிந்துகொள்ள ஏதுவாக அரசு நிலப் பதிவேடு செயலி, 'தமிழ்நிலம்' மற்றும் 'இ-அடங்கலுடன்' இணைப்பதற்கும் நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டு வருகிறது.

## 5.5 நில மாற்றம்

வருவாய் நிலை ஆணை 23 மற்றும் 23ஏ-இன் கீழ், அரசு நிலங்கள் நிலமாற்றம் செய்யப்படுகின்றன. வருவாய் நிலை ஆணை 23-இன் கீழ் மத்திய அரசுத் துறைகளுக்கு நிலக்கிரையத்தை வசூலித்துக் கொண்டும், வருவாய் நிலை ஆணை 23 ஏ-இன் கீழ் மாநில அரசுத் துறைகளுக்கு நிலக்கிரையமின்றியும் அரசு நிலங்கள் நிலமாற்றம் செய்யப்படுகின்றன.

மத்திய / மாநில அரசுத் துறைகளுக்கு அரசு நிலங்கள் தேவைப்பட்டால், கேட்புத் துறையானது, சம்பந்தப்பட்ட மாவட்ட ஆட்சியரிடம் நிலத்திட்ட அட்டவணையுடன் விண்ணப்பிக்க

வேண்டும். கேட்புத் துறையின் தேவை மற்றும் இருப்பிலுள்ள தகுதியுடைய அரசு நிலங்கள் ஆகியவற்றை புலத்தணிக்கை செய்தும், வருவாய் ஆவணங்களுடன் சரிப்பார்த்தும் மாவட்ட ஆட்சியர் உரிய முன்மொழிவினை நில நிருவாக ஆணையர் மூலமாக அரசுக்கு அனுப்ப வேண்டும். நில நிருவாக ஆணையரின் பரிந்துரையின் பேரில், கேட்புத்துறைக்கு நில மாற்றம் செய்து அரசாணை வெளியிடப்பட்டு வருகிறது.

அத்தியாவசிய தேவைக்காக ஆட்சேபகரமான புறம்போக்கு நிலங்களான நீர்நிலை, மயானம், பாதை போன்ற நிலங்களை தவிர்த்து குறைந்த அளவிலான புறம்போக்கு நிலங்களை அரசு துறைகளுக்கு நில மதிப்பு உச்சவரம்பின்றி நிலமாற்றம் செய்வதற்கு மாவட்ட ஆட்சியர்களுக்கு அரசாணை (நிலை) எண். 503, வருவாய்த்துறை, நாள் 21.9.1999.இன்படி அதிகாரம் வழங்கப்பட்டுள்ளது.

மந்தைவெளி அல்லது மேய்க்கால் வகைபாடுடைய அரசு புறம்போக்கு நிலங்களை பாதுகாக்கும் பொருட்டு அரசு அவ்வாறு மேய்க்கால் மந்தைவெளி நிலங்களை நிலமாற்றம் செய்யும் போது சமமான அளவுள்ள மாற்றுப்புலம் அளிக்கப்பட வேண்டும் என அறிவுறுத்தியுள்ளது. மேலும் மேம்பாட்டுக் கட்டணமாக ஒரு ஏக்கருக்கு ரூ.6,000/– அல்லது ஒரு ஹெக்டேருக்கு ரூ.15,000/– என்ற வீதத்தில் சம்பந்தப்பட்ட கேட்புத் துறையினரிடம் வசூலிக்கப்படுகிறது. மாற்று நிலம் உள்ளாட்சி அமைப்பிடம்

ஒப்புவிக்கப்பட்டு, அவை கால்நடைகளில் மேய்ச்சல் பயன்பாட்டிற்கு மேம்படுத்தப்பட்டு இருந்தாலும், அதன் உரிமை வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத்துறை வசம் இருக்கும்.

பிற அரசுத்துறைகளுக்கு நிலமாற்றம் செய்து ஆணையிடப்பட்டாலும் அனைத்து அரசு நிலங்களுக்கும் வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மை துறையே பாதுகாவலராக உள்ளது. மேலும் சம்பந்தப்பட்ட துறை நிலத்தை பயன்படுத்தாமல் இருந்தாலோ அல்லது நிபந்தனைகள் மீறப்பட்டாலோ மேற்படி நிலங்களை மீளப்பெற்று தகுதி மற்றும் தேவையுள்ள பிறிதொரு துறைக்கு நிலமாற்றம் செய்யும் உரிமையை வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத் துறை தக்க வைத்துள்ளது.

2011–ஆம் ஆண்டு முதல் 31.12.2019 வரையில், 4,841 ஏக்கர் அரசு நிலங்கள் கல்வி, நீதி, போக்குவரத்து, காவல், சுகாதாரம், நெடுஞ்சாலை, பொதுப்பணி, தொழில் மற்றும் வணிகம், வேலைவாய்ப்பு மற்றும் பயிற்சி, மீன்வளம், அணுசக்தி, எல்லைப் பாதுகாப்புப்படை மற்றும் இராணுவம் போன்ற பல்வேறு மாநில / மைய அரசுத்துறைகளுக்கு 587 இனங்களில் நிலமாற்றம் செய்து ஆணைகள் பிறப்பிக்கப்பட்டுள்ளன.

1.4.2019 முதல் 31.12.2019 வரையில் கீழ்க்கண்ட அட்டவணையில் கண்டுள்ளவாறு நிலமாற்றம் செய்யபட்டுள்ளது.

| | | |
|---|---|---|
| முன்மொழிவுகளின் மொத்த எண்ணிக்கை | : | 44 |
| வெளியிடப்பட்ட அரசாணைகளின் எண்ணிக்கை | : | 44 |
| நில மாற்றம் செய்யப்பட்ட மொத்த விஸ்தீரணம் | : | 445 ஏக்கர் |

## 5.6 நில உரிமை மாற்றம்

அரசு நிலங்களை அரசு துறைகளுக்கு நிலமாற்றம் செய்வது போலவே அரசு நிலங்களை வருவாய் நிலை ஆணை 24–இன்கீழ் பொதுப் பயன்பாட்டிற்காக நில உரிமை மாற்றமும் செய்யப்படுகின்றன. உள்ளாட்சி அமைப்புகள், மத்திய மற்றும் மாநில அரசு நிறுவனங்கள் / கழகங்கள் / வாரியங்கள் / பல்கலைக் கழகங்கள் ஆகியவற்றிற்கு அவற்றின் திட்டங்களுக்காக நில உரிமை மாற்றம் செய்யப்படுகின்றன. சில அரிய நேர்வுகளில் தனியார் நிறுவனங்களுக்கும் அவற்றின் தேவை, அவசியம் போன்றவற்றினை ஆய்வு செய்து, அரசின் வசம் நிலம் இருக்கும்பட்சத்தில் நில உரிமை மாற்றம் செய்யப்படுகிறது. மேற்படி நிலங்கள் வணிக நோக்கமில்லாத பயன்பாட்டிற்காக நில உரிமை மாற்றம் செய்யும் நேர்வுகளில் ஒரு மடங்கு சந்தை நில மதிப்பு வசூல் செய்தும், வணிக நோக்கத்திற்காக நில உரிமை மாற்றம் செய்யும் நேர்வுகளில் இரு மடங்கு சந்தை நில மதிப்பு வசூல் செய்தும், வ.நி.ஆ. 24(6)ன் படி உள்ள நிபந்தனைகளுக்குட்பட்டு நில உரிமை மாற்றம் செய்யப்படுகிறது.

இவ்வினங்களில் விதி மீறல் ஏதேனும் கண்டறியப்படின் நில உரிமை மாற்றம் செய்யப்பட்ட நிலங்கள் இழப்பீடுத் தொகை ஏதுமின்றி அரசுக்கு மீளப் பெறப்படுகின்றன.

பொது நலன் கருதி, தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியம் மற்றும் சென்னை பெருநகர குடிநீர் வழங்கல் மற்றும் கழிவுநீர் அகற்று வாரியம் மற்றும் உள்ளாட்சி அமைப்புகளுக்கு குடிநீர் வழங்கல் திட்டத்திற்காக அரசு நிலங்கள் நிலக் கிரயமின்றி நில உரிமை மாற்றம் செய்யப்படுகின்றன. மேலும் பாதாள சாக்கடை திட்டம், கழிவுநீர் சுத்திகரித்தல் மற்றும் திடக்கழிவு மேலாண்மைத் திட்டம் ஆகியவற்றிற்கும் உள்ளாட்சி அமைப்புகளுக்கு, அரசு நிலங்கள் நிலக் கிரையமின்றி, நில உரிமை மாற்றம் செய்யப்படுகின்றது, அதே போல் தமிழ்நாடு குடிசைப்பகுதி மாற்று வாரியத்திற்கு, வீடற்ற ஏழை மக்களுக்கு குடியிருப்பு வசதி ஏற்படுத்த செயல்படுத்தப்படும் அடுக்குமாடி குடியிருப்பு திட்டங்களுக்கும் நிலக்கிரயமின்றி அரசு நிலங்கள் நில உரிமை மாற்றம் செய்யபப்டுகின்றது,

**தலைமைச் செயலக அளவிலான குழு**

நிலமாற்றம், நில உரிமை மாற்றம் மற்றும் நிலக் குத்தகை தொடர்பான முன்மொழிவுகளின் மீது பிற துறைத் தலைவர்களின் கருத்திசைவினை விரைந்து பெற்று முடிவெடுப்பதற்கு ஏதுவாக தலைமைச் செயலக அளவிலான குழு அரசாணை (நிலை)

எண்.426, வருவாய்த் (நி.மு.4) துறை, நாள் 29.9.2014–இன்படி அமைக்கப்பட்டது. இக்குழு, வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத்துறை செயலாளரை தலைவராகவும், நில நிர்வாக ஆணையரை ஒருங்கிணைப்பாளர் / உறுப்பினர் செயலாளராகவும் சம்பந்தப்பட்ட துறைத் தலைவர்களை உறுப்பினர்களாக உள்ளடக்கி, தலைமைச் செயலக அளவிலான குழு அமைக்கப்பட்டுள்ளது. சம்பந்தப்பட்ட துறைகளின் இசைவு / தடையின்மை கோரப்படும் நேர்வுகளில் தொடர்புடைய முன்மொழிவு இக்குழு கூட்டத்தில் சமர்ப்பிக்கப்பட்டு துறைத் தலைவர்களின் கருத்திசைவு அல்லது ஆட்சேபனை பெறப்படுகிறது. தலைமைச் செயலக அளவிலான இக்குழுவானது இதுவரை 34 முறை கூட்டப்பட்டு 305 இனங்கள் தீர்வு காணப்பட்டுள்ளன.

அரசாணை (நிலை) எண்.632, வருவாய்த் (நி.மு.5(1)) துறை, நாள்.7.11.2008–இல் கண்டுள்ள நிபந்தனைகளுக்கு உட்பட்டு, தமிழ்நாடு மின்உற்பத்தி மற்றும் பகிர்மானக் கழகம் **(TANGEDCO)**–விற்கு எவ்வித நிதி வரம்பின்றி ஆட்சேபகரமற்ற புறம்போக்கு நிலங்களில் முன்நுழைவு அனுமதியினை சம்பந்தப்பட்ட மாவட்ட ஆட்சியர் அளவிலேயே வழங்க அதிகாரம் அளித்து அரசாணை (நிலை) எண்.344, வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மை (நி.மு.5(1))துறை, நாள். 19.9.2018 பிறப்பிக்கப்பட்டுள்ளது. இதே போன்று ஆட்சேபகரமான புறம்போக்கு நிலங்களில் தமிழ்நாடு

மின்உற்பத்தி மற்றும் பகிர்மானக் கழகம் (TANGEDCO)–விற்கு முன்நுழைவு அனுமதி கோரும் நேர்வுகளில் சம்பந்தப்பட்ட துறைகளின் ஆட்சேபனையின்மை சான்று பெறப்பட்டு அதன் அடிப்படையில் மாவட்ட ஆட்சியர் / மாவட்ட வருவாய் அலுவலர்களுக்கு நில உரிமை மாற்ற இறுதி ஆணையினை நிலுவையில் வைத்து முன் நுழைவு அனுமதி வழங்க அதிகாரம் வழங்கப்பட்டுள்ளது.

2011–ஆம் ஆண்டு முதல் 31.12.2019 வரையில், மத்திய மற்றும் மாநில அரசு சார்ந்த நிறுவனங்கள், வாரியங்கள், கழகங்கள் ஆகியவைகளிடமிருந்து பெறப்பட்ட 487 இனங்களில் 6,167 ஏக்கர் பரப்பளவு கொண்ட அரசு நிலங்கள், பொது நோக்கங்களுக்காக நில உரிமை மாற்றம் செய்து ஆணைகள் பிறப்பிக்கப்பட்டுள்ளன.

1.4.2019 முதல் 31.12.2019 வரையில் கீழ்க்கண்ட அட்டவணையில் கண்டுள்ளவாறு நில உரிமை மாற்றம் செய்யபட்டுள்ளது.

| | | |
|---|---|---|
| முன்மொழிவுகளின் மொத்த எண்ணிக்கை | : | 46 |
| வெளியிடப்பட்ட அரசாணைகளின் எண்ணிக்கை | : | 46 |
| நில உரிமை மாற்றம் செய்யப்பட்ட மொத்த விஸ்தீரணம் | : | 1,115 ஏக்கர் |

## 5.7 நிலக் குத்தகை

வருவாய் நிலை ஆணை 24ஏ– ன்கீழ், அரசு புறம்போக்கு நிலங்கள் / கட்டடங்கள் / நிலத்துடன் கூடிய கட்டடங்கள் போன்றவை, வேளாண்மை அல்லாத பிற பயன்பாட்டிற்காக உள்ளாட்சி அமைப்புகள், நிறுவனங்கள், கூட்டுறவு சங்கங்கள், பிற சங்கங்கள், தனியார் மற்றும் தனியார் அமைப்புகளுக்கு தற்காலிகமாக குத்தகை அடிப்படையில் பல்வேறு நிபந்தனைகளுக்குட்பட்டு வழங்கப்படுகிறது. குத்தகைக்கு வழங்கப்படும் அரசு புறம்போக்கு நிலங்கள் முறையாக பயன்படுத்துவதை உறுதி செய்யும் வகையில், கீழ்க்கண்ட முக்கியமான நிபந்தனைகளும் விதிக்கப்படுகின்றன.

(அ) அரசு நிலம் எந்த நோக்கத்திற்காக குத்தகைக்கு வழங்கப்படுகிறதோ அந்த நோக்கத்திற்காக மட்டுமே பயன்படுத்தப்பட வேண்டும்.

(ஆ) குத்தகைக்கு வழங்கப்பட்ட அரசு நிலத்தை வேறு நபருக்கு உள்குத்தகைக்கு, வாடகைக்கு அல்லது குத்தகை உரிமையை கிரயம் செய்யவோ கூடாது.

(இ) குத்தகை நிபந்தனை மீறப்படின், குத்தகைக்கு வழங்கப்பட்ட நிலம், எவ்வித இழப்பீடுமின்றி உரிய வழிமுறைகளின்படி அரசு வசம் மீள எடுத்துக் கொள்ளப்படும்.

தற்போது நடைமுறையிலுள்ள அரசாணைகள் மற்றும் விதிமுறைகளின்படி அரசு நிலத்தின் சந்தை மதிப்பு நிர்ணயம் செய்யப்பட்டு, அதனடிப்படையில் வணிக நோக்கமின்றி

செயல்படும் குத்தகை இனங்களில் ஆண்டுக் குத்தகை கட்டணம் நில மதிப்பில் 7 விழுக்காடும் , வணிக நோக்கத்தில் செயல்படும் குத்தகை இனங்களில் 14 விழுக்காடு நிர்ணயம் செய்யப்படுகிறது. சமூக சேவை மற்றும் பொது நல நோக்கில் செயல்படும் இனங்களில் சிறப்பு நேர்வாக பெயரளவு குத்தகை கட்டணம் நிர்ணயம் செய்யப்படுகிறது. குத்தகை கட்டணம் மூன்றாண்டுகளுக்கு ஒரு முறை அப்போதைய நில மதிப்பின் அடிப்படையில் மறு நிர்ணயம் செய்யப்படுகிறது.

குத்தகை அடிப்படையில் வழங்கப்பட்ட அரசு நிலங்கள் தொடர்பான விவரங்கள் அனைத்தும் ஒருங்கிணைந்த குத்தகை பதிவேட்டில் (Master Lease Register) பதிவு செய்யப்பட்டு, பராமரிக்கப்படுகிறது. .

வருவாய் நிலை ஆணை 24 A யின் கீழ், தமிழகத்தில் சுமார் 956 இனங்களில் அரசு புறம்போக்கு நிலங்கள் குத்தகைக்கு வழங்கப்பட்டுள்ளது. 2019–2020–ம் நிதியாண்டில் குத்தகைத் தொகையாக ரூ.90,05,51,739/– வசூல் செய்யப்பட்டு அரசுக்கு வருவாய் ஈட்டப்பட்டுள்ளது.

### 5.8. உப்பள நிலங்களைக் குத்தகைக்கு வழங்குதல்

வருவாய் நிலை ஆணை எண். 24A–இன்படி, கடலோர மாவட்டங்களில் உள்ள அரசு புறம்போக்கு நிலங்கள் (Salt Pan)

உப்பு மற்றும் அதன் சார்பு பொருட்கள் உற்பத்தி செய்வதற்காக குத்தகை அடிப்படையில் வழங்கப்படுகின்றன.

உப்பு உற்பத்திக்காக வழங்கப்படும நிலக் குத்தகை இனங்களில் குத்தகை கட்டணம் மற்றும் உரிமக்கட்டணமாக ஒரு ஏக்கருக்கு ஆண்டொன்றிற்கு ரூ.135/- என நிர்ணயம் செய்யப்படுகிறது.

சிறு உப்பு உற்பத்தியாளர்களின் நலனை கருத்தில் கொண்டும், உப்பு தயாரித்தல் பணியை ஊக்குவிக்கும் வகையிலும், தமிழகத்தில் உப்பள நிலங்களுக்கு நியாயமான குத்தகைத் தொகை மற்றும் உரிமத் தொகை நிர்ணயிக்கப்பட்டுள்ளது. இதர மாநிலங்களை ஒப்பிட்டு பார்க்கையில், தமிழகத்தில் குத்தகை கட்டணம் குறைவாகவே உள்ளது.

## 5.9 அரசு நிலங்களில் குழாய் மற்றும் கண்ணாடி இழைக்கம்பி பதிப்பதற்கு அனுமதி

அரசு புறம்போக்கு நிலங்களில் குழாய் மற்றும் கண்ணாடி இழைக்கம்பி பதித்து, வணிகம் மற்றும் வணிகமற்ற நோக்கங்களுக்குப் பயன்படுத்துவதற்கு, தனி நபர், தனியார் அமைப்பு, நிறுவனங்கள் மற்றும் உள்ளாட்சி அமைப்புகளுக்கு, வருவாய் நிலை ஆணை எண். 24அ ன் கீழ் தட வாடகை நிர்ணயம் செய்து அனுமதி வழங்கப்படுகிறது. ஆனால், விவசாயப்

பயன்பாட்டிற்காக அரசு நிலங்களில் குழாய் பதித்து தண்ணீர் கொண்டு செல்லப்படும் இனங்களில் தடவாடகை அரசால் விலக்களிக்கப்பட்டுள்ளது.

## 5.10 நில மாற்றம்/ நில உரிமை மாற்றம்/ குத்தகை- கண்காணிக்கும் முறை

இணைய வழியாக, நில மாற்றம், நில உரிமை மாற்றம், குத்தகை மற்றும் நில எடுப்பு தொடர்பான இனங்களில், மாநிலம் முழுவதிலும் அனைத்து நிலைகளிலும் உள்ள வருவாய் அலுவலர்களால் முன்மொழிவுகளை கையாள்வதற்கு மென்பொருள் / செயலி உருவாக்குவதற்கு நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டு வருகிறது. இதன் வாயிலாக, மாவட்ட அலுவலர்களின் நடவடிக்கையினைத் துரிதப்படுத்துதல், நிலம் தொடர்பான முன்மொழிவுகளைத் துரிதமாக முடிவு செய்தல் மற்றும் திட்டப் பணிகளுக்கான அரசு நிலங்களை விரைவாக வழங்குவதற்கு வழிவகை மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## 5.11. ஆக்கிரமணங்களை அகற்றுதல்

அரசு நிலங்களை ஆக்கிரமிப்புகளின்றி பாதுகாப்பது அரசின் கொள்கையாகும். பல்வேறு துறைகளுக்கு சொந்தமான அரசு நிலங்களில் உள்ள ஆக்கிரமிப்புகளை அகற்ற தொடர்ச்சியான நடவடிக்கைகளை அரசு முனைந்து எடுத்து வருகிறது. அரசு நிலங்களில் உள்ள ஆக்கிரமிப்புகளை கண்டறிந்து அவற்றினை

அகற்ற சம்பந்தப்பட்ட துறையினருடன் இணைந்து நடவடிக்கைகளை மேற்கொள்வது வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மை துறையின் பணிகளில் முக்கியமான ஒன்றாகும்.

அரசு நிலங்களை பாதுகாக்கவும், ஆக்கிரமிப்புகளை அகற்றவும், அரசு பல சட்டங்களை இயற்றியுள்ளது. அரசு நிலங்களில் உள்ள ஆக்கிரமிப்புகளை அகற்ற பின்வரும் சட்டங்களில் உள்ள வழிமுறைகளை பின்பற்றி ஆக்கிரமிப்புகள் அகற்ற நடவடிக்கை மேற்கொள்ளப்படுகிறது.

i. தமிழ்நாடு நில ஆக்கிரமிப்புச் சட்டம்,1905,
ii. தமிழ்நாடு மாவட்ட நகராட்சிகள் சட்டம்,1920,
iii. தமிழ்நாடு பொது வளாகங்கள் (ஆக்கிரமிப்பாளர்களை வெளியேற்றுதல்) சட்டம்,1975,
iv. தமிழ்நாடு பஞ்சாயத்துச் சட்டம்,1994,
v. தமிழ்நாடு நெடுஞ்சாலைகள் சட்டம், 2001 மற்றும்
vi. தமிழ்நாடு நீர்நிலைகளைப் பாதுகாத்தல் மற்றும் ஆக்கிரமிப்புகளை அகற்றுதல் சட்டம், 2007.

நீர் நிலைகள் மற்றும் நீர்வழிகளை ஆக்கிரமிப்புகளின்றி பாதுகாக்க அரசு தீவிர நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளது, நீர்நிலை ஆதாரங்களான, குளங்கள், ஆறுகள், ஏரிகள், குட்டைகள் மற்றும் ஏனைய நீர்நிலை புறம்போக்குகளில் உள்ள ஆக்கிரமிப்புகளை அகற்ற முக்கியத்துவம் கொடுக்கப்பட்டு, பொதுப்பணித் துறை / நீர்வள ஆதாரத் துறையுடன் இணைந்து

நடவடிக்கை மேற்கொள்ளப்படுகிறது. அரசாணை (நிலை) எண்.540, வருவாய்த் (நி.மு.6(2)) துறை, நாள்.4.12.2014–ன் படி பொது மக்களிடமிருந்து பெறப்படும் மனுக்களில் தெரிவிக்கப்படும் குறைகளை தீர்வு காண வட்ட, கோட்ட மற்றும் மாவட்ட நிலைகளில் மூன்று வெவ்வேறு குழுக்கள் அமைக்கப்பட்டுள்ளது. பொதுப்பணித் துறை / நீர்வள ஆதாரத் துறை அலுவலர்களையும் மேற்படி மூன்று அடுக்குக் குழுக்களில் உறுப்பினர்களாகச் சேர்த்து, அரசாணை (நிலை) எண் 148, வருவாய்த் (நி.மு.6(2)) துறை, நாள். 24.03.2016 வெளியிடப்பட்டு நடைமுறைப் படுத்தப்பட்டு வருகிறது. இப்பணிகளின் முன்னேற்றம் குறித்தும், குழுக்களின் செயல்பாடுகள் குறித்தும் மாதந்தோறும் நடத்தப்படும் மாவட்ட வருவாய் நிர்வாக கூட்டத்தில் மாவட்ட ஆட்சித்தலைவரால் கண்காணிக்கப்படுகிறது.

தமிழ்நாடு நில ஆக்கிரமிப்பு சட்டம்,1905 இயற்றப்பட்டு 110 ஆண்டுகள் கடந்த நிலையில் தற்போது எதிர்கொள்ளும் பிரச்சனைகள் மற்றும் சிக்கலான தன்மையைக் கருத்தில்கொண்டு தமிழ்நாடு நில ஆக்கிரமிப்பு சட்டத்தில் பொருத்தமான திருத்தங்கள் கொண்டுவரப் பரிசீலனைகள் செய்வதற்காக அரசாணை (நிலை) எண். 269, வருவாய் பேரிடர் மேலாண்மைத் துறை, நாள் 23.8.2017–இல், அரசு செயலாளர்கள் நிலையான குழு ஒன்றை அமைக்க உத்தரவிடப்பட்டு, வருவாய்த்துறை செயலாளர் தலைமையில் குழு

அமைக்கப்பட்டுள்ளது. அதில் பொதுப்பணித்துறை, நெடுஞ்சாலை மற்றும் சிறுதுறைமுகங்கள், சட்டத்துறை செயலாளர்கள் உறுப்பினர்களாகவும், நில நிர்வாக ஆணையர்கள் அவர்கள் ஒருங்கிணைப்பாளர்கள் / உறுப்பினர் – செயலாளராகவும் நியமிக்கப்பட்டுள்ளனர். இக்குழுவின் ஆய்வறிக்கையின்படி ஆக்கிரமிப்புகளை அகற்றுதல் தொடர்பாக ஒரு புதிய சட்ட முன்வரைவு தயார் செய்யப்பட்டு அரசின் பரிசீலனையில் உள்ளது.

### 5.12. நில எடுப்பு

பொது நோக்கத்திற்காக, மத்திய, மாநில அரசின் துறைகள் மற்றும் பிற நிறுவனங்களுக்கு, வேண்டுகோளின்பேரில், தனியார் நிலம் கையகப்படுத்தப் படுகிறது. 31.12.2013 வரை, மத்திய நில எடுப்புச் சட்டம், 1894 (மத்தியச் சட்டம் 1/1894)–இன்கீழ் நிலம் கையகப்படுத்தப்பட்டு வந்தது. இச்சட்டத்தைத் தவிர, மாநில அரசு, சமூகத்தில் பின்தங்கியுள்ள வகுப்பினர்களுக்கு வீட்டுமனை மற்றும் பிற தேவைகளுக்கு நிலம் வழங்கவும், மேலும் தொழிற்சாலைகள் மற்றும் மாநில நெடுஞ்சாலை உட்கட்டமைப்பிற்காகவும், பின்வரும் நில எடுப்புச் சட்டங்களை நிறைவேற்றியுள்ளது :–

i. 1997–ஆம் ஆண்டு தமிழ்நாடு தொழிலியல் நோக்கங்களுக்காக நிலம் கையகப்படுத்துதல் சட்டம் (தமிழ்நாடு சட்டம் 10 / 1999)

ii. 2001–ஆம் ஆண்டு தமிழ்நாடு நெடுஞ்சாலை சட்டம் (தமிழ்நாடு சட்டம் 34 / 2002) மற்றும்

iii. 1978–ஆம் ஆண்டு தமிழ்நாடு ஆதிதிராவிடர் நலத் திட்டங்களுக்காக நிலம் கையகப்படுத்துதல் சட்டம் (தமிழ்நாடு சட்டம் 31/ 1978)

ஏற்கனவே நடைமுறையில் இருந்து வந்த, மத்திய நில எடுப்புச் சட்டம், 1894–ஐ இரத்து செய்து, புதிய நில எடுப்புச் சட்டமான "நிலம் கையகப்படுத்துவதில் நியாயமான சரியீடு மற்றும் ஒளிவு மறைவின்மை, மறு வாழ்வு மற்றும் மறு குடியமர்வு உரிமைச் சட்டம், 2013 (மத்திய சட்டம் 30 / 2013 " (The Right to Fair Compensation and Transparency in Land Acquisition, Rehabilitation and Resettlement Act, 2013)–ஐ மத்திய அரசு இயற்றி உள்ளது. இச்சட்டம் 1.1.2014 முதல் நடைமுறைக்கு வந்துள்ளது. இந்தப் புதிய நில எடுப்புச் சட்டத்தின்படி, மறு வாழ்வு மற்றும் மறு குடியமர்வு போன்றவை நிலம் கையகப்படுத்தும் நடைமுறையில் (Process) ஒருங்கிணைந்த பகுதியாகியுள்ளது.

மேற்கண்ட மாநில அரசின் மேற்குறிப்பிட்ட நில எடுப்புச் சட்டங்களின்கீழ், நில எடுப்பு நடவடிக்கையைத் தொடர்ந்திடும் வகையில், மாநில அரசு, புதிய நில எடுப்புச் சட்டத்திற்கு, தமிழ்நாடு திருத்தச் சட்டம், 1/2015–ஐ நிறைவேற்றியது. இத்திருத்தச் சட்டத்தின்கீழ், புதிய நில எடுப்புச் சட்டத்தில், 4–ஆம் அட்டவணையில் உள்ள 13 மத்திய நில எடுப்புச் சட்டங்கள்,

சரியீடு, மறு வாழ்வு மற்றும் மறு குடியமர்வு பயன்கள் நீங்கலாக, புதிய சட்டத்திலிருந்து விலக்களிக்கப்பட்டுள்ளதைப் போன்று, மேற்கண்ட மாநில அரசின் நில எடுப்புச் சட்டங்களுக்கும் விலக்களிக்கும் வகையில், பிரிவு 105–ஏ சேர்க்கப்பட்டு, அதன்கீழ் புதிதாக ஏற்படுத்தப்பட்டுள்ள 5–ஆம் அட்டவணையில் இம்மாநிலச் சட்டங்கள் வைக்கப்பட்டுள்ளன. இத்திருத்த மசோதாவுக்கு, மேதகு குடியரசுத் தலைவர் அவர்களின் ஒப்புதல் பெறப்பட்டது.

தற்போது தமிழ்நாடு அரசு, மேதகு குடியரசு தலைவரின் ஒப்புதலினை 2.12.2019–ல் பெற்று Tamil Nadu Land Acquisition Laws (Revival of Operation, Amendment and Validation) Act,2019 (Tamil Nadu Act 38 of 2019) திருத்தம் அளித்து மாநில நில எடுப்புச் சட்டங்களை 26,9,2013–லிருந்து புதுப்பித்து ஆணை வழங்கியும், இந்த விவரத்தை தமிழ்நாடு அரசிதழில் 5.12.2019ல் பிரசுரம் செய்தும் ஆணையிட்டுள்ளது.

இதன் மூலம் மாநில நில எடுப்புச் சட்டடங்களின் பேரில் எந்தவித தடையுமின்றியும், தாமதமின்றியும் தொடர்ந்து நில எடுப்பு பணிகளை தொய்வின்றி தொடர அரசு வழிவகை செய்துள்ளது.

நிலம் கையகப்படுத்துவதில், நியாயமான சரியீடு மற்றும் ஒளிவுமறைவின்மை, மறு வாழ்வு மற்றும் மறு குடியமர்வு

உரிமைச் சட்டத்தினை (RFCTLARR Act, 2013) அமல்படுத்துவதற்கு ஏதுவாக, இச்சட்டத்திற்கான மாநில அரசின் விதிகள் இயற்றப்பட்டு, தமிழக அரசின் அரசாணை (நிலை) எண் 298, வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத் துறை, நாள் 20.9.2017–இல் ஒப்புதல் அளிக்கப்பட்டுள்ளது. மேலும், மத்திய நில எடுப்புச் சட்டம், 2013, அட்டவணை 1–இல் குறிப்பிட்டுள்ளபடி, நில மதிப்பிற்கான பெருக்கல் காரணி (Multiplier Factor) நிர்ணயம் செய்யப்பட்டு, அரசாணை (நிலை) எண் 300, வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத் துறை, நாள் 20.9.2017–இல் ஒப்புதல் அளிக்கப்பட்டுள்ளது. மேற்படி தமிழ்நாடு மாநில விதிகள், 2017 மற்றும் பெருக்கல் காரணிகள் (Multiplier Factor) குறித்த அறிவிக்கை, தமிழ்நாடு அரசிதழ் எண் 300, நாள் 21.9.2017–இல் வெளியிடப்பட்டுள்ளது.

மேற்படி தமிழ்நாடு அரசு விதிகளில் ஒப்புதல் அளிக்கப்பட்ட பெருக்கல் காரணிகளை அடிப்படையாகக் கொண்டு, தமிழ்நாடு அரசால், அரசாணை (நிலை) எண் 13, தொழில் [சிப்காட் (நி.எ.–1(1))] துறை, நாள் 21.2.2018 மற்றும் அரசாணை (நிலை) எண் 27, நெடுஞ்சாலை மற்றும் சிறுதுறைமுகங்கள் துறை, நாள் 5.3.2018–இல் பிறப்பிக்கப்பட்டு, இடைக்கால சரியீடு வழங்கப்பட்ட இனங்களுக்கு, தற்பொழுது முழுமையான சரியீடு கணக்கிடப்பட்டு வழங்கப்பட்டு வருகிறது.

மேலும், பொதுக் காரியங்களுக்காக, தனியார் நிலங்களை நேரடிப் பேச்சுவார்த்தை மூலம் அரசு விரைவாகக் கையகம் செய்வதற்கு, ஏற்கனவே இருந்த அரசாணை (நிலை) எண் 103, வருவாய்த் (நி.எ.1 (1)) துறை, நாள் 28.2.2011–இல் நிர்ணயிக்கப்பட்ட நிதி வரம்பினை, புதிய நில எடுப்புச் சட்டத்தின்படியான சரியீட்டிற்கு ஈடாகப் பெறும் வகையில் உயர்த்தி, அரசாணை (நிலை) எண் 281, வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத் (நி.எ.1(1)) துறை, நாள் 7.9.2017–இல் ஆணை வெளியிடப்பட்டுள்ளது. இதன்படி, நேரடிப் பேச்சுவார்த்தை மூலம் நில எடுப்பு செய்யப்படும் நேர்வுகளில் சரியீடு வழங்கப்பட்டு வருகிறது.

நிலம் கையகப்படுத்துதல் நடைமுறைகளில் தற்போது உள்ள கால தாமதத்தை தவிர்க்கும் பொருட்டு, அரசாணை எண் 23, திட்டம், வளர்ச்சி மற்றும் சிறப்பு முயற்சிகள் துறை, நாள் 19.3.2018–இல், கீழ்க்கண்டவற்றை அரசு சிறப்பு முயற்சியாக அறிவித்துள்ளது .

"நிலம் கையகப்படுத்துதல் மற்றும் நிலப் பாராதீனம் நடைமுறைகளை நெறிப்படுத்துதல் (நடைமுறையில் உள்ள சட்டரீதியான தேவைகளை உள்ளடக்கி, தற்போது உள்ள கால அளவை குறைக்கும் பொருட்டு)" பணிக்குழு அமைக்கப்பட்டு, இப்பணிக்குழுவினால் வழங்கப்பட்டுள்ள பரிந்துரைகள் அரசின் பரிசீலனையில் உள்ளது.

## 5.13 சிறுபாசனப் புள்ளி விவரப் பகுத்தாய்வு (RMIS)

சிறுபாசன புள்ளி விவர பகுத்தாய்வுத் திட்டமானது நூறு சதவிகித மத்திய அரசு நிதியுதவியுடன், ஜலசக்தி அமைச்சகத்தின் கீழ் நீர்வள ஆதாரம், நதி மேம்பாடு மற்றும் கங்கை புனரமைப்புத் துறையின் கீழ் சிறுபாசன திட்டங்கள் குறித்த விரிவான புள்ளிவிவர தொகுப்பினை உருவாக்கும் பொருட்டு அனைத்து மாநிலங்களிலும் யூனியன் பிரதேசங்களிலும் தொடங்கப்பட்டு செயல்படுத்தப்பட்டு வருகிறது.

இதன் முக்கிய நோக்கமானது, ஐந்தாண்டுகளுக்கு ஒரு முறை சிறுபாசனக் கணக்கெடுப்பினை நடத்தி அதன் மூலம் தெளிவான, தரவுகளை தொகுத்து அளிப்பதோடு , நிலத்தடி நீர் குறித்து ஆய்வு செய்தும், அவை கிடைக்கப்பெறும் தன்மையை மதிப்பிடு செய்தும், நீர்வள மேம்பாடு குறித்த திட்டமிடுதலுக்கு உதவியாக இருப்பதாகும்.

தமிழகத்தில், நில நிர்வாக ஆணையர் அவர்கள் மாநில சிறுபாசனக் கணக்கெடுப்பு ஆணையராகச் செயல்படுகிறார். இதுவரையில் 5 சிறுபாசனக் கணக்கெடுப்புகள் நடத்தப்பட்டுள்ளன. இதன் தொடர்ச்சியாக ஆறாவது சிறுபாசனக் கணக்கெடுப்பு பணி நடைபெற்று வருகிறது.

**ஐந்தாவது சிறுபாசனக் கணக்கெடுப்பு:**

2013-14-ன்படி, எடுக்கப்பட்ட 5-வது சிறுபாசனக் கணக்கெடுப்பு விவரம் கீழ்கண்டுள்ளவாறு:

**அட்டவணை-5.3**

**5-வது சிறுபாசனக் கணக்கெடுப்பு**
**(மேற்கோள் ஆண்டு 2013-2014)**

| வ. எண் | திட்டத்தின் வகை | | திட்டங்களின் எண்ணிக்கை | விழுக்காடு |
|---|---|---|---|---|
| 1. | நிலத்தடி நீர்த்திட்டம் | தோண்டப்பட்ட கிணறு | 15,82,718 | 76.37 |
| | | ஆழம் குறைவான குழாய் கிணறு | 1,45,248 | 7.01 |
| | | நடுத்தர குழாய் கிணறு | 73,622 | 3.55 |
| | | ஆழ்துளைக் குழாய் கிணறு | 2,23,978 | 10.81 |
| 2. | மேற்பரப்பு நீர்ப் பாசனத் திட்டம் | மேற்பரப்பு நீர்ப்பாசனத் திட்டம் | 44,772 | 2.16 |
| | | நீரேற்று பாசனத் திட்டம் | 2,179 | 0.10 |
| | | **மொத்தம்** | **20,72,517** | **100.00** |

**ஆறாவது சிறுபாசன கணக்கெடுப்பு (2017-18) மற்றும் நீர்நிலைகள் கணக்கெடுப்பு**

மத்திய அரசு சிறுபாசனக் கணக்கெடுப்பின் நோக்கத்தினை மேலும் விரிவுபடுத்தி நீர்நிலைகள் குறித்த கணக்கெடுப்பும் நடத்த

தீர்மானித்துள்ளது. இதன் நோக்கமானது, நீர்நிலைகள் குறித்த முக்கிய விவரங்களாகிய, நீர்நிலைகளின் எண்ணிக்கை, அளவு, அவற்றின் நிலை, வகை, பயன்பாடு, நீரைத் தேக்கி வைக்கும் திறன் போன்ற விவரங்களை சேகரிப்பதே ஆகும். இந்த கணக்கெடுப்பில், அனைத்து நீர்நிலைகளும், அவை எவ்வித உபயோகமாக இருந்தாலும், கணக்கெடுக்கப்படுகின்றன. இத்தகைய தெளிவான, விரிவான புள்ளியல் தரவுகள், நீர்நிலைகள் குறித்த திட்டமிடலுக்கும், கொள்கை வகுத்தலுக்கும் பயனுள்ளதாக இருக்கும். நீர்நிலைகளின் புகைப்படங்கள் மற்றும் அட்சரேகை மற்றும் தீர்க்கரேகை விவரங்கள் கைபேசிச் செயலி மூலம் எடுக்கப்பட்டு, அவை மத்திய அரசின் வலைசேவையகத்தில் (Server) பதிவேற்றம் செய்யப்படுகின்றன.

வருவாய் துறையில், முக்கிய அங்கமாக வகிக்கும் நில நிர்வாகத் துறை பொது மக்களுக்கு சேவை செய்யும் மனப்பான்மையுடன் ஏழை எளிய மக்களுக்கு இலவச வீட்டுமனை வழங்குதல், பட்டா உரிமை மாற்றம் செய்தல், நிலம் கையகப்படுத்துதல், நில மாற்றம், நில உரிமை மாற்றம் முதலான பணிகளை செய்து வருகிறது. மேலும் அரசு நிலங்களை குத்தகைக்கு விடுதல் மற்றும் ஆக்கிரமணங்களை அகற்றுதல் இவற்றுடன் திரைப்படச் சட்டம் மற்றும் சிறுபாசன புள்ளி விவர பகுத்தாய்வு போன்றவற்றையும் செயல்படுத்தி வருகிறது. இந்த ஆணையரகம் பொது மக்களின் சேவையின் கருத்தில் கொண்டு, தொடர்ந்து மக்களுக்கும் அரசுக்கும் திறம்பட பணியாற்றி வருகிறது..

## 6. நிலச்சீர்திருத்தம்

அனைத்துத் துறைகளுக்கும் தாய்த் துறையாகவும், அரசாங்கத்தின் முதுகெலும்பாகவும், ஏழை எளிய மக்களின் துயரங்களைக் களைந்து அவர்களை ஏற்றிவிடும் வகையில் ஏணியாகவும் விளங்குகின்ற வருவாய்த்துறையின் கீழ் நிலச்சீர்திருத்தத்துறை செயல்பட்டு வருகிறது.

தமிழ்நாடு வருவாய் வாரியம் நீக்கச்சட்டம் 1980 (தமிழ்நாடு சட்டம் 36/1980) பிரிவு 3-ன் கீழ் தமிழ்நாடு அரசிதழில் வெளியான அறிவிக்கையின்படி 01.12.1980 முதல் வருவாய் வாரியம் கலைக்கப்பட்டதன்பேரில் நிலச்சீர்திருத்தம், நிலநிர்வாகம் மற்றும் வருவாய் நிருவாகம் ஆகிய துறைகள் வருவாய்த் துறையின் கீழ் உருவாக்கப்பட்டன.

**சுழன்றும் ஏர்ப் பின்ன துலகம் அதனால்**
**உழந்தும் உழவே தலை**

உலகம் பல தொழில் செய்து சுழன்றாலும் ஏர்த் தொழிலின் பின் நிற்கின்றது, அதனால் எவ்வளவு துன்புற்றாலும் உழவுத் தொழிலே சிறந்தது.

மேற்காணும் குறளுக்கு ஏற்ப ஒரு சமுதாய வளர்ச்சிக்கு விவசாய நில உடைமைகள் முக்கியம் வாய்ந்ததாக உள்ளது. விவசாய நில உடைமைகளில் உள்ள ஏற்றத்தாழ்வுகளைப் போக்கிடும் வகையில், விவசாய நிலங்களுக்கு உச்சவரம்பு

நிர்ணயித்து, மிகை நிலங்களை கையகப்படுத்தி அதனை நிலமற்ற ஏழைகளுக்குப் பிரித்து வழங்குதல் அவசியமாகின்றது.

இந்த நோக்கத்துடன் 1961–ஆம் ஆண்டில், இந்திய அரசியல் அமைப்புச் சட்டப்பிரிவு 39இன் உட்பிரிவு (b) மற்றும் (c) இன்படி தமிழ்நாடு நிலச்சீர்திருத்த (நிலஉச்சவரம்பு நிர்ணயித்தல்) சட்டம் (தமிழ்நாடு சட்டம் 58/1961) இயற்றப்பட்டது. இச்சட்டம், விவசாய நில உடைமைகளுக்கு உச்சவரம்பினை நிர்ணயிக்கவும் உச்சவரம்பிற்கு மேல் உள்ள நிலங்களை உபரி நிலமாக அறிவிக்கவும் அத்தகைய உபரிநிலங்களை நிலமற்ற ஏழைகளுக்கு வழங்குவதற்கும் அதன்மூலம் அவர்களின் வாழ்க்கைத்தரத்தை மேம்பாடு அடையச் செய்து சமுதாயத்தில் அவர்களின் நிலையை உயர்த்துவதற்கும் வழிவகை செய்கிறது.

மேற்படி விவசாய நிலங்களுக்கான நிலஉச்சவரம்பு சட்டம் தவிர இத்துறையால், குத்தகைச் சட்டங்கள், விவசாயத் தொழிலாளர்களுக்கான குறைந்தபட்ச ஊதியச்சட்டம், பூமிதான சட்டம் மற்றும் வேளாண்மை வருமான வரி தொடர்பான எஞ்சிய பணிகள் இத்துறை மூலம் செயல்படுத்தப்பட்டு வருகிறது.

நாட்டிற்கே முன்னோடியாக விவசாயம் மற்றும் விவசாயம் சார்ந்த தொழில் புரிவோர்களுக்கும் அவர்களது குடும்ப நபர்களுக்கும் முழுமையான சமூக பாதுகாப்பு வழங்கும் வகையில் முதலமைச்சரின் உழவர் பாதுகாப்புத் திட்டம் இத்துறை மூலம்

செயல்படுத்தப்படுகிறது. இந்த திட்டச் செயல்பாடுகள் அனைத்தும் கணினிமயமாக்கப்பட்டு, மாவட்ட மற்றும் மாநில அளவில் கண்காணிப்பட்டு வருகிறது.

## 6.1. நீடித்த வளர்ச்சி இலக்கு 2030 – நிலச்சீர்திருத்தத் துறையின் பங்கு.

2015 ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் இந்தியா உட்பட ஐ.நா.அவையின் உள்ள அனைத்து உறுப்பு நாடுகளாலும் நீடித்த வளர்ச்சிக்கான திட்டம் 2030 ஏற்றுக் கொள்ளப்பட்டது. இத்திட்டம், நிகழ்காலத்திலும் எதிர்காலத்திலும் இவ்வுலக மக்களுக்கு அமைதியையும் செழிப்பையும் வழங்கத்தக்க வரைவொன்றை தன்னகத்தே கொண்டுள்ளது. மேலும், இத்திட்டத்தின் இதயமாக உள்ள 17 நீடித்த வளர்ச்சி இலக்குகளும் வளர்ச்சியடைந்த மற்றும் வளரும் நாடுகளுக்கான உலகளாவிய ஒத்துழைப்பிற்கும் செயற்பாட்டிற்கும் ஆன ஓர் அவசர அழைப்பாக உள்ளது. நீடித்த வளர்ச்சிக்கான திட்டம் 2030, வறுமை ஒழிப்பையும், நலவாழ்வு மற்றும் கல்வியறிதலை மேம்படுத்துவதையும், சமமற்றத் தன்மையைக் களைவதையும், பொருளாதார வளர்ச்சியை ஊக்குவிப்பதையும் மட்டுமல்லாது காலநிலை மாற்றங்களை எதிர்கொள்வதையும், காடுகள் மற்றும் கடல்களைப் பாதுகாப்பதையும் முக்கிய குறிக்கோளாகக் கொண்டது.

| | |
|---|---|
| நீடித்த வளர்ச்சி இலக்கு 1: | அனைத்து இடங்களிலும் அனைத்து வகையிலான ஏழ்மையை ஒழித்தல். |
| நீடித்த வளர்ச்சி குறிக்கோள் 1.4: | 2030 ஆம் ஆண்டிற்குள், குறிப்பாக ஏழைகள் மற்றும் எளிதில் சுரண்டலுக்குள்ளாகும் மக்கள் உட்பட அனைத்து ஆண்களுக்கும், பெண்களுக்கும் பொருளாதார வளங்கள், அடிப்படை வசதிகளைப் பயன்படுத்துதல், நிலத்தின் மீதான உரிமை, பாரம்பரியம், இயற்கை வளங்கள், உரிய புதிய தொழில் நுட்பங்கள் மற்றும் சிறு மூதலீடுகளை உள்ளடக்கிய நிதியுதவிகள் வழங்குவதை உறுதிசெய்தல். |

நிலச்சீர்திருத்தத்துறை, துறைசார்ந்த திட்டங்களின் வாயிலாக ஏழை எளிய மக்களுக்கு சமூகப் பாதுகாப்பினை வழங்குவதில் முக்கிய பங்காற்றுகிறது. நிலஉச்சவரம்புச் சட்டத்தின் வாயிலாக நிலமற்ற கிராமப்புற ஏழை மக்களுக்கு நிலங்கள் வழங்கப்படுகின்றன. இத்தகைய நடவடிக்கைகள் வாயிலாக வேளாண் நிலஉரிமையின்பாலுள்ள வேறுபாடுகள் களையப்பட்டு ஏழை கிராம மக்களின் வாழ்வாதாரம் பாதுகாக்கப்படுகிறது. மேலும் நிலமற்ற ஏழை விவசாயிகளுக்கு பூமிதான நிலங்கள் வினியோகத்தின் வாயிலாக வேளாண் வளர்ச்சியையும், வறுமை ஒழிப்பையும் அடைய ஆவன செய்கிறது.

இதுவே, மேற்காணும் நீடித்த வளர்ச்சி இலக்கு 1 மற்றும் நீடித்த வளர்ச்சி குறிக்கோள் 1.4–ல் கூறப்பட்டுள்ள குறிக்கோளை அடைவதற்கான வழி வகையாகும்.

இந்த இலக்கு மற்றும் குறிக்கோளின் அடிப்படையில் இத்துறை மூலம் செயல்படுத்தப்படும் குறைந்தபட்ச ஊதியச்சட்டத்தின்கீழ் வேளாண்மை சார்ந்த பல்வேறு பணிகளில்ஈடுபடும் வேளாண்மை தொழிலாளர்களுக்கு குறைந்தபட்ச கூலியை நிர்ணயிப்பதன் வாயிலாக, ஏழைத் தொழிலாளர்களை பாதுகாத்து நியாயமான கூலியை வழங்க வழிவகை செய்யப்படுகிறது.

தமிழ்நாடு குடியிருப்பு அனுபோகதாரர்கள் (உடைமை உரிமை உரிமை வழங்குதல்) சட்டம் 1971 மற்றும் திருத்திய சட்டத்தின் வாயிலாக ஏழை விவசாயத் தொழிலாளர்களுக்கு அவர்கள் குடியிருந்த நிலத்தை உரிமையுள்ளதாக்கும் வகையில் வழிவகை செய்யப்பட்டுள்ளது. இதன்மூலம் நீடித்த வளர்ச்சி இலக்கு 1–ஐ அடைய இச்சட்டம் உதவுகிறது.

| | |
|---|---|
| நீடித்த வளர்ச்சி குறிக்கோள் 1.3 : | 2030 ஆம் ஆண்டிற்குள், தேசிய அளவில் பொருத்தமான சமூக பாதுகாப்பு முறைகளை அனைத்து நிலைகளிலும் குறிப்பாக ஏழைகள் மற்றும் எளிதில் சுரண்டலுக்குள்ளாவோர் பெறும் வண்ணம் நடைமுறைப் படுத்துதல். |

இத்துறை, முதலமைச்சரின் உழவர் பாதுகாப்புத்திட்டம் என்ற திட்டத்தினை செயல்படுத்துவதன் வாயிலாக விவசாயிகள், விவசாயத் தொழிலாளர்கள் மற்றும் அவர்கள் சார்ந்த குடும்பத்தினரைப் பாதுகாக்கும் வகையில் நிதியுதவி அளிப்பதன்மூலம் சமூகப் பாதுகாப்பை வழங்குகிறது. மேலும், அக்குடும்பத்தைச் சார்ந்த முக்கிய உறுப்பினர் நோய்வாய்ப்பட்டு தற்காலிகமாக செயல்பட முடியாத வேளையில் அக்குடும்பத்திற்கு தேவையான நிதிஉதவி அளிக்கப்படுகிறது. மேலும், இத்திட்டத்தின்கீழ் வழங்கப்படும் பல்வேறு நிதிஉதவிகளின் வாயிலாக மேற்காணும் குறிக்கோளை அடைய ஏதுவாகிறது.

## 6.2. நிருவாக கட்டமைப்பு

நிலச்சீர்திருத்த ஆணையர், ஆணையரகத்தின் தலைவராகவும், அவருக்கு உதவியாக தலைமையிடத்தில், நிலச்சீர்திருத்த இயக்குநர், இணை இயக்குநர், உதவி ஆணையர்கள் மற்றும் நிதி ஆலோசகர்/ முதன்மை கணக்கு அலுவலர் ஆகியோர் உள்ளனர்.

நிலச்சீர்திருத்தத் துறை 2015–ல் தற்போதைய நடைமுறைக்கு ஏற்ப மறுசீரமைக்கப்பட்டு, "அதிகாரம் பெற்ற அலுவலர்" மற்றும் "ஒப்படை வழங்கும் அலுவலர்" ஆகிய அதிகாரங்கள், சார் ஆட்சியர்/ வருவாய் கோட்ட அலுவலர்களுக்கு வழங்கப்பட்டுள்ளன. மாவட்ட ஆட்சியரின் கூடுதல் நேர்முக உதவியாளர் (நிலம்) மற்றும் மாவட்டங்களில் உள்ள

நிலச்சீர்திருத்தப் பிரிவின் உதவியோடு மாவட்ட ஆட்சியர் மற்றும் மாவட்ட வருவாய் அலுவலர் ஆகியோரால் நிருவாக ரீதியில் கண்காணிக்கப்பட்டு வருகிறது. முதலமைச்சரின் உழவர் பாதுகாப்புத் திட்டம், வேளாண்மை வருமான வரி சம்மந்தமான பணிகள் மற்றும் பூமிதான சட்டம் ஆகியவை மாவட்ட ஆட்சியரால் கண்காணிக்கப்பட்டு வருகிறது.

இதைதவிர மாநிலத்தில் தனித்துணை ஆட்சியர்கள் (துணை ஆட்சியர்) தலைமையில் 10 வருவாய் நீதிமன்றங்கள் குத்தகைச் சம்பந்தமான சட்டங்களைச் செயல்படுத்தி வருகின்றன.

நிலச்சீர்திருத்தத் துறைக்காக ஒப்பளிக்கப்பட்ட பணியாளர்கள் கீழ்க்கண்டவாறு :–

அட்டவணை – **6.1**

நிலச்சீர்திருத்தத் துறைக்கு ஒப்பளிக்கப்பட்ட பணியாளர்கள்

| **வ. எண்** | **பணியிடங்கள் வகை** | **ஒப்பளிக்கப்பட்ட எண்ணிக்கை** |
|---|---|---|
| 1. | கூடுதல் தலைமைச் செயலாளர்/ நிலச்சீர்திருத்த ஆணையர் | 1 |
| 2. | நிலச்சீர்திருத்த இயக்குநர் | 1 |
| 3. | இணை இயக்குநர் | 1 |
| 4. | நிதி ஆலோசகர் மற்றும் முதன்மைக் கணக்கு அலுவலர் | 1 |
| 5. | உதவி ஆணையர்கள் / துணை ஆட்சியர்கள் / தனித்துணை | 13 |

| வ. எண் | பணியிடங்கள் வகை | ஒப்பளிக்கப்பட்ட எண்ணிக்கை |
|---|---|---|
| | ஆட்சியர்கள் (வருவாய் நீதிமன்றம்) உட்பட | |
| 6. | கண்காணிப்பாளர்கள் / துணை வட்டாட்சியர்கள் | 21 |
| 7. | நிரலர் (Programmer) | 1 |
| 8. | உதவி நிரலர் (Assistant Programmer) | 1 |
| 9. | உதவியாளர்கள், உதவியாளர் நிலை தனி வருவாய் ஆய்வாளர்கள் | 43 |
| 10. | சுருக்கெழுத்து தட்டச்சர்கள் / தட்டச்சர்கள் | 35 |
| 11. | இளநிலை உதவியாளர்கள் | 21 |
| 12. | இதர பணியாளர்கள் | 75 |
| | **மொத்தம்** | **214** |

**6.3.** நடைமுறையில் உள்ள உச்சவரம்பு

தமிழ்நாடு நிலச்சீர்திருத்த (நில உச்சவரம்பு நிர்ணய) சட்டம், 1961 மற்றும் திருத்தச் சட்டத்தின்படி 15.2.1970 முதல் நிலஉச்சவரம்பு கீழ்கண்டவாறு நடைமுறையில் உள்ளது..

- தனிநபர், நிறுவனம், சங்கம், தனியார் அறக்கட்டளை, கம்பெனி ஆகியவற்றுக்கு உச்சவரம்பு பரப்பு 15 தர ஏக்கர் அனுமதிக்கப்படுகிறது.
- 5 நபர்கள் கொண்ட ஒரு குடும்பத்திற்கு 15 தரஏக்கரும் ஐந்து நபருக்கு மேல் உள்ள ஒவ்வொரு கூடுதல்

உறுப்பினருக்கும் 5 தர ஏக்கர் கூடுதலாக அனுமதிக்கப்பட்டு ஒரு குடும்பத்திற்கான அதிகபட்ச உச்சவரம்பு 30 தர ஏக்கர் அனுமதிக்கப்படுகிறது,

- 15.2.1970 அன்று ஒவ்வொரு பெண் உறுப்பினருக்கும் அவர்களது பெயரில் நிலங்கள் இருந்தால், சீதனமாக 10 தர ஏக்கர் அனுமதிக்கப்படுகிறது.
- 1.3.1972 தேதியில் இருந்த மதசார்பான பொது அறக்கட்டளைகள் (Public Trust of Religious nature) இச்சட்டத்திற்குள் வராது.
- 1.3.1972 தேதியில் இருந்த தர்ம ஸ்தாபன பொது அறக்கட்டளைகளுக்கு (Public Trust of Charitable nature) 5 தரஏக்கர் அனுமதிக்கப்படுகிறது.
- 1.3.1972 தேதிக்கு பிறகு தோற்றுவிக்கப்பட்ட பொது அறக்கட்டளைகள் நிலங்கள் வைத்துக்கொள்ள இயலாது. எனினும் திருத்தப்பட்ட சட்டம் 29/87–ன்படி ஒரு பொது அறக்கட்டளை கல்வி மற்றும் மருத்துவமனை பயன்பாட்டிற்கு நிலங்கள் வைத்துக் கொள்ள அரசால் அனுமதிக்கப்படுகிறது.

### 6.3.1. தொழில் / வணிக நிறுவனங்களுக்கு அனுமதி

- நிலச்சீர்திருத்தச் சட்டப்பிரிவு 37–A மற்றும் விதிகளின்படி, தொழில் மற்றும் வணிக நிறுவனங்கள், 15 தர ஏக்கர் உச்சவரம்பிற்கு மிகையாக உள்ள நிலங்களை,

தொழில் மற்றும் வணிக நோக்கங்களுக்காக வாங்குவதற்கு அல்லது வாங்கிய நிலங்களை வைத்துக்கொள்வதற்கு அரசால் அனுமதி வழங்கப்படுகிறது.

- இதற்கு, தொழில் மற்றும் வணிக நிறுவனங்கள், திருத்தப்பட்ட விதிகள் அமலுக்கு வந்த நாளிலிருந்து 180 நாட்களுக்குள் அல்லது நிறுவனம் நிலத்தை வாங்கிய நாளிலிருந்து 180 நாட்களுக்குள் அரசுக்கு விண்ணப்பிக்க வேண்டும்.
- திருத்திய சட்டம் 2018–இன்படி, ரூபாய் 20 கோடிக்கு மேல் முதலீடு செய்யும் புஞ்சை நிலம் மட்டும் வைத்திருக்கும் தொழில் மற்றும் வணிக நிறுவனங்களுக்கு உச்சவரம்பு 30 தர ஏக்கராக நிர்ணயம் செய்யப்பட்டுள்ளது..
- தொழில் மற்றும் வணிக நிறுவனங்களுக்கு வேளாண் சார்ந்த தொழில், ஆட்டோமொபைல், சூரிய மின் சக்தி, காற்றாலை மற்றும் பலவற்றுக்காக தமிழ்நாடு நிலச்சீர்திருத்தச் சட்டப்பிரிவு 37–A இன் கீழ் அனுமதி வழங்கப்பட்டு வருகிறது.

### 6.3.2. பொது அறக்கட்டளைகளுக்கு அனுமதி

- நிலச்சீர்திருத்தச் சட்டப்பிரிவு 37–B மற்றும் விதிகளின்படி, பொது அறக்கட்டளைகள், கல்வி

அல்லது மருத்துவமனை பயன்பாட்டிற்காக நிலங்களை வாங்குவதற்கு அல்லது வாங்கிய நிலங்களை வைத்துக்கொள்வதற்கு அரசால் அனுமதி வழங்கப்படுகிறது.

- இதற்கு, பொது அறக்கட்டளைகள், திருத்தப்பட்ட விதிகள் அமலுக்கு வந்த நாளிலிருந்து 180 நாட்களுக்குள் அல்லது நிறுவனம் நிலத்தை வாங்கிய நாளிலிருந்து 180 நாட்களுக்குள் அரசுக்கு விண்ணப்பிக்க வேண்டும்.
- 2011 ஆம் ஆண்டு முதல் 29.02.2020 வரை மொத்தம் 45 பொது அறக்கட்டளைகளுக்கு கல்வி அல்லது மருத்துவமனை பயன்பாட்டிற்காக அரசால் அனுமதி வழங்கப்பட்டுள்ளது.

**6.4.** வருவாய் நீதிமன்றங்கள்

நில உடைமையாளருக்கும் குத்தகை தாரர்களுக்கும் இடையே ஏற்படும் வழக்குகளை, குத்தகைச் சட்டங்களின் கீழ் முடிவு செய்வதற்காக, தற்போது மாநிலத்தில் கடலூர், மயிலாடுதுறை, திருவாரூர், தஞ்சாவூர், மன்னார்குடி, திருச்சிராப்பள்ளி, லால்குடி, நாகப்பட்டினம், மதுரை மற்றும் திருநெல்வேலி ஆகிய பத்து வருவாய் நீதிமன்றங்கள் நீதிமுறைச் சார்புடைய அதிகாரத்துடன் தனித்துணை ஆட்சியரின் கட்டுப்பாட்டில் செயல்பட்டு வருகின்றன.

### 6.4.1. குத்தகைச் சட்டங்கள்

கீழ்க்கண்ட சட்டங்கள் வருவாய் நீதிமன்றங்களால் செயல்படுத்தப்பட்டு வருகின்றன.

(i) **தமிழ்நாடு பயிரிடும் குத்தகைதாரர் பாதுகாப்புச் சட்டம், 1955 (தமிழ்நாடு சட்டம் 25/55)**

நில உடைமையாளர்கள் குத்தகை தாரர்களை குத்தகை சாகுபடி செய்யும் நிலத்திலிருந்து வெளியேற்றப்படுவதிலிருந்து இச்சட்டம் பாதுகாப்பு அளிக்கிறது.

(ii) **தமிழ்நாடு பயிரிடும் குத்தகைதாரர்கள் (நியாய குத்தகை செலுத்துதல்) சட்டம், 1956 (தமிழ்நாடு சட்டம் 24/56)**

இச்சட்டம் நிலஉரிமைதாரருக்கு பயிரிடும் குத்தகைதாரர்களால் செலுத்தப்பட வேண்டிய குத்தகைத் தொகையை நிர்ணயிக்க வகை செய்கிறது.

(iii) **தமிழ்நாடு பொது அறக்கட்டளை (வேளாண்மை நிலங்கள் நிருவாகம் மற்றும் ஒழுங்குபடுத்துதல்) சட்டம், 1961 (தமிழ்நாடு சட்டம் 57/61)**

இச்சட்டம் பொது அறக்கட்டளைகளுக்கும், குத்தகை தாரர்களுக்கும் இடையே உள்ள உறவை வரன்முறைப்படுத்தவும், அவர்களிடையே ஏற்படும் தகராறுகளை வருவாய் நீதிமன்றங்கள் மூலம் தீர்வு செய்யவும் வழிவகை செய்யப்பட்டுள்ளது.

(iv) **தமிழ்நாடு வேளாண்மை நிலங்கள் (குத்தகை உரிமைகள் ஆவணம்) சட்டம், 1969 (தமிழ்நாடு சட்டம் 10/69)**

இச்சட்டத்தில், பயிரிடும் குத்தகைதாரர்கள் தங்களைக் குத்தகைதாரர்களாக பதிவு செய்து அவர்களின் உரிமையை பாதுகாக்க வழிவகை செய்யப்பட்டுள்ளது.

(v) **தமிழ்நாடு குடியிருப்பு அனுபோகதாரர்கள் (உடைமை உரிமை வழங்குதல்) சட்டம்,1971 மற்றும் திருத்தியவாறு**

இச்சட்டத்தில், குத்தகைதாரராகவோ அல்லது உரிமம் பெற்றவராகவோ குடியிருப்பு அமைத்து, 1.4.1990 தேதியில் அனுபவித்து வரும் விவசாயி அல்லது விவசாயத் தொழிலாளருக்கும் மற்றும் கிராமப்புற கைவினைஞர்களுக்கும் குடியிருப்பு உரிமை வழங்க வகை செய்யப்பட்டுள்ளது.

**6.4.2.** வருவாய் நீதிமன்றங்களில் முடிவு செய்யப்பட்ட மற்றும் நிலுவையில் உள்ள வழக்குகளின் விவரம் **1.6.2011** முதல் **29.02.2020** வரை

| | | |
|---|---|---|
| 1. | 31.5.2011 அன்று நிலுவையில் இருந்த வழக்குகள் | 9,806 |
| 2. | 1.6.2011 முதல் 29.02.2020 வரை வரப்பெற்ற வழக்குகள் | 46,336 |
| 3. | முடிவு செய்யப்பட்டவை | 53,833 |
| 4, | 29.02.2020 அன்று நிலுவையில் உள்ள வழக்குகள் | 2,309 |

**1.4.2018 முதல் 29.02.2020 வரை**

| | | |
|---|---|---|
| 1. | 31.3.2019 அன்று நிலுவையில் இருந்த வழக்குகள் | 1,988 |
| 2. | 1.4.2019 முதல் 29.02.2020 வரை வரப்பெற்ற வழக்குகள் | 2,816 |
| 3. | முடிவு செய்யப்பட்டவை | 2,495 |
| 4, | 29.02.2020 அன்று நிலுவையில் உள்ள வழக்குகள் | 2,309 |

வருவாய் நீதிமன்றப் பணிகள், கணினிமயமாக்கப்பட்டு முன்னேற்ற அறிக்கைகள் இணைய தளம் மூலம் பெறப்பட்டு தலைமையகத்திலிருந்து கண்காணிக்கப்பட்டு வருகிறது.

### 6.4.3. விவசாயத் தொழிலாளர்களுக்கு குறைந்தபட்ச ஊதியம் நிர்ணயித்தல்

மாநிலம் முழுவதும், (நாகப்பட்டினம் மற்றும் திருவாரூர் மாவட்டங்கள் தவிர) விவசாயத் தொழிலாளர்களுக்கு பல்வேறு விவசாயப் பணிகளுக்காக குறைந்தபட்ச ஊதியம் நிர்ணயம் செய்ய குறைந்தபட்ச ஊதியச்சட்டத்தின் கீழ் வழிவகை செய்யப்பட்டுள்ளது. நாகப்பட்டினம் மற்றும் திருவாரூர் மாவட்டங்கள் பொறுத்தவரை தமிழ்நாடு வேளாண்மைத் தொழிலாளர்கள் நியாய ஊதியங்கள் சட்டம், 1969 செயல்படுத்தப்பட்டு வருகிறது.

### 6.5. பூமிதான வாரியம்

ஸ்ரீ ஆச்சார்ய வினோபாபாவே அவர்களால் தொடங்கப்பட்ட பூமிதான இயக்கத்திற்கு நிலங்கள் தானமாகப் பெறப்பட்டன. அவ்வாறு தானமாக பெறப்பட்ட பூமிதான நிலங்கள் பூமிதான வாரியத்தின் மூலம் நிருவகிக்கப்பட்டு வருகின்றன. அவ்வாறு தானமாக பெறப்பட்ட 28,050 ஏக்கர் நிலங்கள் தமிழ்நாடு பூமிதான சட்டத்தின்படி விநியோகம் செய்யப்பட்டு வருகிறது.

மேலும், பூமிதான நிலங்களை பாதுகாக்கும் பொருட்டும் வழிகாட்டி மதிப்பீடு '0' (பூஜ்யம்) ஆக மாற்றப்பட்டு பூமிதான நிலங்களின் விற்பனையை தடுக்கவும் நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது. இந்தியாவிலேயே, தமிழ்நாட்டில்தான் முதல்முறையாக இத்தகைய தடுப்பு நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## 6.6. முதலமைச்சரின் உழவர் பாதுகாப்புத் திட்டம், 2011

**உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாம்**
**தொழுதுண்டு பின்செல் பவர்**

**உழவு செய்து அதனால் கிடைத்ததைக் கொண்டு வாழ்கின்றவரே உரிமையோடு வாழ்கின்றவர், மற்றவர் எல்லோரும் பிறரைத் தொழுது உண்டு பின் செல்கின்றவரே.**

மேற்காணும் குறளுக்கிணங்க, 2005ம் ஆண்டு உழுதுண்டு வாழும் விவசாயத் தொழிலாளர்கள் குறு மற்றும் சிறு விவசாயிகள் மற்றும் அவர்களது குடும்பத்தினருக்கு, வாழ்க்கையில் இன்னல் மற்றும் எதிர்பாரா இடர்பாடுகளிலிருந்து பாதுகாப்பு அளிக்கும் பொருட்டு அவர்களுக்கு நிதியுதவி வழங்கும் வகையில் தமிழக முதலமைச்சரின் உழவர் பாதுகாப்புத் திட்டம் என்ற சமூகப் பாதுகாப்புத்திட்டம் 15.08.2005 முதல் நடைமுறைப்படுத்தப்பட்டது.

அதன்பின்னர் அத்திட்டத்தை மாற்றியமைக்கும் வகையில் தமிழ்நாடு விவசாயத் தொழிலாளர்கள் – விவசாயிகள் (சமூகப் பாதுகாப்பு மற்றும் நலம்) சட்டம் 2006 (தமிழ்நாடு சட்டம் 29/2006) இயற்றப்பட்டது.

2006–ஆம் ஆண்டு இந்த சட்டத்தை நீக்கம் செய்து சட்டமன்றத்தில் தமிழ்நாடு விவசாயத் தொழிலாளர்கள் – விவசாயிகள் (சமூகப் பாதுகாப்பு மற்றும் நலம்) நீக்கச் சட்டம், 2011 (தமிழ்நாடு சட்டம் 13/2019) நிறைவேற்றப்பபட்டது.

பின்னர் விவசாயத் தொழிலில் ஈடுபட்டுள்ள விவசாயிகள் மற்றும் தொழிலாளர்கள் பயன்பெறும் வகையில் அவர்களது குடும்பத்தினர், வாழ்க்கையின் அனைத்து முக்கிய நிலையிலும் அதாவது பிறப்பு, கல்வி, திருமணம், முதுமை, விபத்து மற்றும் மரணம் முதலியவற்றில் துணை நிற்கும் வகையில் ஒரு விரிவான திட்டத்தை செயல்படுத்துவதன் அவசியம் கருதி மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் ஒரு புதிய சமூகப் பாதுகாப்பு திட்டத்தை அரசு செயல்படுத்தப்போவதாக சட்டமன்றத்தில் 10.09.2011 அன்று அறிவித்தார்கள். இந்தத் திட்டம் முதலமைச்சரின் உழவர் பாதுகாப்புத் திட்டம் என்று அழைக்கப்படும் என்றும் சட்டமன்றத்தில் அறிவிக்கப்பட்டது.

அதனடிப்படையில் முதலமைச்சரின் உழவர் பாதுகாப்புத் திட்டச் செயலாக்கம் பற்றிய முக்கிய விவரங்கள் பின்வருமாறு:

- விவசாயிகள் மற்றும் அதனைச் சார்ந்த தொழில்களில் ஈடுபட்டுள்ளவர்கள் மற்றும் அவர்களின் குடும்பங்களுக்கு சமூகப் பாதுகாப்பு வழங்கும் பொருட்டு, முதலமைச்சரின் உழவர் பாதுகாப்புத் திட்டம் 10.9.2011 முதல் செயல்படுத்தப்பட்டு வருகிறது.
- இத்திட்டத்தின் கீழ் உறுப்பினர்களை கணக்கெடுக்கும் பணி கிராம நிருவாக அலுவலர்களால் கிராம அளவில் தொடர்ச்சியாக மேற்கொள்ளப்பட்டு, கணக்கெடுப்பு பதிவேடுகள் கிராம நிருவாக அலுவலர்களால் மேம்படுத்தப்பட்டு பராமரிக்கப்பட்டு வருகின்றன.

**6.6.1.** தகுதிகள் மற்றும் உறுப்பினர் பதிவு விவரம்

- விவசாயம் மற்றும் அதனைச் சார்ந்த தொழிலில் ஈடுபட்டுள்ள அனைத்து விவசாயத் தொழிலாளர்கள்.
- 2.50 ஏக்கர் நன்செய் அல்லது 5.00 ஏக்கர் புன்செய் அளவிற்குட்பட்ட நிலத்தை சொந்தமாக வைத்திருந்து அதில் நேரடியாக பயிர் செய்யும் குறு / சிறு விவசாயிகள் மற்றும் பயிரிடு குத்தகைதாரர்கள்.
- இத்திட்டத்தின் கீழ் 18 வயது முதல் 65 வயது வரையுள்ளவர்கள் மூல உறுப்பினர்களாக பதிவு செய்யப்படுவார்கள்.

- மூல உறுப்பினர்களைச் சார்ந்து வாழும் பொருள் ஈட்டாத குடும்ப உறுப்பினர்கள் சார்ந்து வாழும் உறுப்பினர்களாக பதிவு செய்யப்படுவார்கள்.
- இத்திட்டத்தின் கீழ் 29.02.2020 வரை பதிவு செய்யப்பட்டுள்ள மொத்த உறுப்பினர்களின் விவரம் பின்வருமாறு:

**அட்டவணை – 6.2**

**உறுப்பினர்களின் விவரம்**

| | | |
|---|---|---|
| 1. | மூல உறுப்பினர்கள் | 1,46,97,851 |
| 2. | சார்ந்து வாழும் உறுப்பினர்கள் | 1,35,75,906 |
| | மொத்தம் உறுப்பினர்கள் | 2,82,73,757 |

- இத்திட்டத்தின் கீழ் தகுதியின் அடிப்படையில் புதிய உறுப்பினர்களைச் சேர்த்தலும், இறப்பு போன்ற காரணங்களுக்காக நீக்குதலும் தொடர்ந்து மேற்கொள்ளப்பட்டு வருகிறது.
- இரட்டைப் பதிவினை தவிர்க்கும் பொருட்டு, உறுப்பினர்களின் விவரங்கள் கணினிமயமாக்கப்பட்டு, ஆதார் எண்களுடன் இணைக்கும் பணி நடைபெற்று வருகிறது.

### 6.6.2 நிதி உதவி

இத்திட்டத்தின் கீழ், கீழ்க்கண்ட நலத்திட்ட உதவிகள் வழங்கப்படுகின்றன.

**அட்டவணை – 6.3**

**மூல உறுப்பினர்கள் மற்றும் சார்ந்து வாழும் உறுப்பினர்களுக்கான நலத்திட்ட உதவிகளின் விவரம்**

| மூல உறுப்பினர்களுக்காக | உதவித் தொகை விவரம் |
|---|---|
| 1. திருமண உதவித்தொகை : | • ஆண்களுக்கு ரூ.8000/– |
| 2. முதியோர் ஓய்வூதியம் | • பெண்களுக்கு ரூ.10,000/– |
| 3. உறுப்பினர்களின் தற்காலிக உடல் திறனற்ற காலத்திற்கான மாதாந்திர உதவி | மாதம் ரூ.1000/– |
| i. காசநோய் | |
| ii. புற்றுநோய் | |
| iii. எச்.ஐ.வி / எய்ட்ஸ் | மாதம் ரூ.1000/– |
| iv. இடைச்சவ்வூடு மூலம் பிரித்தல் (Dialysis) | • மரணம் ரூ.1,00,000/– |
| v. கை, கால் முறிவு மற்றும் நிலைகுலைவு | • விபத்து காயங்களுக்கு ஏற்ப |
| vi. நரம்பு சம்பந்தமான நோய் | ரூ.20,000 முதல் |
| vii. முதுகு தண்டுவடம் பாதிப்பு | ரூ.1,00,000/– வரை |
| viii. இதய நோய் | |
| ix. பார்வை இழத்தல் | ரூ.20,000/– |
| x. கல்லீரல் நோய் | |
| xi. சிறுநீரக நோய் | |

| | |
|---|---|
| xii. மனநிலைபாதிப்பு<br>xiii. அரிவாள் செல் ரத்த சோகை<br>xiv. ரத்த அழிவு சோகை<br>xv. ரத்த உறையா நோய்<br>4. விபத்து நிவாரணம்<br>5. இயற்கை மரண உதவித்தொகை<br>6. ஈமச் சடங்கு செலவு | ரூ.2,500/– |

| சார்ந்து வாழும் உறுப்பினர் | உதவித் தொகை விவரம் |
|---|---|
| 1. கல்வி உதவித்தொகை | ற்பயிற்சி/ பல்தொழில்நுட்ப பயிற்சி முதல் முதுநிலை தொழிற்கல்வி பயிலும் மாணவ மாணவியருக்கு ஆண்டொன்றுக்கு ரூ.1250/– முதல் ரூ.6750/– வரை வழங்கப்படுகிறது. |
| 2. திருமண உதவித்தொகை | • ஆண்களுக்கு ரூ.8000/–<br>• பெண்களுக்கு ரூ.10,000/– |
| 3. எச்.ஐ.வி–யினால் உயிரிழந்த மூல உறுப்பினரின் ஆதரவற்ற குழந்தைகளுக்கான உதவித்தொகை. | ம் ரூ.1000/– வீதம் 18 வயது வரை வழங்கப்படுகிறது. |
| 4. ஈமச்சடங்கு செலவு | ரூ.2,500/– |

### 6.6.3 இத்திட்டத்தின் சிறப்பு அம்சங்கள்

- அரசின் வேறு எந்த திட்டத்தின் கீழ் கல்வி உதவித் தொகை பெற்றிருந்தாலும், கல்விக்கான உதவித் தொகை இத்திட்டத்தின் கீழும் கூடுதலாக பெறலாம்.
- காசநோய், புற்றுநோய் முதலிய கொடிய நோய்களால் பாதிக்கப்பட்டுள்ள மூல உறுப்பினர்களுக்கு தற்காலிக உடல்திறனற்ற காலத்திற்கான மாத உதவித்தொகை ரூ.1000/– வழங்கப்படுகிறது.
- எச்.ஐ.வி–யினால் உயிரிழந்த மூல உறுப்பினரின் ஆதரவற்ற குழந்தைகளுக்கு 18 வயது பூர்த்தியடையும் வரை மாத உதவித் தொகை ரூ.1000/– வழங்கப்படுகிறது.
- மூல உறுப்பினரின் இறப்புக்குப் பின்னரும் அவரைச் சார்ந்து வாழும் உறுப்பினர்களுக்கான கல்வி மற்றும் திருமண உதவித் தொகை தொடர்ந்து வழங்கப்படுகிறது.
- 24.4.2017 முதல் இயற்கை மரணத்திற்கான நிவாரணத் தொகை ரூ.10,000/– லிருந்து ரூ.20,000/– ஆக உயர்த்தி வழங்கப்படுகிறது.
- உறுப்பினர் மற்றும் சார்ந்து வாழும் உறுப்பினர் இறப்பின், ஈமச் சடங்குக்கான உதவித் தொகை ரூ.2,500/– இறப்புச் சான்றிதழை சமர்ப்பிக்க வலியுறுத்தாமலேயே உடனடியாக வழங்கப்படுகிறது.

**6.6.4. செயலாக்கம் (Performance)**

முதலமைச்சரின் உழவர் பாதுகாப்புத் திட்டத்தின் கீழ், 10.9.2011 முதல் 29.02.2020 வரை ரூ.1,893.10 கோடி, 27,45,103 பயனாளிகளுக்கு வழங்கப்பட்டுள்ளது .

**6. 6. 5.** செலவு விவரம்

அ) மூல உறுப்பினர்களுக்காக

**(1) திருமண உதவி**

- இத்திட்டம் தொடங்கப்பட்ட நாளிலிருந்து அதாவது 10.9.2011 முதல் 29.02.2020 வரை ரூ.41.73 கோடி 49,467 பயனாளிகளுக்கு வழங்கப்பட்டுள்ளது.

**(2)** தற்காலிக உடல்திறனற்ற காலத்திற்கான மாதாந்திர உதவித்தொகை

- 2012–13 முதல் 29.02.2020 வரை ரூ.191.03 கோடி 40,591 பயனாளிகளுக்கு வழங்கப்பட்டுள்ளது.

**(3) விபத்து நிவாரணம்**

- 10.9.2011 முதல் 29.02.2020 வரை ரூ.271.45 கோடி 27,502 பயனாளிகளுக்கு விபத்து நிவாரணமாக வழங்கப்பட்டுள்ளது.

(5) **இயற்கை மரணத்திற்கான உதவி**

- 10.9.2011 முதல் 29.02.2020 வரை ரூ.625.02 கோடி 4,30,878 பயனாளிகளுக்கு வழங்கப்பட்டுள்ளது.

ஆ. சார்ந்து வாழும் உறுப்பினர்களுக்காக

1. **கல்வி உதவி**

- 10.9.2011 முதல் 29.02.2020 வரை ரூ.437.49 கோடி 18,33,288 மாணவ மாணவிகளுக்கு வழங்கப்பட்டுள்ளது.

2. **திருமண உதவி**

- 10.09.2011 முதல் 29.02.2020 வரை ரூ. 315.41 கோடி 3,62,761 பயனாளிகளுக்கு வழங்கப்பட்டுள்ளது.

3. **எச்.ஐ.வி.யினால் உயிரிழந்த மூல உறுப்பினரின் ஆதரவற்ற குழந்தைகளுக்கான உதவித்தொகை**

- 2013–2014 முதல் 29.02.2020 வரை ரூ.4.97 கோடி 616 பயனாளிகளுக்க வழங்கப்பட்டுள்ளது.

## அட்டவணை – 6.4

## முதலமைச்சரின் உழவர் பாதுகாப்புத் திட்டத்தின் கீழ் 2019–2020ம் ஆண்டில் (29.02.2020 வரை) வழங்கப்பட்ட உதவி விவரம்

| வ. எண் | உதவி விவரம் | தொகை (கோடியில்) | பயனாளிகளின் எண்ணிக்கை |
|---|---|---|---|
| 1. | கல்வி | 25.98 | 1,03,828 |
| 2. | உறுப்பினர்களின் திருமணம் | 3.28 | 3,906 |
| 3. | உறுப்பினரைச் சார்ந்தவர்களின் திருமணம் | 15.94 | 18,726 |
| 4. | இயற்கை மரணம் மற்றும் ஈமச்சடங்கு | 82.95 | 38,067 |
| 5. | விபத்து நிவாரணம் | 16.90 | 1,677 |
| 6. | தற்காலிக உடல்திறனற்ற காலத்திற்கான மாதாந்திர உதவித்தொகை | 41.32 | 40,591 |
| 7. | எச்.ஐ.வி–யினால் உயிரிழந்த உறுப்பினரின் ஆதரவற்ற குழந்தைகளுக்கான மாதாந்திர உதவித் தொகை | 0.70 | 616 |
| | **மொத்தம்** | **187.07** | **2,07,411** |

## 7. நகர்ப்புற நில உச்சவரம்பு மற்றும் நகர்ப்புற நிலவரி

இத்துறை 1963–ஆம் ஆண்டு நிறுவப்பட்டது. அப்பொழுதிலிருந்து இத்துறை வருவாய் வாரியத்தின் ஓர் உறுப்பினராக இருந்து வந்தது. வருவாய் வாரியம் 1980–ஆம் ஆண்டு கலைக்கப்பட்டது. தமிழ்நாடு நகர்ப்புற நில உச்சவரம்புச் சட்டம் மற்றும் நகர்ப்புற நிலவரிச் சட்டம் ஆகியவற்றின் சட்டக்கூறுகளைச் செயல்படுத்த வேண்டி முந்தைய வருவாய் வாரியத்திலிருந்து ஆணையரகம் (நகர்ப்புற நில உச்சவரம்பு மற்றும் நகர்ப்புற நிலவரி) உருவாக்கப்பட்டது.

### 7.1. தமிழ்நாடு நகர்ப்புற நில (உச்சவரம்பு மற்றும் முறைப்படுத்துதல்) சட்டம் 1978 இயற்றப்பட்டதன் நோக்கம்

- நகரக் கூட்டுப்பகுதிகளில் வெற்று நிலங்களின் மீது உச்சவரம்பு விதித்தல்.
- உச்சவரம்பிற்கு மிகையான அத்தகைய நிலங்களை கையகப்படுத்துதல்.
- மிகச் சில செல்வந்தர்கள் கைவசம் மட்டுமே நகர்ப்புற நிலம் குவிந்துக் கிடப்பதைத் தடுத்தல்.
- பொது மக்களின் நன்மைக்காக நகர்ப்புற நிலங்களை மீளவும் பங்கீடு செய்து கொடுத்தல்.

**7.2. தமிழ்நாடு நகர்ப்புற நிலவரிச் சட்டம் 1966 இயற்றப்பட்டதன் நோக்கம்**

- வேளாண் நிலங்கள் அல்லாத நகர்ப்புற நிலங்களை வரிமதிப்பீட்டிற்கு உட்படுத்துவதன் மூலம் அரசுக்கு வருவாய் ஈட்டித் தருதல்.

**7.3. தமிழ்நாடு நகர்ப்புற நில (உச்சவரம்பு மற்றும் முறைப்படுத்துதல்) சட்டம், 1978 / தமிழ்நாடு நகர்ப்புற நில (உச்சவரம்பு மற்றும் முறைப்படுத்துதல்) நீக்கறவுச் சட்டம், 1999. முதன்மைச் சட்டம் இயற்றம், நடைமுறைப்படுத்துதல் மற்றும் நீக்கறவு**

நகர்ப்புற நில உச்சவரம்புச் சட்டம், 1976–ஆம் ஆண்டு இந்தியாவில் ஒப்புதலளிக்கப்பட்ட ஒரு சட்டமாகும். அரசியலமைப்பின் சட்டக்கூறு 39–இன் கீழ் இனங்கள் (பி) மற்றும் (சி)–இல் குறிப்பிடப்பட்டுள்ள கோட்பாடுகளை அடையும் பொருட்டும், மாநிலத்தின் கொள்கையை பயன் தருகிற வகையில் நடைமுறைப்படுத்தும் பொருட்டும் இச்சட்டம் தமிழ்நாடு சட்ட மன்றத்தால் 1978–ஆம் ஆண்டு இயற்றப்பட்டது. தமிழ்நாடு சட்டம் **20/1999**–இன்படி இச்சட்டம் 16.06.1999 அன்று முதல் நீக்கறவுச் செய்யப்பட்டது. அரசு வசம் உடைமை உள்ள கையகப்படுத்தப்பட்ட நிலங்களுக்கு நீக்கறவுச் சட்டப்பிரிவு 3(1)(அ)–இன்படி காப்புரை வழங்கப்பட்டுள்ளது.

**அட்டவணை 7.1**

**கையகப்படுத்திய நிலங்களின் நிலை**

| **வ. எண்** | **விவரம்** | **பரப்பளவு சதுர மீட்டரில்** |
|---|---|---|
| 1. | சட்டத்தின் கீழ் கையகப்படுத்திய பரப்பு | 1,89,79,446 |
| 2. | அரசுத் துறை/ வாரியங்களுக்கு ஒதுக்கீடு செய்யப்பட்ட பரப்பளவு | 43,39,545 |
| 3. | நில உடைமைதாரர்கள் / அறியாமல் கிரயம் பெற்றவர்களால் தாக்கல் செய்யப்பட்ட நீதிப்பேராணை மனுக்களின் கீழ் கவரப்படும் பரப்பளவு | 34,66,650 |
| 4. | அறியாமல் கிரயம் பெற்றோர் திட்டத்தின் கீழ் வரன்முறை செய்யப்பட்ட பரப்பளவு | 8,57,230 |
| 5. | நில உடைமைதாரர்கள் / மற்ற நபர்களால் ஆக்கிரமணம் செய்யப்பட்டுள்ள பரப்பளவு | 95,95,446 |
| 6. | ஆக்கிரமணமில்லா பரப்பளவு | 7,20,575 |

கையகப்படுத்தப்பட்ட நிலங்களுள் ஒரு கிரவுண்டு பரப்பிற்கும் குறைவான நிலங்களை வனத்துறை மூலம் **'சமூகக் காடுகள்'** வளர்க்கும் நோக்கத்திற்கு பயன்படுத்த உத்தேசிக்கப்பட்டுள்ளது.

பெரிய பரப்புள்ள கையகப்படுத்தப்பட்ட நிலங்களை பல்வேறு அரசுத் துறைகள் / வாரியங்கள் / நிறுவனங்கள்

ஆகியவற்றிற்கு அலுவலகக் கட்டடம் கட்டும் நோக்கத்திற்குப் பயன்படுத்த சாத்தியக்கூறுகள் உள்ளனவா என ஆராயப்பட்டு வருகிறது.

## 7.4. அறியாமல் பெற்ற கிரயத்தை வரன்முறை செய்யும் திட்டம்

உச்சவரம்புச் சட்டத்தைப் பற்றி அறியாமல் கையகப்படுத்தப்பட்ட நிலங்களை வாங்கிய நபர்களுக்கு தீர்வு வழங்கும் பொருட்டு இத்திட்டம் அறிமுகப்படுத்தப்பட்டது. மேற்படி கிரயங்களை வரன்முறைச் செய்யும் பொருட்டு **'அறியாமல் கிரயம் பெற்ற நபர்களின் கிரயத்தை வரன்முறை செய்யும் திட்டம்'** 1998–ஆம் ஆண்டு அறிமுகப்படுத்தப்பட்டது. அரசாணை (நிலை) எண். 649, வருவாய்த் துறை, நாள் 29.07.1998–இன்படி குடியிருப்பு நோக்கத்திற்காக மட்டும் கிரயம் செய்யப்பட்ட 1½ மனைகளுக்கு மிகாத நிலங்களை மட்டும் உரிய நிலமதிப்புத் தொகையை வசூலிப்பதின் பேரில் வரன்முறை செய்ய நெறிமுறைகள் வழங்கப்பட்டன.

அரசாணை (நிலை) எண். 649, பலதரப்பட்ட அறியாக்கிரயதாரர்களுக்கு பயனளிக்காத காரணத்தினால் அரசாணை நிலை எண். 565, வருவாய்த் துறை, நாள் 26.09.2008–இன்படி மாற்றியமைக்கப்பட்டது. இவ்வரசாணையில் 03.08.1976 முதல் 26.09.2008 வரை கிரய ஆவணங்களின் மூலம் மட்டுமே கிரயம் செய்யப்பட்ட நிலங்களை

கிரயம் பெற்ற நோக்கத்தினை பொருட்படுத்தாமல் வரன்முறை செய்ய திருத்தப்பட்ட நெறிமுறைகள் வழங்கப்பட்டன. கிரயம் பெற்றுள்ள மொத்தப் பரப்பளவிற்கேற்ப விகிதாச்சார அடிப்படையில் ஒருமடங்கு / இருமடங்கு / மும்மடங்கு நிலமதிப்புத் தொகையை நிர்ணயம் செய்து வரன்முறை செய்ய அரசு இசைவளிக்கிறது.

இத்திட்டத்தினை மேலும் பயனுள்ளதாக்கும் வகையில் பின்வரும் ஆணைகளில் சில தெளிவுரைகள் வழங்கப்பட்டுள்ளன.

- அரசாணை நிலை எண். 34, வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத் (நநிஉ.1(2) துறை, நாள் 04.02.2019–இன்படி நில உடைமைதாரர் குறித்து தொடர்பு ஆவணங்கள் இல்லாத இனங்கள் மற்றும் நீதிப்பேராணை மனுக்கள் நிலுவையில் உள்ள இனங்கள் ஆகியவற்றை வரன்முறை செய்வது குறித்து தெளிவுரைகள் வழங்கப்பட்டுள்ளன.
- அரசாணை நிலை எண். 63, வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத் (நநிஉ.1(2) துறை, நாள் 27.01.2020–இன்படி ஏற்பாடு ஆவணம், பாகப்பிரிவினை ஆவணம், கொடை ஒப்பாவணம், விடுதலை ஆவணம் மற்றும் பரிமாற்ற ஒப்பாவணம் ஆகியவை மூலம் பெறப்பட்ட

நிலங்களை வரன்முறை செய்ய சில தெளிவுரைகள் வழங்கப்பட்டுள்ளன.

01.04.2019 முதல் 31.01.2020 வரை 305 இனங்களில் கவரப்படும் மொத்தம் 71,452 சதுர மீட்டர் நிலங்கள் வரன்முறை செய்யப்பட்டு ஆணைகள் பிறப்பிக்கப்பட்டுள்ளன. அறியாக் கிரயதாரர்களால் அரசுக் கணக்கில் ரூ.4.12 கோடி நிலமதிப்புத் தொகை செலுத்தப்பட்டுள்ளது.

## 7.5. தமிழ்நாடு நகர்ப்புற நிலவரிச் சட்டம் இயற்றம் – முதன்மைச் சட்டம்

நகர்ப்புற நிலவரி விதிப்பிற்கு முன்னதாக சென்னை நகரத்தில் உள்ள நிலங்களுக்கு விடுவரி அல்லது தரை வாடகை அல்லது ஏதேனும் ஒரு நில வருவாய் வரிமதிப்பீடு செய்யப்பட்டு வந்தது. முதன் முறையாக சென்னை சட்டமன்றம், சென்னை நகர்ப்புற நிலவரிச் சட்டம் 1963–இனை இயற்றி 01.07.1963 முதல் நடைமுறைப்படுத்தியது. துணை மண்டலங்களில் அமைந்துள்ள நகர்ப்புற நிலங்களுக்கு சராசரியான சந்தை மதிப்பின் 0.4 விழுக்காடு நகர்ப்புற நிலவரி விதிக்க இச்சட்டம் வழிவகை செய்தது. இம்மண்டல மதிப்பீட்டின் விளைவாக சென்னை உயர்நீதிமன்றத்தில் தொடர்ச்சியாக நீதிப்பேராணை மனுக்கள் தாக்கல் செய்யப்பட்டன. எனவே நீதிமன்றம் இச்சட்டம் முழுமையையும் செல்லாததாகவும், நடைமுறைப்படுத்தத்தக்க இயலாததாகவும் தீர்ப்பளித்தது. இச்சட்டக் கூறுகளை

நடைமுறையில் வைக்கும் பொருட்டு, 1966–ஆம் ஆண்டு மே–மாதம் அரசு அவசரச் சட்டம் ஒன்றினை அறிவித்தது. பிற்பாடு இச்சட்டம் 01.07.1963 முதல் முன்மேவு பலன் அளித்து சென்னை நகரத்தில் நடைமுறைப்படுத்தப்பட்ட தமிழ்நாடு நகர்ப்புற நிலவரிச் சட்டம் 1966–இன்படி நீக்கப்பட்டது.

இச்சட்டம் நகர்ப்புற நில உச்சவரம்புச் சட்டத்துடன் சமவெல்லையுடையதாக ஆக்கப்பட்டு அவ்வப்போது கோயம்புத்தூர், மதுரை, சேலம், திருச்சி மற்றும் திருநெல்வேலி ஆகிய பல்வேறு நகரக் கூட்டுப்பகுதிகளுக்கு நீட்டிக்கப்பட்டது.

## 7.6. சட்டத்தில் மேற்கொண்டுச் செய்யப்பட்ட திருத்தங்கள்

இச்சட்டம் முதன்முறை 1971–ஆம் ஆண்டு திருத்தம் செய்யப்பட்டு சேலம், கோயம்புத்தூர் மற்றும் திருச்சி நகராட்சிகளுக்கும் மற்றும் மதுரை மாநகரத்திற்கும் 01.07.1971 முதல் நீட்டிக்கப்பட்டது. இச்சட்டம் மீளவும் 1973 மற்றும் 1975–ஆம் ஆண்டுகளில் திருத்தம் செய்யப்பட்டு சென்னை நகரின் எல்லைப் பகுதிகளிலிருந்து 16 கி.மீட்டர் தொலைவு வரை உள்ள புறவெல்லைப் பகுதிகளுக்கு 01.07.1975 முதல் நீட்டிக்கப்பட்டது.

இச்சட்டம் 01.07.1981 முதல் திருநெல்வேலி நகரக் கூட்டுப்பகுதி மற்றும் மதுரை, கோயம்புத்தூர், சேலம், திருச்சி நகரக் கூட்டுப்பகுதிகளின் புறவெல்லைப் பகுதிகளுக்கு 01.07.1981 முதல் நீட்டிக்கப்பட்டது. 1980–ஆம் ஆண்டு வருவாய் வாரியம்

கலைக்கப்பட்டதைத் தொடர்ந்து இச்சட்டம், திருத்தச் சட்டம் 54/1986–இன்படி சட்டத்தின் பல்வேறு பிரிவுகளின் கீழ் செயல்பட்டுவந்த அலுவலர்களின் பதவிப் பெயர்களை மாற்றீடு செய்ய முறைசார்ந்து திருத்தம் செய்யப்பட்டது. அண்மைக்காலத்தில் திருத்தச் சட்டம் 1991 அறிமுகப்படுத்தப்பட்டதன் மூலம் 1992–ஆம் ஆண்டு திருத்தம் செய்யப்பட்டது.

### 7.7. சந்தை மதிப்பு நிர்ணயம்

வரிவிதிப்பிற்குரியவர் செலுத்த வேண்டிய சரியான வரித்தொகையானது உதவி ஆணையர் அல்லது தீர்ப்பாயத்தால் நிர்ணயம் செய்யப்படும் சந்தை மதிப்பினை அடிப்படையாகக் கொண்டு கணக்கிடப்படுகிறது. முதன்மைச் சட்டம் மற்றும் திருத்தச் சட்டங்களின் படி சந்தை மதிப்பு நிர்ணயம் பின்வருமாறு:–

| சட்டத்தின் பெயர் | சந்தை மதிப்பு பின்பற்றப்பட வேண்டிய அடிப்படை நாள் | கவரப்படும் பகுதிகள் |
|---|---|---|
| தமிழ்நாடு நகர்ப்புற நிலவரி முதன்மைச் சட்டம் 1966 | 01.07.1963 | சென்னை நகரம் பசலி 1384 வரை |

| | | |
|---|---|---|
| தமிழ்நாடு நகர்ப்புற நிலவரித் திருத்தச் சட்டம் 1975 | 01.07.1971 | சென்னை, சென்னைப் புறநகர் பகுதி, சேலம், கோயம்புத்தூர், திருச்சிராப்பள்ளி மற்றும் மதுரை |
| தமிழ்நாடு நகர்ப்புற நிலவரித் திருத்தச் சட்டம் 1991 | 01.07.1981 | திருநெல்வேலி நகரக் கூட்டுப் பகுதி மற்றும் நடைமுறையிலுள்ள பகுதிகளின் புற வெல்லைப் பகுதிகள் |

அரசாணை நிலை எண். 578, வருவாய், நாள் 20.05.1992–இன்படி 1991–ஆம் ஆண்டைய திருத்தச் சட்டத்தின் கீழ் திருத்திய வரிவிதிப்பு செய்யப்படும் இனங்களில் முந்தைய 1975–ஆம் ஆண்டைய சட்டத்தின் கீழ் விதிக்கப்பட்ட வரித்தொகையின் 5 மடங்கிற்கு மிகாமல் வரையறை செய்யப்படுகிறது.

### 7.8. வரி வீதம்

அரசாணை நிலை எண். 2625, வருவாய்த் துறை, நாள் 27.12.1976–இன்படி குடியிருப்பு நோக்கம் மற்றும் குடியிருப்பு அல்லாத நோக்கங்களுக்காக பயன்பாட்டில் உள்ள நிலங்களுக்கிடையேயான வேறுபாடு நீக்கப்பட்டது. திருத்தப்பட்ட வரிவீதம் பின்வருமாறு:

**அட்டவணை 7.2**

**வரி வீதம்**

| **சென்னை புறநகர்ப்பகுதி தவிர ஏனைய நகர்ப்புற நிலங்கள்** | | **சென்னை புறநகர்ப்பகுதி நகர்ப்புற நிலங்கள் மட்டும்** | |
|---|---|---|---|
| **நகர்ப்புற நிலத்தின் பரப்பளவு** | **வரி வீதம்** | **நகர்ப்புற நிலத்தின் பரப்பளவு** | **வரி வீதம்** |
| முதல் 2 மனைகள் வரை | வரி இல்லை | முதல் 3 மனைகள் வரை | வரி இல்லை |
| மொத்தப் பரப்பளவு 2 மனைகளுக்கு மேல் 5 மனைகளுக்கு மிகாமல் | 0.7% | மொத்தப் பரப்பளவு 3 மனைகளுக்கு மேல் 7 மனைகளுக்கு மிகாமல் | 0.7% |
| மொத்தப் பரப்பளவு 5 மனைகளுக்கு மேல் 10 மனைகளுக்கு மிகாமல் | 1% | மொத்தப் பரப்பளவு 7 மனைகளுக்கு மேல் 10 மனைகளுக்கு மிகாமல் | 1% |
| மொத்தப் பரப்பளவு 10 மனைகளுக்கு மேல் 20 மனைகளுக்கு மிகாமல் | 1.5% | மொத்தப் பரப்பளவு 10 மனைகளுக்கு மேல் 20 மனைகளுக்கு மிகாமல் | 1.5% |
| மொத்தப் பரப்பளவு 20 மனைகளுக்கு மேல் | 2% | மொத்தப் பரப்பளவு 20 மனைகளுக்கு மேல் | 2% |

சட்டப்பிரிவு 29(எ)–இன் கீழ் தன்னியல்பு விலக்களிக்கப்படும் நிலங்கள் வரிவிதிப்பு கணக்கிட நிர்ணயம் செய்ய வேண்டிய வரிவீதத்திற்கு கணக்கில் எடுத்துக்கொள்ளப்படுகிறது.

சட்டப்பிரிவு 29–இன் பல்வேறு துணைப்பிரிவுகளின் கீழ் சட்டமுறையான விலக்களிக்கப்படும் நிலங்கள் வரிவிதிப்பு கணக்கிட நிர்ணயம் செய்ய வேண்டிய வரிவீதத்திற்கு கணக்கில் எடுத்துக்கொள்ளப்படுவதில்லை.

## 7.9. தமிழ்நாடு நகர்ப்புற நிலவரித் திருத்தச்சட்டம், 1991–இன் அறிமுகம்

இச்சட்டம் 01.07.1991 முதல் சட்ட எண். 1/1992–இன்படி திருத்தம் செய்யப்பட்டது. இச்சட்டத்தின் சட்டக்கூறுகள் மாநிலத்தின், ஈரோடு, பொள்ளாச்சி, தஞ்சாவூர், திருப்பூர், தூத்துக்குடி, வேலூர், உதகமண்டலம், திண்டுக்கல், கரூர், நாகர்கோவில், கும்பகோணம், கடலூர், புதுக்கோட்டை, காஞ்சிபுரம், விழுப்புரம், மயிலாடுதுறை, உடுமலைப்பேட்டை, பழனி, காரைக்குடி, இராஜபாளையம் மற்றும் நாமக்கல் ஆகிய 21 சிறப்பு நிலை / தேர்வு நிலை நகராட்சிகளுக்கும் கொடைக்கானல், மேட்டூர் ஆகிய 2 நகரியங்களுக்கும் நீட்டிக்கப்பட்டன.

## 7.10. நடப்பு பசலி ஆண்டு 1429–இல் நிர்ணயிக்கப்பட்ட கேட்பு

தமிழ்நாடு நகர்ப்புற நிலவரிச் சட்டம் 1966, திருத்தச் சட்டம் 1991–இன் கீழ் மாநிலத்தில் 24 மாவட்டங்களில் நகர்ப்புற நிலங்களாக அறிவிக்கை செய்யப்பட்டப் பகுதிகளில் இதுவரை 1.9 இலட்சம் வரிவிதிப்புதாரர்கள் பெயரில் வரிவிதிப்பு செய்யப்பட்டுள்ளது. நடப்புப் பசலி ஆண்டான 1429–இல் நகர்ப்புற நிலவரி கேட்புத் தொகையாக ரூ. 19.17 கோடி நிர்ணயம் செய்யப்பட்டது.

## 7.11. சட்டமுறை விலக்களிக்கப்பட்டுள்ள இனங்கள்

29(எ) மாநில / மத்திய அரசுக்குச் சொந்தமான நிலங்கள்.

29(பி) உள்ளாட்சி அமைப்புகளுக்குச் சொந்தமான நிலங்கள்.

29(சி) பொதுமக்கள் வழிபாட்டுக்கென ஒதுக்கப்பட்ட நிலங்கள்,

29(டி) அரசு மருத்துவமனைகள் அமைந்துள்ள நிலங்கள் / மாநில அல்லது மத்திய அரசிடமிருந்து நிதியுதவி பெறும் மருத்துவமனை அமைந்துள்ள நிலங்கள்.

29(இ) இடுகாடு / சுடுகாடு பயன்பாட்டில் உள்ள நிலங்கள்.

29(எஃப்) பொதுமக்கள் பயன்பாட்டில் உள்ள சாலைகள் அமைந்துள்ள நிலங்கள்.

29(ஜி) நிலத்தைப் பயன்படுத்துபவரிடமிருந்து வருவாய் ஈட்டாத பொது நோக்கத்திற்காகப் பயன்பாட்டில் உள்ள நிலங்கள்.

29(எச்) மாநில மற்றும் மத்திய அரசால் உரிய அங்கீகாரம் அளிக்கப்பட்ட கல்வி நிறுவனங்களுக்கச் சொந்தமான பயன்பாட்டில் உள்ள நிலங்கள்.

29(ஐ) பொதுப் பூங்காக்கள், பொது நூலகங்கள் மற்றும் அரசு அருங்காட்சியகங்கள் பயன்பாட்டில் உள்ள நிலங்கள்.

29(ஜெ) ஆதரவற்றோருக்கு அடைக்கலமளிக்கும் நோக்கத்திற்காகப் பயன்பாட்டில் உள்ள நிலங்கள்.

29(கே) அரசால் அறிவிக்கை செய்யப்பட்ட மதச்சார்பு / அறக்கட்டளை/ தொண்டு நிறுவனங்களின் பயன்பாட்டில் உள்ள நிலங்கள்.

29(எல்) பழைமையான நினைவுச் சின்னங்களை பேணிக்காக்கும் நோக்கத்திற்காக பயன்பாட்டில் உள்ள நிலங்கள்.

## 7.12. சலுகைகள் வழங்கப்பட்டுள்ள இனங்கள்

1. நில உரிமையாளர் குடியிருந்து வரும் கட்டடம் அமைந்துள்ள நகர்ப்புற நிலத்திற்கு 50% வரிச்சலுகை
2. அனைத்து இசை மற்றும் நாடக மன்றங்களுக்கு 50% வரிச்சலுகை
3. சிறிய திரையரங்குகளுக்கு 10% வரிச்சலுகை
4. நில உரிமையாளர் குடியிருந்து வரும் நகர்ப்புற நிலத்தில் உரிமையாளருக்குச் சொந்தமான தொழில் நிறுவனம் இயங்கி வந்தால், சிறு–தொழில் நிறுவனத்திற்கான உரியச் சான்று பெறப்பட்டிருப்பின் 25% வரிச்சலுகை மற்றத் தொழில் நிறுவனங்களுக்கு 10% வரிச்சலுகை,

5. சென்னை நகரில் தமிழ்நாடு குடிசை மாற்று வாரிய சட்டப்பிரிவு 3(பி)–இன் கீழ் குடிசைப்பகுதியாக அறிவிக்கை செய்யப்பட்ட நிலங்களுக்கு முழு வரிவிலக்கு

## 7.13. பிரிவு 27(1)–இன் கீழ் வரிவிலக்களிக்க அரசு மற்றும் நிலச்சீர்த்திருத்த ஆணையருக்கு வழங்கப்பட்டுள்ள அதிகாரம்

(i) இப்பிரிவு இச்சட்டக்கூறுகளால் எந்தவொரு இனத்தைச் சேர்ந்த நபர்களுக்கோ அல்லது நிலங்களுக்கோ நகர்ப்புற நிலவரியால் **இடர்ப்பாடு** ஏற்படுகிறது எனக் கருதினால் வரிவிலக்கு அளிக்கவோ அல்லது வரியைக் குறைக்கவோ அரசுக்கு செயல் அதிகாரம் வழங்குகிறது.

(ii) அறக்கட்டளையாக அங்கீகாரம் அளிக்கப்பட்ட குழுமங்கள்/மதச்சார்பு அமைப்புகள் / மனித நேயத்துடன் தொண்டு புரியும் அமைப்புகள் வருமான வரித்துறை 12 (A) (a) –இன் கீழ் விலக்கு பெற்றிருப்பின், நகர்ப்புற நிலவரி செலுத்துவதில் **இடர்ப்பாடு** ஏதும் நேரிடின் பிரிவு 27(1)–இன் கீழ் விலக்களிப்பு கோரி விண்ணப்பிக்கலாம்.

(iii) அரசாணை நிலை எண். 461, வருவாய்த் துறை, நாள் 17.03.1983–இன்படி அரசால் வருவாய்த்துறை, சமய அறக்கட்டளைத் துறை, கல்வித் துறை மற்றும் இந்து சமய அறநிலையத் துறை அலுவலர்களைக் கொண்ட குழு ஒன்று நியமிக்கப்பட்டது.

(iv) இக்குழுவின் முன் வைக்கப்படும் இனங்கள் அரசாணை நிலை எண். 1834, வருவாய், நாள் 29.10.1983–இன்படி வழங்கப்பட்ட உரிய சட்டவிதிகளின்படியும்,

நெறிமுறைகளின்படியும் ஆய்வு செய்யப்பட்டு, அரசின் பரிசீலனைக்குப் பரிந்துரைகள் செய்யப்படுகின்றன.

(v) இந்த முன்மொழிவுகள் அரசால் கவனமுடன் பரிசீலனை செய்யப்பட்டு, பிரிவு 27(1)–இன் கீழ் வழங்கப்பட்டுள்ள அதிகாரத்தின் கீழ் இறுதியாக அரசாணை பிறப்பிக்கப்படுகிறது.

(vi) நிலச்சீர்த்திருத்த ஆணையருக்கு பின்வரும் இனங்களுக்கு வரிவிலக்களிக்க அதிகாரம் அளிக்கப்பட்டுள்ளது.

அ) இந்து சமய அறநிலைய ஆட்சித் துறை / ஆர்ச் டயோசிஸ் / தென்னிந்தியத் திருச்சபை மற்றும் வக்பு வாரியம் ஆகியவற்றிற்குச் சொந்தமான நிலங்கள்

ஆ) மாநில அரசு / இந்தியப் பல்கலைக்கழகம் / மத்தியஅரசு அல்லது மத்திய இடைநிலைக் கல்வி வாரியம், புதுடெல்லி ஆகியவற்றால் அங்கீகாரம் அளிக்கப்பட்ட அனைத்துக் கல்வி நிறுவனங்களுக்கும் சொந்தமான நிலங்கள்

## 7.14. பிரிவு 20–இன் கீழ் தீர்ப்பாயத்தின் முன்னிலையில் மேல்முறையீடு

இச்சட்டப்பிரிவு 10 மற்றும் 11–இன் கீழ் பிறப்பிக்கப்படும் ஆணைகளின் மீது வரிவிதிப்புதாரர் மற்றும் வருவாய் அதிகாரிகள் தீர்ப்பாயத்தின் முன்னிலையில் மேல்முறையீடு செய்ய பிரிவு 20–இன்படி வழிவகை உள்ளது. திருத்தச் சட்டம் 1991–க்கு

முன்னதாக, தொடர்புடைய அதிகாரவெல்லையின் சார்நிலை நீதிபதி தீர்ப்பாயத்தின் தலைவராகச் செயலாற்றி வந்தார். தற்போது ஓவ்வொரு மாவட்டத்திலும் தொடர்புடைய மாவட்ட வருவாய் அலுவலரே தீர்ப்பாயத்தின் தலைவர் ஆவார்.

## 7.15. பிரிவு 30–இன் கீழ் நிலச்சீர்த்திருத்த ஆணையருக்கு அளிக்கப்பட்டுள்ள சீராய்வு அதிகாரம்

தீர்ப்பாயத்தின் முன் நிலுவையில் அல்லாத எந்தவொரு நடவடிக்கையின் மீதும் செய்யப்படும் சீராய்வு மனு மீது ஆணை பிறப்பிக்கும் அதிகாரம் நிலச்சீர்த்திருத்த ஆணையர் வசம் உள்ளது. சீராய்வு அதிகாரத்தினை வருவாய்க்கு சாதாகமாகவோ, எதிராகவோ செயல்படுத்தலாம். கூடுதல் தலைமைச் செயலர் / நிலச்சீர்த்திருத்த ஆணையரே தற்போதைய சீராய்வு ஆணை பிறப்பிக்கும் அதிகாரி ஆவார். சீராய்வு அதிகாரியால் சீராய்வு மனுதாரரின் விண்ணப்பத்தின் மீது விசாரணை மேற்கொண்டு, ஆவணங்களைப் பரிசீலனை செய்து சீராய்வு மனுவின் மீதான ஆணை பிறப்பிக்கப்படுகிறது.

# 8. நில அளவை மற்றும் நிலவரித்திட்டம்

## 8.1. நில அளவை வரலாறு

நில அளவை மற்றும் நிலவரித்திட்ட இயக்குநரகம், 1858–ஆம் ஆண்டு உருவாக்கப்பட்டு, 160 ஆண்டுகளைக் கடந்த தமிழக அரசின் மிகவும் பழமையான துறைகளில் ஒன்றாக இருப்பதுடன், இத்துறை நிலம் சார்ந்த பல்வேறு பிரச்சனைகளுக்குத் துல்லியமான தீர்வுகாணும் துறையாகவும் விளங்குகிறது.

மரபுசார்ந்த நில அளவை செய்தல், நில ஆவணங்களைத் தயாரித்தல் மற்றும் அதன் பின்னர் ஏற்படும் மாற்றங்களை மேம்படுத்தி அவற்றினைப் பராமரித்தல் ஆகியவை இத்துறையின் முதன்மையான பணிகளாகும்.

1850–ஆம் ஆண்டுகளில், ஆங்கிலேய ஆட்சியின் தொடக்கத்தில் சங்கிலிகள், நேர்கோணக்கட்டைகள் மற்றும் கோணமானி (Theodalite) ஆகிய கருவிகளைக் கொண்டு நிலஅளவைப்பணி மேற்கொள்ளப்பட்டது.

தொடக்கத்தில், பெருமுக்கோண நிலஅளவைமுறை (Great Trigonometrical Survey) ஆங்கிலேயே ஆட்சிக்காலத்தில் தொடங்கப்பட்டது. குன்றுகளையும், கோவில்களின் கோபுரங்களையும் அடையாளப் புள்ளிகளாகக்கொண்டு, இந்திய

சமவெளியில் ஏறக்குறைய ஒருநூற்றாண்டு காலம் மேற்கொள்ளப்பட்ட பெருமுக்கோண நிலஅளவைக்கு, சென்னை மாநகரமே தொடக்கப்புள்ளியாக இருந்தது. 1802–ஆம் ஆண்டில் தொடங்கப்பட்ட இப்பணிக்காக கோணமானியும், 100 அடி அளவுள்ள உலோக சங்கிலியும் உபயோகப்படுத்தப்பட்டன. பயிற்சி பெற்ற நிலஅளவர்களின் முதல் தொகுதியை நாட்டிற்கு அளித்ததும் தமிழ்நாடேயாகும். அவர்களில் பலர், இந்தியத் திருநாட்டின் வடிவத்தினை மனக்கண் முன் நிறுத்தும் வகையிலான வரைபடத்தை உருவாக்கும் பொருட்டு கரடுமுரடான நிலப்பரப்புகளையும், சதுப்பு நிலங்களையும், அடர்ந்த கானகங்களையும், மலைகளையும் கடந்து செல்லும் வேளைகளில் தமது உயிர்களைத் தியாகம் செய்துள்ளனர். பெருமுக்கோண அளவையானது, புவியின் உண்மை வடிவமைப்பை ஆதார பூர்வமாக உறுதி செய்ததுடன், மலைகள் மற்றும் சரிவுகளின் உயரங்களையும், தக்காணத்தின் ஏற்றத்தாழ்வுகளையும், பரப்பெல்லைகளையும், சமவெளிப்பகுதிகளையும், குறைபாடற்ற முறையில் அளவை செய்ய வழிவகுத்தது.

இவ்வாறான தொன்மையான பாரம்பரியத்தைத் தொடர்ந்து, இத்துறை முன்னாட்களில் மேற்கொள்ளப்பட்ட நிலஅளவை முறைகளுக்குப் பதிலாக தற்போது டிஜிட்டல் முறை நவீன கருவிகளான மின்னணு நிலஅளவைக்கருவி, வகையீட்டு

பூகோள நிலைக்கலன் கருவி மற்றும் தொடர்ச்சியான இயக்கக் குறிப்பு நிலையங்கள் உள்ளிட்ட கருவிகளுடன் நிலஅளவைப் பணிகளை மேற்கொண்டு வருகிறது.

தற்போது மேற்கொள்ளப்பட்ட மற்றும் நடைபெற்று வரும் நிலஅளவைப்பணிகள்:–

**அட்டவணை–8.1**

| வ. எண் | நில அளவை வகை | ஆண்டு |
|---|---|---|
| 1. | தொடக்க நிலஅளவை | 1826 |
| 2. | ரயத்துவாரி முதல் நிலஅளவை | 1858 |
| 3. | மலைக்கிராம நிலஅளவை | 1883 |
| 4. | நகர நில அளவையில் பிளாக் வரைபடங்கள் | 1891-1894 |
| 5. | மறு நில அளவை | 1905–1926 |
| 6. | நில உடைமை மேம்பாட்டுத் திட்டம் | 1979–1987 |
| 7. | நத்தம் நில அளவை | 1989–1992 |
| 8. | துணை நகர நில அளவை | 1989–1997 |
| 9. | நவீன நகர நிலஅளவை | 2002 முதல் நாளதுவரை |
| 10. | நவீன மறு நில அளவை | 2016 முதல் நாளதுவரை |

## 8.2. துறையின் அமைப்பு நிலை

"நில அளவை இல்லத்தில்" இயங்கிவரும் இவ்வியக்ககம், நில அளவை மற்றும் நிலவரித்திட்டம் என இரு பிரிவுகளைக் கொண்டுள்ளது. இவ்வியக்ககத்தின் மூலம், நில அளவை மற்றும் நிலவரித்திட்டம் சார்ந்த அனைத்துத் திட்டங்கள் மற்றும் அவை தொடர்பான இதரப்பணிகள் வடிவமைக்கப்பட்டு, செயல்படுத்தி மற்றும் கண்காணிக்கப்பட்டு வருகிறது. மத்திய நில அளவை அலுவலகம் இவ்வியக்ககத்தின் தொழில்நுட்பப் பிரிவாக விளங்குவதுடன், இது வரைபடங்களைத் தயாரிக்கவும் மற்றும் மேம்படுத்தவும் செய்கிறது. மாவட்ட அளவிலான நில அளவை நடவடிக்கைகள் உதவி இயக்குநர்களின் தலைமையில் அமையப்பெற்ற மாவட்ட அலுவலகங்கள் மூலம் நில அளவர்கள், வரைவாளர்கள், கண்காணிப்பு அலுவலர்கள் மற்றும் நிருவாகப் பணியாளர்களால் மேற்கொள்ளப் படுகின்றன.

மேலும், வட்டாட்சியர் அலுவலகங்களில் நிலஅளவை துணை ஆய்வாளர்கள் தலைமையில் நிலஅளவைப் பிரிவுகள் இயங்கி வருகின்றன. நிலப்பரிவர்த்தனையின்போது ஏற்படும் நிலஉரிமை குறித்த தேவையான மாற்றங்களை உரிய பதிவேடுகளில் பதிவு செய்தல் உள்ளிட்டவை நிலஅளவை துணை ஆய்வாளர்களின் முக்கிய கடமைகளில் ஒன்றாகும்.

# இயக்ககத்தின் அமைப்பு விளக்கப்படம்



**அட்டவணை 8.2**

நில அளவைப் பிரிவிற்கு ஒப்பளிக்கப்பட்டுள்ள பணியிடங்களின் எண்ணிக்கை விவரம்:

| **வ. எண்** | **பிரிவின் பெயர்** | **பணியிடங்களின் எண்ணிக்கை** |
|---|---|---|
| 1. | புலப் பிரிவு | 5,569 |
| 2. | தொழில்நுட்பப்பிரிவு | 2,101 |
| 3. | அமைச்சுப்பிரிவு | 1,079 |
| 4. | இதர வகை | 19 |
| | **மொத்தம்** | **8,768** |

### 8.2.1. வட்ட அலுவலகங்களில் நிலஅளவைப் பராமரிப்புப் பணி

பட்டா மாறுதல்கள் கோரி, பொது மக்களிடமிருந்து மின்னணு சேவை மையங்கள் மூலமாகவும், பதிவுத்துறையின் மூலமாகவும் பெறப்படும் விண்ணப்பங்கள் வட்ட அலுவலக நில அளவைப் பிரிவில் பதிவு செய்யப்பட்டு, தொடர்புடைய குறுவட்ட அளவர்களுக்கு இணையம் வழியாக (Firka Surveyor Dashboard) அனுப்பப்படுகின்றன. தொடர்ந்து, அவ்விண்ணப்பங்களின் மீதான புலத்தணிக்கைகளை முடித்து, குறுவட்ட அளவர்களால் உட்பிரிவு ஆவணங்கள் சமர்ப்பிக்கப்படுகின்றன. பின்னர், அவற்றை வட்ட அலுவலக நிலஅளவை அலுவலர்கள் கூராய்வு

செய்து, அவ்வறிக்கையை வட்டாட்சியர்களின் ஆணைகளுக்காக முன்வைக்கின்றனர். அவற்றின்மீது வட்டாட்சியரால் தக்கவாறு ஆணைகள் வழங்கப்படுகின்றன.

### 8.3. நிலஅளவைத் திட்டங்கள்

#### (1) நில **உடமை பதிவு மேம்பாட்டுத்திட்டம்**

1979–ஆம் ஆண்டில், நிலஉடமை பதிவு மேம்பாட்டு திட்டம் தொடங்கப்பட்டு, விவசாயம் சார்ந்த அனைத்துப் பகுதிகளிலும் ஏற்பட்டிருந்த நிலப்பரிவர்த்தனைகள் புலத்தணிக்கை செய்யப்பட்டு, வருவாய் ஆவணங்களில் மேம்படுத்தப்பட்டன.

#### (2) **நத்தம் நிலஅளவை மற்றும் நிலவரித்திட்டப் பணிகள்**

பொதுமக்கள் தமது வாழ்விடங்களாகப் பயன்படுத்தி வந்த அரசு நிலங்கள் 'நத்தம்' என்று வகைப்பாடு செய்யப்பட்டு, இதற்காக 1989–இல் தொடங்கி நடைபெற்ற நத்தம் நிலஅளவைப் பணிகளின் முடிவில் தகுதிபெற்ற அனைவருக்கும் பட்டாக்கள் வழங்கப்பட்டன.

#### (3) **மலைக்கிராம நிலஅளவைப் பணிகள்**

அரசாணை (நிலை) எண். 1177, வணிகவரி மற்றும் அறநிலையத்துறை, நாள்: 30.10.1987–இன்படி, வடஆற்காடு, சேலம், திருச்சிராப்பள்ளி மற்றும் கோயம்புத்தூர் ஆகிய 4 அப்போதைய ஒருங்கிணைந்த மாவட்டங்களில் 12 வட்டங்கள்

சார்ந்த 81 மலைக்கிராமங்களில் நிலஅளவைப் பணிகள் செய்து முடிக்கப்பட்டுள்ளன.

### 8.3.1. நகர அளவை

மரபுசார்ந்த நிலஅளவை மற்றும் நகரளவை முறைகள் முறையே, கிராமப்புறம் மற்றும் நகர்ப்புறங்களில் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. நகரளவை முறையின்கீழ் தெருக்களுடன், ட்ராவர்ஸ் கோடுகளை ஒருங்கிணைத்து, பிளாக் வாரியாக நிலஅளவை செய்யப்படுவதுடன், அவை குறித்த விவரங்கள் வார்டு வரைபடம், பிளாக் வரைபடம், நகர நில அளவைப் பதிவேடு மற்றும் சிட்டா எனப் பராமரிக்கப்படுகின்றன. மேலும், புதிய பகுதிகள் நகராட்சிகளாகவும், மாநகராட்சிகளாகவும் அறிவிக்கப்படும்போது நகர அளவை முறைகளைக் கொண்டு, அப்பகுதிகள் புதிதாக அளவை செய்யப்படுகின்றன.

தற்போது, 2 மாநகராட்சிகள் மற்றும் 3 மாநகராட்சிகளின் விரிவாக்கப் பகுதிகளில் நவீன நில அளவைக் கருவிகளைக் கொண்டு நகர நில அளவைப் பணிகள் நடைபெற்று வருகின்றன. எஞ்சியுள்ள மாநகராட்சிகளில் நவீன நில அளவை கருவிகள் மூலம் நகரளவைப் பணிகள் தொடங்கப்படவுள்ளன.

தமிழ்நாட்டிலுள்ள நகராட்சிகளில், 93 நகராட்சிகளில் மரபு சார்ந்த முறைகளின்படி நகர நிலஅளவைப் பணிகள் முடிவுற்றன. 31 நகராட்சிகளில் சென்னை மாநகராட்சி எல்லைக்குட்பட்ட 3

நகராட்சிகள் உள்ளிட்ட 29 நகராட்சிகளில், நகரளவைப் பணி நவீன நில அளவை கருவிகள் மூலமாக தொடங்கப்படவுள்ளது. எஞ்சியுள்ள 2 நகராட்சிகளில் நீதிமன்ற வழக்குகள் முடிவுற்றதும் நகரளவைப்பணிகள் மேற்கொள்ளப்படவுள்ளன.



சென்னை மாவட்டம் – செம்மஞ்சேரி – நகரளவை ( பூகோள நிலைக்கலன் கருவி மற்றும் RTK தொழில்நுட்பம்)

### 8.3.2. நவீன கருவிகளைக் கொண்டு **மறுநிலஅளவைப் பணிகள்**

நவீன மறுநிலஅளவை முறையை அறிமுகப்படுத்துவதானது, மில்லிமீட்டர் அளவிற்கு துல்லியமான நிலஆவணங்களை உருவாக்குவதை உறுதி செய்வதுடன், நிலங்கள் மற்றும் அவற்றின் வகைப்பாடுகள் குறித்த விவரங்களடங்கிய இலக்கமுறை தரவுத்தளத்தை (Digital Data Base) உருவாக்கிட ஏதுவாகும். இதனால், மக்கள் தமது

நிலங்களின் விவரங்களை கணினி வாயிலாகவே இணையதளம் (Internet) மூலம் முழுமையாக அறிந்து கொள்ள வகை செய்வதுடன், நிருவாக அலுவலர்கள் நிலங்களின் பயன்பாடுகளை எளிதாகத் திட்டமிடவும் பயனுள்ளதாக அமையும். மேலும், இலக்கமுறை தரவு தளத்தில் (Digital Data Base) ஆவணங்கள் பராமரிக்கப்படுவதால் முறைகேடான பரிவர்த்தனைகள் தடுக்கப்படுவதுடன், இணையவழியில் அரசு நிலங்கள் கண்காணித்து பாதுகாக்கப்படும்.

பூகோள நிலைக்கலன் (GPS) மற்றும் மின்னணு நிலஅளவைக் கருவி (ETS) ஆகியவற்றை உபயோகித்து, வேலூர் மாவட்டத்தில் வேலூர் மாநகராட்சி, சென்னை மாவட்டம் சோழிங்கநல்லூர் வட்டத்தில் செம்மஞ்சேரி, கிருஷ்ணகிரி மாவட்டத்தில் ஓசூர் வட்டம், நீலகிரி மாவட்டத்தில் கோத்தகிரி வட்டம் மற்றும் கன்னியாகுமரி மாவட்டத்தில் அகஸ்தீஸ்வரம் மற்றும் தோவாளை வட்டங்கள் ஆகியவற்றில் மறுநிலஅளவைப்பணிகள் நடைபெற்று வருகின்றன.



நீலகிரி மாவட்டம் - மறுநிலஅளவை (பூகோள நிலைக்கலன் கருவி மற்றும் RTK தொழில்நுட்பம்)

நவீன நிலஅளவைப்பணிகளை விரைவாகவும், துல்லியமாகவும் மேற்கொள்ள ஏதுவாக, மாநிலம் முழுவதிலுமுள்ள நிலப்பகுதிகளை 74 முக்கோணங்களாகப் பிரித்து, அவற்றில் 70 இடங்களில் தொடர்ச்சியான இயக்க குறிப்பு நிலையங்கள் (Continuously Operating Reference Stations) அமைக்கப்பட்டு, நிலஅளவைப் பணிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. எஞ்சியுள்ள 4 இடங்களில் இந்நிலையங்களை அமைத்திட நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது.

இவ்வாறு, நிறுவப்பட்டுள்ள தொடர்ச்சியான இயக்க குறிப்பு நிலையத்துடன் "வகையீட்டு பூகோள நிலைக்கலன் கருவி– Real Time Kinematic" முறையில் மேற்கொள்ளப்படும் நிலஅளவைப்பணி மிக விரைவானதாகவும், மில்லி மீட்டர் (மி.மீ) அளவிலான துல்லியத்தன்மை கொண்டதாகவும் இருக்கும்.

### 8.3.3. டிஜிட்டல் இந்தியா நில ஆவணங்களை நவீனமயமாக்கும் திட்டம் (Digital India Land Records Modernization Programme)

ஏற்கனவே நடைமுறையில் இருந்து வந்த இரண்டு மத்திய அரசுத் திட்டங்களான நில ஆவணங்களைக் கணினிப்படுத்துதல் மற்றும் வருவாய் நிருவாகத்தை வலிமைப்படுத்துதல் மற்றும் நில ஆவணங்களை மேம்படுத்துதல் **(CLR, SRA and ULR திட்டங்கள்)** ஆகியவற்றை ஒருங்கிணைத்து மத்திய அரசு, தேசிய நில ஆவணங்கள் நவீனமயமாக்கும் திட்டத்தினை (NLRMP) தொடங்கியது. தேசிய நில ஆவணங்களை நவீனமயமாக்கும் திட்டம் 01.04.2016 முதல் "டிஜிட்டல் இந்தியா நில ஆவணங்களை நவீனமயமாக்கும் திட்டம்" (DILRMP) என மறு உருவாக்கம் செய்யப்பட்டுள்ளது.

இத்திட்டம், நில ஆவணங்களை நவீனப்படுத்தி பொதுமக்களுக்குக் கூடுதல் சேவைகளை வழங்குவதுடன், நிலம் சார்ந்த சொத்துக்களில் ஏற்படும் தகராறுகளைக் குறைப்பது, நில ஆவணங்களைப் பராமரிப்பதில் வெளிப்படைத் தன்மைகளை கூடுதலாக்குவது, போன்றவற்றிற்கும் இலக்கமுறை தொழில்நுட்பத்தைப் பயன்படுத்தி நில உரிமையின் உறுதிப்பாட்டை நிலை நிறுத்துவதற்கும் சிறப்பான கண்காணிப்பை மேற்கொள்வதற்கும் பயன்படுகிறது.

## 8.4 தற்போது பராமரிக்கப்பட்டு வரும் நிலஆவணங்கள்

### 8.4.1. ஊரகப் பகுதிகள்

- 'அ' பதிவேடு
- சிட்டா
- புலப்பட புத்தகம் (**FMB**)
- **இ**–அடங்கல்
- கிராம வரைபடங்கள்

### 8.4.2. நகரப் பகுதிகள்

- நகர நில அளவைப் பதிவேடு (TSLR)
- பிளாக் வரைபடம்

## 8.5. நில ஆவணங்களைக் கணினிமயமாக்கல்

நில அளவை ஆவணங்களை, கணினிப்படுத்துவதற்கும் அவற்றினை இணையம் மூலமாக பொதுமக்கள் பயன்பாட்டிற்கு வழங்கவும், தேசிய தகவலியல் மையத்தின் உதவியுடன், கீழ்கண்ட தேவையான மென்பொருள் செயலிகள் மற்றும் தரவு தளங்கள் உருவாக்கப்பட்டுள்ளன:

- தமிழ்நிலம் (ஊரகம்)
- தமிழ்நிலம் (நகர்ப்புறம்)
- கொலாப்லேண்ட்

மாநிலத்திலுள்ள 312 வட்டங்களில் இதுவரையில் 296 ஊரக வட்டங்கள் மற்றும் 14 நகர்ப்புற வட்டங்கள் சார்ந்த நில ஆவணங்கள் தமிழ்நிலம் மென்பொருள் மூலம் இணையவழிக்குக் கொண்டு வரப்பட்டுள்ளன. எஞ்சியுள்ள 2 ஊரக வட்டங்களில் தற்போது நடைபெற்று வரும் நிலவரித்திட்டப்பணிகள் நிறைவடைந்ததும் இணையவழிக்குக் கொண்டு வரப்படும்.

### 8.5.1. நத்தம் நில ஆவணங்கள்

மொத்தமுள்ள 1.42 கோடி நத்தம் நில ஆவணங்களும் கணினிப்படுத்தப்பட்டு, ஒப்பிட்டுச் சரிபார்த்து திருத்தங்கள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. இவ்வாவணங்களை பொதுமக்கள் பயன்பாட்டிற்காக இணையவழிக்குக் கொண்டுவர நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது.

### 8.5.2. நகர நில ஆவணங்கள்

மொத்தமுள்ள 37.87 இலட்சம் நகர நிலஆவணங்கள் கணினிப்படுத்தப்பட்டுள்ளன. நாகர்கோவில் நீங்கலாக அனைத்து மாநகராட்சிகள் மற்றும் நிலஅளவைப் பணி முடிவுற்ற 92 நகராட்சிகள் மற்றும் அனைத்து நகர்ப்புற வட்டங்களின் நகர நில ஆவணங்களும் இணையவழிக்குக் கொண்டு வரப்பட்டுள்ளன. நாகர்கோவில் மாநகராட்சியின் நிலஆவணங்களை

இணையவழிக்குக் கொண்டுவர நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது.

### 8.5.3. புலப்படங்கள்

மொத்தமுள்ள 55.25 இலட்சம் புலப்படங்களில், இதுவரையில் 54.90 இலட்சம் புலப்படங்கள் கணினிப்படுத்தப்பட்டு இணையவழிக்குக் கொண்டு வரப்பட்டுள்ளன.

மேற்குறிப்பிட்டவாறு நில ஆவணங்களைக் கணினிமயமாக்கி, அவற்றை இணையவழியில் வெளியிடுவதால், அவை பொதுமக்களுக்கு மிகவும் பயனுள்ளதாக அமைவதோடு, நில அளவையில் இது ஒரு மைல் கல்லாகவும், அரசின் அளப்பரிய சாதனையாகவும் திகழ்கிறது.

மேலும், நகரளவை பிளாக் வரைபடங்கள் கணினிப்படுத்தும் பணி தற்போது நடைபெற்று வருகிறது. 25840 பிளாக் வரைபடங்களில் இதுவரையில் 2343 பிளாக் வரைபடங்கள் கணினிப்படுத்தப்பட்டுள்ளன.

### 8.5.4. நில ஆவண மேலாண்மை மையங்கள்

கையினால் வரைந்து தயாரிக்கப்பட்ட நில ஆவணங்களைப் பாதுகாப்பதற்கும், அவற்றைக் கணினிப்படுத்தி மின்நகலாக்கி (Digital) பாதுகாத்துப் பராமரிப்பதற்கும், அவற்றின்

நகல்களை பொதுமக்களுக்கு அவர்களின் தேவைக்கேற்ப வழங்குவதற்கும் ஏதுவாக, அனைத்து வட்டங்களிலும் தேவையான உட்கட்டமைப்பு வசதிகளுடன் நில ஆவண மேலாண்மை மையங்கள் / நவீன பதிவறைகள் உருவாக்கும் பணி நடைபெற்று வருகிறது. வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத்துறை நடைமுறைப்படுத்திவரும் அனைத்துச் சேவைகளையும் பொதுமக்களுக்கு வழங்கிட இம்மையங்கள் பயன்படுத்தப்படும். இத்திட்டத்தின்கீழ், நிலஆவண மேலாண்மை மையம் ஒன்றிற்கு ரூ.25.00 இலட்சம் நிதி ஒதுக்கீடு செய்யப்பட்டு தேவையான உட்கட்டமைப்பு வசதிகள் ஏற்படுத்தப்படுகின்றன.



நில ஆவண மேலாண்மை மையம் – செங்கல்பட்டு வட்டம் - காஞ்சிபுரம் மாவட்டம்.

## 8.6. தமிழில் வரைபடங்கள் தயாரித்தல் (கிராமம், வட்டம் மற்றும் மாவட்டம்)

அனைத்து மாவட்ட மற்றும் வட்ட வரைபடங்கள் கணினிப்படுத்தப்பட்டுள்ளன. கிராம வரைபடங்களைக் கணினிப்படுத்தும் பணி முன்னேற்றத்தில் உள்ளது. மேலும், மாவட்ட, வட்ட மற்றும் கிராம வரைபடங்களை, தமிழில் தயாரிக்கும் பணி சென்னை, மத்திய நில அளவை அலுவலகத்தில் நடைபெற்று வருகிறது. இப்பணி முடிவுற்ற பின்னர், கணினிமயமாக்கப்பட்ட மாவட்ட, வட்ட மற்றும் கிராம வரைபடங்கள் பொது மக்களின் பயன்பாட்டிற்குக் கிடைக்க வசதிகள் செய்யப்படும். தமிழ் மொழியில் தயாரிக்கப்படும் இந்த வரைபடங்கள், கிராமப்புற மக்களுக்கு மிகப்பெரிய அளவில் பயனுள்ளதாக இருக்கும். அரசின் அனைத்துத் துறைகளும் இணையம் மூலமாக வரைபடங்களைப் பதிவிறக்கம் செய்து அவர்களுடைய தேவைகளுக்கேற்பப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

### 8.6.1. துறையின் உட்கட்டமைப்பு வளர்ச்சி

இத்துறை நவீனப்படுத்தப்பட்டபொழுது 1601 அலுவலர்களுக்கு இணையவழி பட்டா மாறுதல் திட்டத்தினை செயல்படுத்த ஏதுவாக மடிக்கணினிகள் வழங்கப்பட்டுள்ளன.

314 உயர் அலுவலர்கள் மற்றும் குறுவட்ட அளவர்கள் ஆகியோருக்கு 3ஜி தரவு அட்டைகள் இணையவழி பட்டா மாறுதல் திட்டத்தினைக் கண்காணிக்கவும், செயல்படுத்தவும் வழங்கப்பட்டது.

உதவி இயக்குநர், மண்டல துணை இயக்குநர், மத்திய நிலஅளவை அலுவலகம் மற்றும் நிலஅளவை மற்றும் நிலவரித்திட்ட அலுவலகங்கள் ஆகியற்வற்றை வலுப்படுத்துவதற்காக கணினிகள், யு.பி.எஸ். பிளாட்டர்ஸ் மற்றும் ஸ்கேனர்கள் 2018-19-ஆம் நிதியாண்டில் ரூ.2.31 கோடி செலவில் வழங்கப்பட்டுள்ளன.

## 8.7. நில ஆவணங்களின் இணையவழி அமைப்பும் அதன் பயன்களும்

நில ஆவணங்கள் இணையவழியில் பராமரிக்கப்பட்டு வருவது பொதுமக்களுக்கு அவர்களுடைய நிலங்களின் விவரங்களை அறிந்துகொள்ள மிகவும் பயனுள்ளதாக இருக்கும்.

### (அ) பொதுமக்களுக்கான பயன்கள்

வட்ட அலுவலகங்களுக்கு செல்வதற்கு பதிலாக பொதுமக்கள் தங்கள் வசிப்பிடங்களுக்கு அருகில் அமைந்துள்ள பொதுச்சேவை மையத்தின் **(Common Service Centre)** மூலம் இணையவழியில் பட்டா மாற்றத்திற்கு விண்ணப்பிக்கலாம்.

- கணினி மூலம் அச்சிடப்பட்ட ஒப்புகைச் சீட்டு விண்ணப்பதாரர்களுக்கு உடனடியாக வழங்கப்படுவதுடன், பெறப்படும் விண்ணப்பங்கள் அனைத்தும் கணக்கில் எடுத்துக்கொள்ளப்பட்டு விடுதல்கள் ஏதுமின்றி தீர்வு காணப்படுகிறது.
- பெறப்படும் விண்ணப்பங்கள் தக்க நடவடிக்கைக்காக உடனுக்குடன் தொடர்புடைய அலுவலர்களுக்கு மாற்றப்படுவதுடன் பொதுமக்கள் அவை குறித்த தற்போதைய நிலையினை https://eservices.tn.gov.in/eservicesnew/home.html என்ற இணையதளம் மூலம் அறிந்து கொள்ளலாம்.
- விண்ணப்பதாரர்களுக்கு அவர்களுடைய விண்ணப்பத்தின் மீதான நடவடிக்கையின் விவரங்கள் பதிவு செய்யப்பட்ட அலைபேசி எண்ணிற்கு குறுஞ்செய்திகளாக அனுப்பப்பட்டு வருகின்றன.
- டிஜிட்டல் கையொப்பமிடப்பட்ட பட்டாவை வட்ட அலுவலகங்களுக்கு செல்லாமலேயே பொதுமக்கள் இணையம் வழியாக பதிவிறக்கம் செய்து கொள்ள இயலும்.
- இத்துறையின் முக்கிய அம்சமான கிராம / வட்ட / மாவட்ட வரைபடங்களின் நகல்கள் மற்றும் இத்துறை சம்பந்தப்பட்ட அரசாணைகள், துறையின் நடவடிக்கைகளை உடனுக்குடன் தெரிந்துகொள்ள

நிலஅளவை மற்றும் நிலவரித்திட்டத்துறைக்கென தனியே இணையதள வசதி ஏற்படுத்த நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டு வருகிறது.

(ஆ) துறைக்கான பயன்கள்

- நிலஆவணங்களின் இணையவழி மேலாண்மை அறிமுகப்படுத்தப்பட்டதால் அலுவலர்களின் பணிப்பளு வெகுவாக குறைந்துள்ளது.
- அலுவலர்களின் வேறுபட்ட நிலையிலான பணித்திறன் உயர் அலுவலர்களால் இலகுவாக கண்காணிக்கப்படுவதால் புலத்தில் அவர்களுடைய பணியின் திறன் சிறப்பானதாக உள்ளது.
- இணையவழியில் விண்ணப்பங்கள் பெறப்படுவதால் ஆவணங்கள் எவ்வித விடுதலுமின்றி சிறந்த முறையில் பராமரிக்கப்படுகிறது.

8.7.1. தமிழ்நிலம் மற்றும் பதிவுத்துறை தரவு தளத்தை இணைத்தல்

- நில ஆவணங்கள் கணினிமயப்படுத்தப்பட்டு இணையத்தில் வெளியிடப்பட்டு வருகிறது. பதிவுத்துறை அலுவலகங்களில் நடைபெறும் நிலப் பரிவர்த்தனைகளின்போது வலைத்தளத்தில் கிடைக்கப்பெறுகிற நில உரிமை குறித்த தகவல்களை

நில ஆவணங்களுடன் உறுதிப்படுத்திக் கொண்ட பின்னரே, நிலப் பரிவர்த்தனைகளை பதிவுத்துறை அலுவலர்கள் அனுமதிக்கின்றனர். இது தவறான நிலப்பரிவர்த்தனைகள் நடைபெறுவதைத் தவிர்க்க உதவுகிறது.

- சார்பதிவகங்களில் பத்திரப்பதிவு நடவடிக்கைகள் முடிவுற்றதும் உடனடியாக பட்டா மாறுதல் ஆணைகளை வெளியிட ஏதுவாக தமிழ்நிலம் தரவுதளத்துடன் பதிவுத்துறை தரவுதளம் இணைக்கப்பட்டுள்ளது. 12.02.2018 அன்று ஏற்படுத்தப்பட்ட, இவ்வசதியின் மூலம் புதிய விண்ணப்பங்கள் ஏதும் கோரப்படாமல் உடனடியாக பட்டா மாறுதல் ஆணைகளை வழங்கிட இயலும். மேலும், இணையவழிப்படுத்தப்பட்ட மாநகரங்கள் மற்றும் நகரங்களின் நகர நிலஅளவை ஆவணங்கள் பதிவுத்துறையின் (STAR 2.0) மென்பொருளுடன் 14.08.2019 முதல் ஒருங்கிணைக்கப்பட்டுள்ளது.

8.8 இயக்ககத்தின் பணிகளை மேம்படுத்துவதற்கு எடுக்கப்பட்டுள்ள **நடவடிக்கைகள்**

**8.8.1. தானியங்கி பட்டா மாறுதல் முறை**

நிலப்பரிவர்த்தனையும், நிலஆவண பராமரிப்பும் இணையம் சார்ந்த மென்பொருள் மூலம் மேற்கொள்ளப்படுவதால்,

உட்பிரிவு செய்ய வேண்டிய அவசியம் இல்லாத நிலப்பரிவர்த்தனைக்களுக்கான நிலஉரிமை மாற்றங்களை தானியங்கியாக நில ஆவணங்களில் மேற்கொள்ள அரசாணை (நிலை) எண்.84 வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத்துறை, நிலஅளவை மற்றும் நிலவரித்திட்டப்பிரிவு [நி.அ–II(2)] நாள்.04.02.2020–இல் உத்திரவிடப்பட்டுள்ளது. முதற்கட்டமாக, தனியொரு நபரை உரிமையாளராகக் கொண்டுள்ள நிலங்கள் தொடர்புடைய நிலப்பரிவர்த்தனைகள் தானியங்கியான நில உரிமை மாற்றத்திற்கு எடுத்துக்கொள்ளப்படும். பின்னர், இத்திட்டம் கூட்டுப்பட்டாக்களுக்கும் விரிவுபடுத்தப்படும். இதன்படி, காஞ்சிபுரம் மாவட்டம், வாலாஜாபாத் வட்டத்தில் முன்னோடித் திட்டமாக இது நிறைவேற்றப்படும்.

நிலப்பரிவர்த்தனைகளை பதிவு செய்யும் செயல்முறைகள் ஏற்கனவே STAR 2.0 என்னும் மென்பொருள் மூலம் கணினிப்படுத்தப்பட்டுள்ளதால், நிலப்பரிவர்த்தனைகளைப் பதிவு செய்யும் போது பதிவுத்துறைக்குக் கணினி வாயிலாக ஆம் / இல்லை என்ற பதிலளிக்கும் வகையில் வினாக்கள் எழுப்பப்பட்டு பதில் பெறப்படும்.

அவ்வாறு பெறப்படும் தகவலின் அடிப்படையில் நிலக்கிரயதாரருக்கு அதே கிராமத்தில் பட்டா ஏதும் இல்லை எனும் நிகழ்வில், இவ்விவரங்கள் அனைத்தும் தமிழ்நிலம் தரவு தளத்திற்கு இணையவழியில் அனுப்பிவைக்கப்பட்டு, அங்கு

கிரயதாரருக்கு புதிய பட்டா எண் வழங்கப்பட்டு அவரது பெயரில் தானியங்கியாக (மானுட செயலாக்கம் ஏதுமின்றி) பட்டா மாற்றம் செய்யப்படும். நிலக்கிரயம் பெறுபவருக்கு அதே கிராமத்தில் ஏற்கனவே பட்டா எண் இருப்பின், புதியதாக கிரயப்பதிவு செய்யப்பட்ட நிலம் அவருக்கு ஏற்கனவே உள்ள பட்டாவில் சேர்க்கப்படும். மேற்குறிப்பிட்ட இரு நிகழ்வுகளிலும் பட்டா மாறுதல் உத்தரவு மின்னஞ்சல் மூலமாக கிரயம் பெறுபவர் மற்றும் கிரயம் செய்பவர் ஆகியோருக்கு அனுப்பிவைக்கப்படும். இவ்வுத்தரவை 'எங்கிருந்தும் எந்நேரத்திலும்' இணையவழி சேவை மூலமாகவும் பதிவிறக்கம் செய்து கொள்ளலாம்.

### 8.8.2. பத்திரப்பதிவிற்கு முன்னர் உட்பிரிவுகளை அங்கீகரித்தல்

போலியான ஆவணங்களைப் பயன்படுத்தி நிலம் தொடர்பான சொத்துகள் பத்திரப்பதிவு செய்யப்படுவதை தவிர்ப்பதற்காக, பத்திரப்பதிவிற்கு முன்னரே உட்பிரிவுகள் பரிசீலனை மற்றும் அங்கீகாரம் செய்யும் நடைமுறையை அறிமுகப்படுத்த ஆணையிடப்பட்டுள்ளது. இந்நடைமுறையின்கீழ், தத்தமது நிலங்களை / சொத்துக்களை விற்பனை செய்ய விரும்பும் நில உரிமையாளர்கள் வட்ட அலுவலகங்களுக்கு விண்ணப்பித்து தாம் விற்பனை செய்ய விரும்பும் நிலங்கள் / சொத்துக்கள் குறித்த புலப்படங்களின் சான்றளிக்கப்பட்ட நகலைப் பெற வேண்டும்.

அவ்விண்ணப்பங்கள் பெறப்பட்டதும், வட்ட அலுவலகங்களிலுள்ள நிலஅளவைப் பணியாளர்கள் உரிய விசாரணை மேற்கொண்டு, தொடர்புடைய நிலப்பரிவர்த்தனைக்காக தற்காலிக உட்பிரிவு ஆவணங்களைத் தயார் செய்வர். பட்டா மாறுதல் செய்யத்தக்க ஒப்புதலளிக்கப்பட்ட உட்பிரிவு ஆவணங்கள், இணையவழியில் தொடர்புடைய சார்பதிவகம் மற்றும் நிலஉரிமையாளர் (விண்ணப்பதாரர்) ஆகியோருக்கு அனுப்பி வைக்கப்படும். இதன் பின்னர், நிலஉரிமையாளர், தனது நிலப்பரிவர்த்தனையை சார்பதிவகத்தின் மூலம் மேற்கொள்ள முடியும். தொடர்ந்து, இணையவழியிலான பட்டா மாறுதல் விவரங்கள், மீண்டும் புலத்தணிக்கை ஏதுமின்றி தொடர்புடைய ஆவணங்களில் பதிவு செய்யப்படும்.

### 8.8.3. உட்பிரிவுகளுடன் கூடிய இணைய வழி பட்டா மாறுதல் விண்ணப்பங்களை பரிசீலனை செய்ய கிராம நிர்வாக அலுவலர்களை ஈடுபடுத்துதல்

பதிவுத்துறையின் மென்பொருளும் (STAR 2.0), இணையவழி தமிழ்நிலம் மென்பொருளும் (நில ஆவணங்களை இணையவழியில் பராமரிக்கும் மென்பொருள்) 12.02.2018 முதல் ஒருங்கிணைக்கப்பட்டு, நிலக்கிரயம் தொடர்பான பதிவு விவரங்கள் பதிவுத்துறையிலிருந்து இணையம் வழியே தமிழ்நிலம் மென்பொருளை வந்தடைந்து பட்டா மாறுதல்

பணிகளைத் தொடங்க வழிவகை செய்யப்பட்டுள்ளது. அதன்படி, பெறப்படும் விண்ணப்பங்களை விரைவாக பரிசீலனை செய்து முடிக்கும் பொருட்டு புதிய முயற்சியாக கிராம நிர்வாக அலுவலர்களுக்கு ஒரு வார காலம் நில அளவைப் பயிற்சி அளித்து அவர்களையும் (நில அளவர்களுடன்) இப்பணியில் ஈடுபடுத்த முடிவு செய்யப்பட்டுள்ளது. இதற்காக தஞ்சாவூர் மற்றும் திருப்பூர் மாவட்டங்கள் முன்னோடி மாவட்டங்களாக தெரிவு செய்யப்பட்டு இத்திட்டம் நடைமுறைப்படுத்தப்படும்.

### 8.8.4. உரிமம் பெற்ற நில அளவர்கள்

- விரைவான நகர்ப்புறமயமாதல், தொழில் மற்றும் பொருளாதார வளர்ச்சி ஆகியவற்றால் சமீப ஆண்டுகளாக நிலப்பரிவர்த்தனைகள் அதிகரித்துள்ளன. அதன் காரணமாக நிலங்களை அளவை செய்ய வேண்டிய தேவையும் அதிகரித்துள்ளது. அதன்பொருட்டு, நில அளவர்களை நிலஅளவைப் பணியில் ஈடுபடுத்த வேண்டிய தேவையும் பன்மடங்கு அதிகரித்துள்ளது. ஏற்கனவே பணியில் உள்ள நிலஅளவர்களின் பணிச்சுமையை குறைக்கும் வகையில், கட்டுமான பொறியியல் படிப்பில் பட்டயம் பெற்றுள்ள நபர்களுக்கு நிலஅளவைப் பயிற்சி அளித்து, அவர்களுக்கு நிலஅளவை செய்வதற்கான உரிமம் வழங்குவதற்கு அரசாணை வெளியிடப்பட்டுள்ளது.

- மேற்குறிப்பிட்டவாறு பட்டயம் பெற்றுள்ளவர்களுக்கென நிலஅளவைப் பயிற்சி ஒரத்தநாடு நிலஅளவை பயிற்சி நிலையத்தில் தொடங்கப்பட்டுள்ளது. பணிகளின் தேவைக்கேற்ப ஒப்பந்த அடிப்படையில் உரிமம் பெற்ற நிலஅளவர்கள், ஏற்கனவே உள்ள நிலஅளவர்களுக்கு உதவியாக செயல்படும் வகையில், இணையதள பட்டா மாறுதல், அங்கீகரிக்கப்பட்ட மனைகளில் உட்பிரிவு செய்தல், பிற அரசுத்துறைகளான வனத்துறையின் காடுகளின் எல்லைகளை அளவை செய்தல், நெடுஞ்சாலைத்துறை மற்றும் மெட்ரோ ரயில் திட்ட நிலஎடுப்புப் பணிகள் உள்ளிட்ட நிலஅளவைப் பணிகளில் ஈடுபடுத்தப்படுவர்.

**8.8.5 குறுவட்ட அளவர்களுக்கு அலுவலகத்துடன் கூடிய குடியிருப்புகள்.**

பொதுமக்களுக்கு எளிதாக சேவை புரியும்வண்ணம் 100 குறுவட்டங்களில் குறுவட்ட அளவர்களுக்கு அலுவலகத்துடன் கூடிய குடியிருப்புகள் ரூ.7.68 கோடி செலவில் கட்டி முடிக்கப்பட்டு திறந்து வைக்கப்பட்டுள்ளது. இதனைத் தொடர்ந்து 60 குறுவட்டங்களில் குறுவட்ட அளவர்களுக்கு அலுவலகத்துடன் கூடிய குடியிருப்புகளுக்கான கட்டுமானப்பணிகள் ரூ.9.30 கோடி செலவில் நடைபெற்று வருகிறது. அவற்றில், கட்டி முடிக்கப்பட்டிருந்த 11 குறுவட்ட

அளவர் குடியிருப்புகள் 27.02.2019 அன்றும், 17 குறுவட்ட அளவர் குடியிருப்புகள் 14.08.2019 அன்றும், மேலும், 2 குறுவட்டஅளவர் குடியிருப்புகள் 26.11.2019 அன்றும் மாண்புமிகு தமிழக முதலமைச்சர் அவர்களால் திறந்து வைக்கப்பட்டுள்ளது.

மாண்புமிகு வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத்துறை அமைச்சர் அவர்கள் சட்டமன்றப்பேரவையில் வெளியிட்ட அறிவிப்பின் அடிப்படையில் 2018-19-ஆம் நிதி ஆண்டில் ரூ.17.26 கோடி மதிப்பீட்டில் மேலும், 100 குறுவட்டங்களில் குறுவட்ட அளவர்களுக்கு அலுவலகத்துடன் கூடிய குடியிருப்புகள் கட்ட, அரசாணை (நிலை) எண்.358, வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத்துறை, நாள்: 26.09.2018-இன்படி ஆணை வெளியிடப்பட்டுள்ளது. எஞ்சியுள்ள 23 குறுவட்ட அளவர் குடியிருப்புகள் மிக விரைவில் பயன்பாட்டிற்கு கொண்டுவரப்பட உள்ளன. மேலும், 72 குறுவட்டங்களில் கட்டுமானப் பணி பொதுப்பணித்துறையின் மூலம் நடைபெற்று வருகிறது.



கொடுவிலார்பட்டி – அலுவலகத்துடன் கூடிய குறுவட்ட அளவர் குடியிருப்பு- தேனி வட்டம் - தேனி மாவட்டம்

### 8.8.6 AMMA கைப்பேசி செயலி

பொதுமக்கள் நில ஆவணங்கள் தொடர்பான சேவைகளை எளிதில் கையாளும் வகையில் மாண்புமிகு தமிழக முதலமைச்சர் அவர்கள் 01.03.2018 அன்று 'AMMA கைப்பேசி செயலி' ஒன்றை அறிமுகப்படுத்தியுள்ளார்கள். இந்த சேவையின் வாயிலாக பொதுமக்கள் தங்களது கைப்பேசி திரையினை மென்மையாகத் தொடுவதின் மூலம் தேவையான விவரங்களை காண இயலும்.

### 8.8.7. காலிப்பணியிடங்கள் நிரப்புதல்

இத்துறையில் காலியாக உள்ள பணியிடங்களான நிலஅளவர், வரைவாளர், இளநிலை உதவியாளர், தட்டச்சர் மற்றும் சுருக்கெழுத்து தட்டச்சர் பதவிகள், தமிழ்நாடு அரசுப்பணியாளர் தேர்வாணையம் மற்றும் கருணை அடிப்படை நியமனம் மூலமாக நிரப்பப்படுகின்றன.

இதனடிப்படையில் கடந்த மூன்று ஆண்டுகளில் பின்வரும் காலிப் பணியிடங்கள் நிரப்பப்பட்டுள்ளன:

| வ.எண் | பதவியின் பெயர் | நிரப்பப்பட்ட பணியிடங்களின் எண்ணிக்கை | தேர்வுமுறை | |
|---|---|---|---|---|
| | | | த.நா.அ.ப. தேர்வாணையம் | கருணை அடிப்படை நியமனம் |
| 1. | நிலஅளவர் | 533 | 438 | 95 |
| 2. | வரைவாளர் | 492 | 444 | 48 |
| 3. | இளநிலை உதவியாளர் | 151 | 142 | 9 |
| 4. | தட்டச்சர் | 29 | 29 | -- |
| 5. | சுருக்கெழுத்து தட்டச்சர் | 5 | 5 | -- |
| 6. | அலுவலக உதவியாளர் | 9 | -- | 9 |
| 7. | புல உதவியாளர் | 4 | -- | 4 |
| | மொத்தம் | **1223** | **1058** | **165** |

### 8.8.8 தமிழ்நாடு நிலஅளவைப் பதிவேடுகள் துறை வரலாற்று கண்காட்சி அரங்கம்

நிலஅளவைப் பதிவேடுகள் துறை 160 ஆண்டுகள் கடந்த நிலையில், இத்துறையின் மூலம் மேற்கொள்ளப்பட்ட பல்வேறு நிலஅளவைப் பணிகள் குறித்த வரலாற்றுத் தகவல்களை எடுத்துக்காட்டும் வகையில் புகைப்படக் கண்காட்சி 23.05.2018 அன்று நிலஅளவை மற்றும் நிலவரித்திட்ட இயக்குநரகத்தில்

நடைபெற்றது. இக்கண்காட்சியில் வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத்துறை அமைச்சர் மற்றும் வருவாய்த் துறை செயலர் ஆகியோர் பங்கு பெற்றது சிறப்பம்சமாகும். இக்கண்காட்சியின் மூலம் நிலஅளவைத் துறையின் வரலாற்றையும், சேவையையும் பொதுமக்களால் எளிதில் அறிந்து கொள்ளமுடிந்தது.

இக்கண்காட்சியில், 1901–1920–ஆம் ஆண்டுகளில் மேற்கொள்ளப்பட்ட மறுநிலவரித்திட்டப்பணிகள், 1930 முதல் 1940–ஆம் ஆண்டுகளில் மேற்கொள்ளப்பட்ட நகர நிலஅளவைப் பணிகள், 1948, 1964–ஆம் ஆண்டு இனாம் ஒழிப்புச் சட்டத்தின்படி மேற்கொள்ளப்பட்ட நிலஅளவைப் பணிகள்,1979–1985–ஆம் ஆண்டு மேற்கொள்ளப்பட்ட நிலஉடமைப் பதிவு மேம்பாட்டுத் திட்டம், 1988–ஆம் ஆண்டு நத்தம், நகர நிலஅளவைப் பணிகள் மற்றும் தற்போது மேற்கொள்ளப்பட்டுவரும் நவீன நிலஅளவை மற்றும் மறுநிலஅளவைப்பணி முன்னேற்றம் தொடர்பான தகவல்கள் மற்றும் நிலஅளவைக்கு பயன்படுத்திய கருவிகள் காட்சிப்படுத்தப்பட்டன.





## 8.9 நிலவரித்திட்டம்

நிலத்தின் விளைச்சலில் ஒரு பகுதி நில வரியாக முன்பு விதிக்கப்பட்டு, தற்போது இது அதன் பணமதிப்பீட்டில் வசூலிக்கப்பட்டு வரப்படுகிறது. நிலவரி மற்றும் நிலத்தின்

உரிமையாளரை நிர்ணயம் செய்வதற்காக கடைப்பிடிக்கப்படும் முறை நில வருவாய் நிலவரித்திட்டம் எனப்படுகிறது.

ஆரம்பத்தில், மண் வகைப்பாடு செய்யப்படாமல் பாசன ஆதாரங்களைக் கணக்கில் கொள்ளாமல் நிலவரி வசூலிக்கப்பட்டு வந்தது. இந்த முறை "நிலையான நிலவரித்திட்டம்' என அழைக்கப்பட்டது. இந்த முறையை ரத்து செய்து பாய்ச்சல் ஆதாரம் மற்றும் மண் வகைப்பாடு ஆகியவைகளின் அடிப்படையில் நிலவரி நிர்ணயம் செய்யும் முறையான 'இரயத்துவாரி நிலவரித்திட்டம்' 1879−80.ஆம் ஆண்டிலிருந்து அசல் நிலவரித்திட்டம் (Original Settlement) என அறிமுகப்படுத்தப்பட்டது. இம்முறையில், நிலவரி நிர்ணயிப்பதற்காக முதன் முதலாக அரசினால் நிலஅளவை செய்யப்பட்டு, புலவாரியாக வகைப்பாடுகள், மண்வயனம், பாசன ஆதார வகுப்புகள் நிர்ணயிக்கப்பட்டு தரம், தீர்வை நிர்ணயிக்கப்பட்டது. மேலும், புலங்களின் உரிமை தொடர்பாக விசாரணை மேற்கொள்ளப்பட்டு பட்டா பதிவுகள் ஏற்படுத்தப்பட்டது. இம்முறை முப்பதாண்டுகள் வரை நீடிக்கத்தக்கது. எனவே, அசல் நிலவரித்திட்டம் அறிமுகப்படுத்தப்பட்ட கிராமங்களில் முப்பதாண்டுகளுக்குப் பின் மறு நிலவரித்திட்டம் (Re−Settlement) அறிமுகப்படுத்தப்பட்டது. எனினும், ஜமீன்தார்கள்/ இனாம்தார்கள் ஆகியோர்களிடமிருந்து நில உடமைகளில் இரயத்துவாரி நிலவரித்திட்டம்

அறிமுகப்படுத்தப்படாமல், அவ்வுடமைகளில் நிலையான நிலவரித்திட்டம் கடைபிடிக்கப்பட்டு வந்தது. சுதந்திரத்தின்போது ஜமீன் எஸ்டேட், இனாம் மற்றும் மைனர் இனாம் இதுபோன்ற சில பகுதிகளைத் தவிர தமிழ்நாட்டின் பெரும்பாலான பகுதிகளில் இரயத்துவாரி நிலவரித்திட்ட முறை நடைமுறைப்படுத்தப்பட்டிருந்தது.

சுதந்திரம் பெற்ற பின்பு ஜமீன்/இனாம் எஸ்டேட்/ இது போன்ற பகுதிகளிலிருந்த, விவசாயிகளின் நிலவரிச் சுமையைக் குறைப்பதற்காகவும், நில உடமையாளர்கள் என்ற பிரிவினரை மொத்தமாக நீக்கி, அக்கிராமங்களை அரசின் நேரடி கட்டுப்பாட்டில் கொண்டு வருவதற்காகவும், பல்வேறு நில உடமையாளர்கள் ஒழிப்புச் சட்டங்கள் இயற்றப்பட்டன. அவைகளில் பெரும்பாலான சட்டங்களின் கீழ் நிலவரித்திட்டப் பணிகள் முடிக்கப்பட்டுள்ள நிலையில், பின்வரும் சட்டங்களின் கீழ் சில கிராமங்களில் மட்டும் நிலவரித்திட்டப் பணிகள் நிலுவையிலுள்ளன

1. **தமிழ்நாடு எஸ்டேட்கள் (ஒழிப்பும் மற்றும் இரயத்துவாரியாக மாற்றலும்) சட்டம் 1948 (தமிழ்நாடு சட்டம் XXVI/1948)**

மொகலாய மன்னர்கள் ஆட்சிக் காலத்தில் நிலவரி வசூல் செய்ய ஜமீன்தார்கள், பாளையக்காரர்கள் முதலானோர் நியமிக்கப்பட்டனர். இவர்களுக்கு நிலவரி வசூலிப்பதற்காக

மேல்வார உரிமையும் இப்பகுதிகளில் விவசாயம் செய்பவர்களுக்கு குடிவார உரிமையும் அளிக்கப்பட்டிருந்தது. இவர்களது ஆளுகைக்குட்பட்ட பகுதி/கிராமங்கள் ஜமீன் எஸ்டேட் எனப்பட்டது. இச்சட்டத்தின் மூலம் ஜமீன் மற்றும் மேல்வார இனாம் எஸ்டேட்களில் ஜமீன்தார் மற்றும் இனாம்தாரர்களின் வரி வசூலிக்கும் மேல்வார உரிமை நீக்கப்பட்டு, அக்கிராமங்கள் அரசின் நேரடி ஆளுகைக்குக் கொண்டுவரப்பட்டன. இச்சட்டத்தின் கீழ் அரசால் எடுத்துக்கொள்ளப்பட்ட அனைத்து எஸ்டேட்களிலும் இயரத்துவாரி நிலவரித்திட்டம் அறிமுகப்படுத்தப்பட்டு பட்டா வழங்கப்பட்டது. எனினும், பட்டா வழங்கியது மற்றும் வகைப்பாடு செய்தது குறித்து சில வழக்குகள் நீதிமன்றங்களில் நிலுவையிலிருந்து வருகின்றன.

**2. தமிழ்நாடு இனாம் எஸ்டேட்கள் (ஒழிப்பும் மற்றும் இரயத்துவாரியாக மாற்றலும்) சட்டம் 1963 (தமிழ்நாடு சட்டம் 26/1963)**

முன்னாள் இந்து மன்னர்கள் காலத்திலும், மொகலாய மன்னர்கள் காலத்திலும் 1802–ஆம் ஆண்டுக்கு முன்பு வரை படைவீரர்களுக்கும், அரசு அலுவலர்களுக்கும், மத ஸ்தாபனங்களுக்கும், தர்ம ஸ்தாபனங்களுக்கும், ஊழியர்களுக்கும், துறவிகளுக்கும் மற்றும் அறிவாளிகளுக்கும் நிலவரி இல்லாமலோ அல்லது குறைந்த அளவிலான நிலவரி

நிர்ணயித்தோ ஊழியம் செய்வதற்காக சில கிராமங்கள் அல்லது கிராமத்தின் பகுதிகள் வழங்கப்பட்டிருந்தன. இவை "மான்யம் / இனாம்" என அழைக்கப்பட்டு வந்தது. இனாம் வழங்கப்பட்டதற்கு ஆதாரமாக உரிமைபட்டயங்களும் வழங்கப்பட்டிருந்தன. இந்த இனாம் எஸ்டேட்டுகளில் இருந்த நில உடமையாளர்களின் உரிமையை நீக்கி அவைகளை அரசின் நேரடி கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவரவும், அந்த எஸ்டேட்டுகளில் இரயத்துவாரி நிலவரித்திட்டத்தினை அறிமுகப்படுத்தவும் இச்சட்டம் இயற்றப்பட்டது. இச்சட்டத்தின் கீழ் எடுத்துக்கொள்ளப்பட்ட கிராமங்களில், நீதிமன்ற வழக்குகளுக்கு உட்பட்ட 6 (ஆறு) கிராமங்களைத் தவிர, இதர அனைத்து கிராமங்களிலும் நிலவரித்திட்டப் பணி முடிக்கப்பட்டு பட்டாக்கள் வழங்கப்பட்டுவிட்டன.

**3. தமிழ்நாடு சிறு இனாம்கள் (ஒழிப்பும் மற்றும் இரயத்துவாரியாக மாற்றலும்) சட்டம் 1963 (தமிழ்நாடு சட்டம் 30/1963)**

ஓர் இனாமுக்கான உரிமை பட்டயத்தில் கிராமத்தின் ஒரு பகுதியை பிராந்திய நில அளவுகளான காணி, ஏக்கர், சென்ட் போன்ற நில அளவுகளிலோ அல்லது மத/தர்ம நிறுவனங்களுக்கு முழு கிராமங்களாகவோ அளிக்கப்பட்ட இனாம் கிராமங்களில், இனாம்தாரர்களின் உரிமையை நீக்கவும் அவற்றில் இரயத்துவாரி நிலவரித்திட்டத்தினை அறிமுகப்படுத்தவும் இச்சட்டம்

இயற்றப்பட்டது. இச்சட்டத்தின் கீழ் எடுத்துக்கொள்ளப்பட்ட இனாம் கிராமங்களில், நீதிமன்ற வழக்குகளுக்கு உட்பட்ட 7 (ஏழு) கிராமங்களைத் தவிர, இதர அனைத்து கிராமங்களிலும், நிலவரித்திட்டப் பணிகள் முடிக்கப்பட்டு பட்டாக்கள் வழங்கப்பட்டுள்ளன.

இனாம் உரிமையை அரசு எடுத்துக்கொண்டதை ஆட்சேபித்து இனாம்தாரர்களால் நீதிமன்றங்களில் தொடரப்பட்டிருந்த வழக்குகள் காரணமாக, அந்த கிராமங்களில் நிலவரித்திட்டப் பணிகளை மேற்கொள்ள இயலாமல் இருந்து வந்தது. எனினும், பெரும்பாலான கிராமங்கள் தொடர்பான வழக்குகள் முடிவுற்ற நிலையில், நிலஅளவை மற்றும் நிலவரித்திட்டப் பணிகள் தொடங்கப்பட்டுள்ளது. இதில், கிருஷ்ணகிரி மாவட்டம் ஓசூர் வட்டத்திலுள்ள சென்னசந்திரம் முதலான 6 இனாம் கிராமங்களில் நிலஅளவை பணிகள் முடிக்கப்பட்டு தற்போது நிலவரித்திட்டப் பணிகள் மேற்கொள்ள தனி வட்டாட்சியர் தலைமையில் ஓர் அலகு தொடங்கப்பட்டுள்ளது. இக்கிராமங்களில் நிலவரித்திட்ட ஆரம்பகட்ட ஆவணங்கள் தயாரிக்கப்பட்டுள்ளது. மேலும், மூன்று கிராமங்களில் விசாரணை அறிவிப்பு வழங்கப்பட்டு விசாரணைப் பணி விரைவில் தொடங்கப்படவுள்ளது.

## 4. தமிழ்நாடு கூடலூர் ஜென்மம் எஸ்டேட்கள் (ஒழிப்பும் மற்றும் இரயத்துவாரியாக மாற்றலும்) சட்டம் 1969 (தமிழ்நாடு சட்டம் 24/1969)

நீலகிரி மாவட்டம் கூடலூர் மற்றும் பந்தலூர் வட்டங்களில், ஜென்மம் எஸ்டேட்களில் ஜென்மிகளுக்கு இருந்த உரிமையை நீக்கவும் இரயத்துவாரி நிலவரித்திட்ட முறையை அறிமுகப்படுத்தவும் இச்சட்டம் இயற்றப்பட்டது. உயர்நீதிமன்றத்திலும் அதன் பின் உச்சநீதிமன்றத்திலும் சில குத்தகைதாரர்கள் மற்றும் ஜென்மிகளால் இச்சட்டத்தை முழுமையாக இந்திய அரசியலமைப்பு சட்டத்தின் 9.ஆவது அட்டவணையில் சேர்க்கப்பட்டதை எதிர்த்து பல வழக்குகள் தொடரப்பட்டிருந்தன. கடைசியாக இச்சட்டத்தினை இந்திய அரசியலமைப்பு சட்டத்தின் 9–ஆம் அட்டவணையில் முழுமையாக சேர்க்கப்பட்டதை ஏற்று உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்துள்ளதால், நிலவரித்திட்டப் பணிகளை முடிக்க நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளது. ஜென்மம் நிலங்களில் நிலவரித்திட்டப் பணி முடிக்கப்பட்ட விவரம் பின்வருமாறு:–

| வ. எண் | விவரங்கள் | விஸ்தீரணம் (ஏக்கரில்) |
|---|---|---|
| 1 | மொத்த ஜென்மம் நிலங்கள் | 80,087.74 |
| 2 | நிலவரித்திட்டம் முடிக்கப்பட்ட மொத்த பரப்பு | 45,101.46 |
| 3 | நிலவரித்திட்டம் முடிக்கப்பட்ட பரப்பில் வனத்துறைக்கு ஒப்படைக்கப்பட்டது | 17,014.43 |
| 4 | நிலவரித்திட்டப் பணி முடிக்கப்பட வேண்டிய பரப்பு [(1)–(2)] | 34,986.28 |

சுற்றுச்சூழல் பாதுகாப்பு மற்றும் வன செல்வங்களை பாதுகாக்கும் பொருட்டு அரசாணை (நிலை) எண்.363, வருவாய்த் துறை, நாள் 28.11.2011 மற்றும் அரசாணை (நிலை) எண்.263, வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மைத் துறை நாள் 18.08.2017.இன் மூலம் 17,014.43 ஏக்கர் நிலம் வனத் துறைக்கு ஒப்படைக்கப்பட்டுள்ளது.

இதற்கிடையில் மேற்படி சட்டம் பிரிவு 8,9,10–களின் கீழ் பெறப்பட்ட மனுக்களை முடிவு செய்யுமாறு நிலவரித்திட்ட அலுவலர்/மாவட்ட வருவாய் அலுவலரை உயர்நீதிமன்றம் அறிவுறுத்தியுள்ளது. அதன்படி பெரும்பாலான மனுக்கள் நிலவரித்திட்ட அலுவலரால் முடிவு செய்யப்பட்டுவிட்டன. முடிவு செய்யப்பட்ட இனங்களில் நிலவரித்திட்ட அலுவலரின் உத்தரவுகளுக்கு எதிராக ஜென்மம் ஒழிப்பு தீர்ப்பாயம்/மாவட்ட நீதிமன்றம், உதகமண்டலத்தில் பல மேல்முறையீடு வழக்குகள் தொடரப்பட்டுள்ளன.

கூடலூர் ஜென்மம் நிலங்களில் நிலவரித்திட்டப் பணிகள் நிலுவையிலுள்ள 34,986.28 ஏக்கர் பரப்பில் குத்தகை காலம் முடிவுற்ற நிலங்களைத் திரும்ப எடுத்தல் மற்றும் அப்புலங்களில் நிலவரித்திட்டம் அறிமுகப்படுத்துதல் தொடர்பாக அரசாணை எண்.73, சுற்றுச்சூழல் மற்றும் வனம் (F.R.14) துறை, நாள் 19.03.2018.இல் 3 நபர்கள் அடங்கிய குழு ஒன்றினை அரசு அமைத்துள்ளது. இக்குழுவின் பரிந்துரைகளை பரிசீலித்து அரசால் தக்க முடிவுகள் எடுக்கப்படும்.

**8.9.1. திட்டங்கள்**

**(அ) நத்தம் நிலவரித்திட்டம்**

அசல் நிலவரித்திட்டம் மற்றும் மறு நிலவரித்திட்டப் பணிகளின்போது கிராமங்களிலுள்ள குடியிருப்பு பகுதி 'நத்தம்' என வகைப்பாடு செய்யப்பட்டிருந்தது. நத்தம் புலங்களில் வீட்டு மனைகள் உட்பிரிவு செய்யப்படாமல் மனைப் பட்டா வழங்கப்படாமல் இருந்து வந்தது. எனவே, மாநிலத்திலுள்ள அனைத்து கிராமங்களிலும் இருந்த நத்தம் புலங்களிலுள்ள வீட்டு மனைகளிலும், விவசாயமில்லாத பிற பயன்பாட்டில் இருந்து வந்த விவசாய நிலங்களிலும், நத்தம் நிலவரித்திட்டப் பணி மேற்கொள்ளப்பட்டு பட்டா வழங்கப்பட்டது. இத்திட்டத்தின்படி, மாநிலத்திலுள்ள அனைத்து கிராமப் பகுதிகளிலும் நத்தம் நிலவரித்திட்டப் பணிகள் முடிக்கப்பட்டு மனைப் பட்டாக்கள் வழங்கப்பட்டுள்ளது.

எனினும், நகராட்சி மற்றும் மாநகராட்சிகளுக்குட்பட்ட நத்தம் பகுதிகளில் நத்தம் நிலவரித்திட்டப் பணிகள் மேற்கொள்ளப்பட்டு வருகிறது.

**(ஆ) மலைக் கிராமங்களில் நிலவரித்திட்டப் பணி**

நத்தம் நிலவரித்திட்டப் பணியோ அல்லது நில உடமை மேம்பாட்டு பணியோ மேற்க்கொள்ளப்படாத மலைக் கிராமங்களில், மறு நிலஅளவைப் பணிகள் முடிக்கப்பட்டதைத் தொடர்ந்து, நிலவரித்திட்டப் பணி முடிக்கப்பட்டு பட்டாக்கள் வழங்கப்பட்டுள்ளன. இப்பணி 6 கிராமங்களில் மட்டும் தற்போது நடைபெற்று வருகிறது.

**(இ) நகராட்சிகள் மற்றும் மாநகராட்சிகளில் நிலவரித்திட்டப் பணி**

மாநிலத்திலுள்ள அனைத்து நகராட்சிகள் மற்றும் மாநகராட்சிகளிலும் வருவாய்ப் பதிவேடுகளிலுள்ள பதிவுகளை இன்றைய நிலையில் மேம்படுத்தவும், நில உரிமையாளர்களுக்கு பட்டா வழங்கவும் மாவட்ட வருவாய் நிர்வாக பராமரிப்பிற்கென நில ஆவணங்களைத் தயாரித்து அளிக்கவும் நகர நிலவரித்திட்டப் பணி தொடங்கப்பட்டது.

இதன்படி, மாநிலத்திலுள்ள அனைத்து மாநகராட்சிகள் மற்றும் நகராட்சிகளில் நகர நிலவரித்திட்டப் பணி மேற்கொள்ளப்பட வேண்டும். இவற்றுள் 24 நகராட்சிகளில் முழுவதுமாக இப்பணி முடிக்கப்பட்டு பட்டாக்கள்

வழங்கப்பட்டுள்ளன. தற்போது நகர நிலவரித்திட்டப் பணி 6 மாநகராட்சிகளிலும் 62 நகராட்சிகளிலும் நடைபெற்று வருகின்றன. மீதமுள்ள நகராட்சிகள்/ மாநகராட்சிகளைப் பொறுத்தவரையில், தற்போது பணி நடைபெற்று வரும் அலகுகளின் பணிகள் முடிக்கப்பட்டவுடன், அவ்வலகு, பணி தொடங்கவேண்டிய புதிய நகரத்தில் மறு அமர்வு செய்யப்பட்டு இப்பணி மேற்கொள்ளப்படும்.

நகர நிலவரித்திட்டப் பணிகளில், 2011 முதல் டிசம்பர் 2019 வரை கீழ்க்கண்டவாறு 15,18,118 மனைப் பட்டாக்கள் வழங்கப்பட்டுள்ளன:-

| வ.எண் | வருடம் | வழங்கப்பட்ட பட்டாக்களின் எண்ணிக்கை |
|---|---|---|
| 1 | 2011-2012 | 23,402 |
| 2 | 2012-2013 | 23,291 |
| 3 | 2013-2014 | 1,69,749 |
| 4 | 2014-2015 | 2,26,903 |
| 5 | 2015-2016 | 2,72,168 |
| 6 | 2016-2017 | 1,85,955 |
| 7 | 2017-2018 | 2,42,604 |
| 8 | 2018-2019 | 2,81,246 |
| 9 | 2019-2020 (ஏப்ரல் 2019 முதல் டிசம்பர் 2019 வரை) | 92,800 |
| | மொத்தம் | 15,18,118 |

**8.9.2 வக்ஃப் சொத்து கணக்கெடுப்புப் பணி**

வக்ஃப் சட்டம் 1995 பிரிவு 4.ன்படி, மாநிலம் முழுவதும் வக்ஃப் சொத்து கணக்கெடுப்பு பணி தொடங்கப்பட்டு, நடைபெற்று வருகிறது. வக்ஃப் சொத்து கணக்கெடுப்பு ஆணையாளராக நிலஅளவை மற்றும் நிலவரித்திட்ட இயக்குநரும் அவரது கட்டுப்பாட்டில், வக்ஃப் கூடுதல் ஆணையர்களாக மாவட்ட வருவாய் அலுவலர்களும் நியமிக்கப்பட்டுள்ளனர். இப்பணி இதுவரை 27 மாவட்டங்களில் முடிக்கப்பட்டு, மீதமுள்ள மாவட்டங்களில் நடைபெற்று வருகிறது.

## 9. முடிவுரை

வருவாய்த்துறை தற்பொழுது மிகவும் நவீனமயமாக்கப்பட்டுள்ளது. பொதுமக்களின் நலன்சார்ந்த இவ்வரசாங்கத்தில் சீராக்கம் மட்டும் நோக்கமின்றி, செயலாக்கம் கொண்டதாகவும் தனது சேவையில் இத்துறை மேம்பட்டுள்ளது. திறமை, பொறுப்பு, வெளிப்படைத்தன்மை மற்றும் மக்கள் நலன் ஆகியவற்றை கொள்கையாகக்கொண்டு இத்துறை செயல்பட்டுவருகிறது. நில மேலாண்மை நோக்குடன் தீவிர முயற்சியின் பலனாக இத்துறையில் இணையவழி பட்டா மாற்றம், இ-அடங்கல் மற்றும் நில ஆவணங்கள் கணினிமயமாக்கம் ஆகிய மகத்தான முன்னேற்றங்கள் செய்யப்பட்டுள்ளது. தகவல் தொழில்நுட்பத்தின் அடிப்படையில் வருவாய் சான்றிதழ்கள், நில ஆவணங்கள் வழங்குதல் மற்றும் சமூக பாதுகாப்புத் திட்டங்கள் செயல்படுத்தப்பட்டுவருகிறது. பேரிடர் காலங்களில் பொதுமக்களுக்கு உரிய விழிப்புணர்வை ஏற்படுத்தி மக்களுக்கு முன்னெச்சரிக்கை நடவடிக்கைகளை அறிவுறுத்தி பாதிக்கப்படக்கூடிய பகுதிகளிலிருந்து மக்களை மீட்டும் , நிவாரணப்பணி மற்றும் மறுசீரமைப்பு பணிகளை அறிவியல் பூர்வமாகவும் மனிதநேயத்துடனும் அணுகுவதால் தமிழகம் முன்னோடி மாநிலமாக விளங்குகிறது. மேலும் பயிற்சிகள், மாதிரி நிகழ்வுகள், தமிழ்நாடு ஸ்மார்ட் செயலி ஆகியவை இத்துறையின் சாதனைக்கு சான்றுகளாக விளங்குகின்றன.

வருவாய் நிருவாகம் மற்றும் பேரிடர் மேலாண்மை, நில நிருவாகம், நிலச் சீர்திருத்தம், நகர்புற நில உச்ச வரம்பு மற்றும் நகர்புற நிலவரி, நில அளவை மற்றும் நிலவரித் திட்டத்தினை திறமையுடன் செயல்படுத்தி சேவைமிக்கத் துறையாக வருவாய்த்துறை திகழ்கிறது.

**ஆர்.பி. உதயகுமார்**
**வருவாய் மற்றும் பேரிடர் மேலாண்மை**
**மற்றும் தகவல் தொழில்நுட்பவியல் துறை**